

# she is the bearer of tradition...

IN

# CENTURY SAREES

THE
**CENTURY**
SPG. & MFG. CO., LTD.
CENTURY BHAVAN,
WORLI, BOMBAY-25 DD.

*Century — For 100% cotton textiles*

*Adroit/CM/ 43*


In 9 years 65 million Indians learnt that
mother tongue is more than words
they picked up from
their mothers.



# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது, ஆடி 9 ஜூலை 25, 1971



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப்பெயர்களே சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 45-00 | ரூ. 22-50 |

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 30



இதழ் 52

# தமிழ் அர்ச்சனை

தமிழ் நாட்டில் உள்ள ஹிந்து மத தேவாலயங்களில் தமிழில் அர்ச்சனை செய்வது பற்றிப் பெருத்த பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. தி. மு. க.வின் அரசியல் குயுக்திகளில் இதுவும் ஒன்று.

பக்தர்கள் தங்கள் இதயத்தில் உதயமாகும் மொழியில் பிரார்த்தனையும் பக்தியும் செலுத்த வேண்டும் என்பது நியாயம். அதை நான் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்கிறேன். ஆயினும் ஆலய வழிபாடு சம்பந்தமாகக் குறுக்கே புகுவதற்குச் சர்க்காருக்கு அதிகாரம் ஏதுமில்லை. ஹிந்துமத ஸ்தாபன போர்டு என்பது ஹிந்துக்கள் ஒன்றுகூடித் தேர்ந்தெடுத்த அமைப்பு அல்ல. அது ஒரு சர்க்கார் இலாகாதான். சர்க்கார் நியமிக்கிற தலைவர்தான் இந்த போர்டின் பிரதான அதிகாரி. கோயில்களின் நிருவாகம் சரியாக நடக்கிறதா - குறிப்பாக, கோயில்களின் சொத்துக்கள் முறைப்படி பரிபாலிக்கப் படுகின்றனவா - என்று மேற்பார்வை செய்வது மட்டுமே சட்டப்படி இந்த போர்டுக்கு வழங்கப்பட்டுள்ள பொறுப்பு. இது வெகு முக்கியமான சீர்திருத்தம். ஆனாலும் ஆலயங்களின் வழிபாட்டு முறைகளை மாற்றி உத்தரவு பிறப்பிக்க இந்த போர்டுக்குச் சட்டப்படி அதிகாரமில்லை. இல்லாத அதிகாரத்தை ஒரு சர்க்கார் இலாகா செலுத்த விட்டோமானால் அதிலிருந்து வெகு சீக்கிரம் நியாயமற்ற விளைவுகள் பெருகும். இதற்கு இடந் தரலாகாது.

சட்டப் பிரச்னை ஒருபுறமிருக்கட்டும். ஹிந்துமத தேவாலயங்கள் நம்முடைய தேசிய வாழ்வில் பெற்றுள்ள ஒரு முக்கியமான ஸ்தானத்தை மறக்கலாகாது. தேசம் முழுவதையும் ஒன்றுபடுத்துவதில் இந்த ஆலயங்களின் சக்தி மகத்தானது. ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்கள் தமிழ்நாட்டுக் கோயில்கள் ஒவ்வொன்றையும் அகில இந்தியாவுக்கும் உரிய வழிபாட்டு நிலையமாகவே கருதுகிறார்கள். ஆனபடியாலேயே சம்ஸ்கிருத மொழியில் மந்திரங்கள் ஓதப்பட்டு பூஜாக்கிரமங்கள் நடைபெறுகின்றன. சம்பிரதாயபூர்வமாக வந்துள்ள சம்ஸ்கிருத வழிபாட்டு முறைகளைப் பாதிக்காத முறையில் இப்பொழுதும் ஆலயங்களில் தமிழ்ப் பாசுரங்களும் தேவாரப் பதிகங்களும் தாராளமாக ஓதப்பட்டு வருகின்றன. பண்டைய சம்ஸ்கிருத மந்திரங்கள் ஓதப்படுவதை விலக்கிவிடாமலே வழிபாட்டு முறையில் தமிழ் ஸ்துதிகளுக்கு இடம் தருவதுதான் உசிதம். இந்தியா முழுவதற்கும் உரிமையான வடமொழி மந்திரங்களை விட்டுவிடலாகாது.

*(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது.)*

# காங்கிரஸின் கடமை

இருபதாண்டு காலமாக மூடிக் கிடந்த கள்ளு, சாராயக் கடைகளை மறுபடியும் திறக்க வேண்டும் என்று தமிழக அரசாங்கம் செய்துள்ள முடிவை எதிர்த்துக் கிளர்ச்சி பலமாக உருவாகியிருக்கிறது. இந்த எதிர்ப்புக் கிளர்ச்சிக்கு திரு காமராஜ், திரு கக்கன், ஸ்தாபன காங்கிரஸ் தலைவர்கள், இன்னும் மற்றப் பெரியோர்கள் பலரும் பூரண ஆதரவு தெரிவித்திருக்கிறார்கள். ஆயினும், இதனை ஓர் அரசியல் கட்சியின் போராட்டமாகச் செய்யாமல், சர்வோதய சங்கத்தினர் தலைமை வகித்து நடத்துவது நலம் என்று திரு காமராஜ் நினைக்கிறார்.

ஓர் அரசாங்கம் எடுக்கிற நடவடிக்கைகள் 'அரசியல்' ரீதியில் தவறாக இருப்பது போல் அதனுடன் தரும ரீதியில் தவறாகவும் இருக்கலாம். அரசியல் காரியங்கள் யாவற்றிலும் எதிர்க்கட்சியில் உள்ள அரசியல் கட்சிகள் நியாயத்தையும் தருமத்தையும் இரண்டையும் கருதி ஈடுபட வேண்டியது அவசியம். மது விலக்கை ரத்து செய்வது தரும – அதருமம் குறித்த விஷயம் மட்டுமல்ல. இது சட்டப்படி சர்க்காரால் செய்யப்படுகிற ஒரு காரியமாகும். எனவே, இது ஒரு தவறான முடிவு என்று கருதும் எதிர்க் கட்சிகள் இதை எல்லா விதங்களிலும் எதிர்க்கப் பூரண உரிமை உண்டு; அவ்வாறு செய்வது கடமையும் ஆகும். தர்ம ரீதியில் மட்டுமின்றி, அரசியல் ரீதியிலும் தவறான செய்கையைப் பகிரங்கமாக எதிர்ப்பதில் எந்த அரசியல் கட்சியும் தயக்கமோ கூச்சமோ கொள்ள வேண்டியதே இல்லை.

தி. மு. கழகத்தினர் கட்சிக் கட்டுப்பாட்டின் கீழ் ஒட்டுமொத்தமாக இச் செய்கையை ஆதரித்தாலும், நாட்டில் அனைவருமே இதனை ஆட்சேபிக்கத்தான் செய்கின்றனர். சர்க்காருக்குக் கொஞ்சம் வருமானம் வரும் என்பதையே வைத்துக் கொண்டு முடிவு செய்கிற விஷயமல்ல இது. வருமான விஷயத்திலும்கூட ஸ்ரீ தேக்சந்த் கூறியது கவனத்துக்குரியது. பதினாயிரக் கணக்கான கள்ளு சாராயக் கடைகளைத் திறந்து வைப்பதால் போலீசார் கவனிக்க வேண்டிய குற்றங்கள் அதிகமாகும்; இந்த இனத்தில் சர்க்காரின் செலவும் அதிகமாகும் என்று ஸ்ரீ தேக்சந்த் எடுத்துக் காட்டியுள்ளார். ஏழை மனிதனின் குடும்பத்துக்கு மதுபானம் விளைவிக்கும் கெடுதல்களை அனைவரும் அறிவர். இவ்

மதுவிலக்கை ரத்து செய்யும் தமிழக அரசாங்கத்தின் முடிவினைத் திட்டத்தை எதிர்த்து ஜூலை 15ந் தேதியன்று தமிழகமெங்கும் சர்வோதயச் சங்கத்தின் ஆதரவில் ஆயிரம் தொண்டர்கள் பன்னிரண்டு மணி நேரம் உபவாசம் இருந்தனர். சென்னை கலெக்டர் அலுவலகத்தின் முன் நடந்த



வாறு லட்சக்கணக்கான ஏழைகளுக்குப் புதிய இன்னலை விளைவிப்பதற்காகவே பெரிதாக ஓர் இலாகாவை ஆரம்பிப்பது நல்லாட்சியாகாது. அது சோஷலிஸ ஆட்சி ஆகாது என்பதைச் சொல்லவே வேண்டியதில்லை. ஒரு சிலர் சட்டத்தை மீறி அசுத்தமான சரக்கைக் குடிக்கிறார்கள் என்று காரணம் காட்டி லட்சக்கணக்கானமக்கள் தமது சொற்ப வருமானத்தை இழக்கவும், தங்களது மூளையைக் கெடுத்துக் கொள்ளவும், ''வா வா'' என்று அழைக்கிற ஆயிரக் கணக்கான கள்ளுக் கடைகளைத் திறப்பது மகத்தான அநீதியாகும். மதுவிலக்குச் சட்டத்தை ரத்து செய்வதை எதிர்த்து நடத்தும் போராட்டத்தில் பழைய காங்கிரஸ்காரர்கள் பங்கு கொள்வதற்குத் தலைவர் திரு கக்கன் 'அநுமதி' தந்திருக்கிறார். அந்த அநுமதியைக் கட்டளையாகவே வைத்துக் கொள்ள வேண்டும். வெளிப்படையாக, தீவிரமாகத் தமிழ்நாட்டின் பழைய காங்கிரஸ் கட்சி எதிர்ப்பில் கலந்து கொள்ள வேண்டும். இதை காங்கிரஸ் அபிமானிகள் அனைவரும் மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

முக்கியத்வம் வாய்ந்த நண்பர்களில் பலர் கூறியதன் பேரில் பங்களா தேச விஷயமாக நான் ஆழ்ந்த சிந்தனை செய்து பார்க்கிறேன். எனக்கு எவ்வித பட்சபாத எண்ணமும் இல்லை. அப்படி ஏதாவது பட்சம் இருக்குமாயின் அது பங்களா தேச விடுதலைப் போர் வீரர்களுக்குச் சாதகமாகவே இருக்கும். எவ்வளவு தீர்க்காலோசனை செய்து பார்த்த போதிலும் இப்போது இந்தியா பங்களா தேசத்தைத் தனி அரசாக அங்கீகரிக்கலாகாது என்ற முடிவுக்கே வருகிறேன். இதற்காக பாகிஸ்தானுடன் இந்தியா போரில் இறங்க வேண்டும் என்று சொல்பவர்கள் அதன் விளைவுகளை உணராமல் பொறுப்பின்றி யோசனை கூறுகிறார்கள் என்பதே என் கருத்து. உள்நாட்டு விஷயங்களில் பொதுமக்களின் உணர்ச்சிக்குப் பெரிய பங்கு உண்டு என்பது வாஸ்தவம். ஆனால் வெளிநாட்டு விவகாரங்களில் மக்களின் உணர்ச்சி தகுந்த வழிகாட்டியாகாது. ஐ. நாவும், வல்லரசுகளும் பங்களா தேசத்தை அங்கீகரிக்காமல் இருக்கையில், நாம் அங்கீகாரம் தருவது நேராகப் பாகிஸ்தானுடன் போர் தொடுப்பதாகவே ஆகும். இப்படிப் பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையே போர் ஏற்பட்டால், உலக வல்லரசுகளின் மனப் போக்கு இப்போதைக் காட்டிலும் வலுவாக பாகிஸ்தானுக்குச் சாதகமாகி விடும்.

பங்களா தேசத்தை அங்கீகரிக்க வேண்டும் எனக் கூறுபவர்களிடம் எனக்கு மிகுந்த மதிப்புணர்ச்சி உண்டு. ஆயினும், இந்த நட

உண்ணாவிரதத்தில் அகில இந்திய மதுவிலக்குக் குழுத் தலைவர் டாக்டர் ஸ்ரீமதி சுசீலா நய்யார் பங்கு கொண்டார். சென்னையில் உண்ணாவிரதமிருந்த 85 பேரில் 36 பேர் மகளிர். ராஜ்யமெங்கும் நூற்பு யக்ஞத்துடனும், பஜனையுடனும் புண்ணியச் சடங்காக நடந்தது இந்த எதிர்ப்புப் போராட்டம்.



வடிக்கை நம் பொருளாதாரத்தை நாசமாக்கும், உலக அபிப்பிராயத்தை மேலும் நமக்குப் பாதகமாகத் திரித்துவிடும் என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்குமிடையே போர் மூண்டால் பாகிஸ்தானுக்கு மேற்கத்திய வல்லரசுகளின் உதவி அதிகமாகும். அதே சமயத்தில் அங்கிருந்து இந்தியாவுக்கு வரும் அகதிகளும் பெருகுவர். இப்போதுள்ள அகதிப் பிரச்னையை நம்மால் தாங்க முடியவில்லை என்பதற்காகப் போரில் இறங்கினுல் அப்போது அகதிப் பிரச்னை இதைவிடக் கடுமையாக இருக்கும். பிரதமர் உணர்ச்சி வலையில் சிக்காமல் தமது கருத்தில் உறுதியாக நிற்பார் என்று நம்புகிறேன்.

நாம் பங்களா தேசத்தை அங்கீகரிப்பதால் அமெரிக்காவின் போக்குத் திருந்திவிடாது. எனவே நாம் அமெரிக்காவையும், மேற்கு வல்லரசுகளையும் நமக்குச் சாதகமாகத் திருப்பவே முழு முயற்சியும் எடுக்க வேண்டும். இந்த வல்லரசுகள் இந்தியாவிடம் காட்டுவதை விடப் பாகிஸ்தானிடம் அதிக விசுவாசம் காட்டுவதை நான் அறிவேன். இருப்பினும் அவை இந்தியாவின் நட்பை அடியோடு இழக்க விரும்ப மாட்டா. எனவே அமெரிக்காவையும் பிரிட்டனையும் எப்படியேனும் நிர்ப்பந்தித்துப் பாகிஸ்தானைக் கட்டுப்படுத்துவதே நாம் செய்ய வேண்டியது.

★

'தமிழ் நாட்டு அரசாங்கம் மது உற்பத்தி செய்யப் போவதில்லை; மது விற்கப் போவதில்லை' என்று அரசாங்கத்தின் சார்பில் கூறப்பட்டிருக்கிறது. இது முற்றிலும் தவறான கூற்று. சகல அம்சங்களிலும் சர்க்காரின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுத்தான் லைசென்சு தந்து மது உற்பத்தியும் விநியோகமும் நடக்கவிருக்கின்றன. இந்த உண்மையை உணர்ந்தால் சர்க்காரின் கூற்றுக்குச் சிறிதும் பொருளில்லை எனத் தெரியும்.

★

தமிழ் போதனு மொழி விஷயமாக மாணவர்மீது நிர்ப்பந்தம் எதுவுமில்லை என்று சர்க்காரின் சார்பில் கூறப்பட்டாலும் அரசாங்கக் கல்லூரிகளில் பல மாணவர்கள் தமிழை இஷ்டபூர்வமாக ஏற்காமல் ஆங்கில போதனை இல்லாதது காரணமாகவே மேற்கொள்ள வேண்டியிருப்பதாகத் தெரிகிறது. 'ஹிந்து'ப் பத்திரிகைத் தலையங்கம் இந்த நிலைமையைத் தெளிவாக விளக்குகிறது. யதார்த்த உண்மையைத் திரிக்காமல் இவ்விஷயத்தைப் பார்க்க வேண்டும். ஆங்கிலத்தைப் போதனை மொழியாக ஏற்கும்போதுதான், மாணவனுக்கு அந்த மொழியை லாகவமாகக் கையாளப் போதிய தகுதி கிடைக்கிறது. தமிழைப் போதனை மொழியாக வைத்துவிட்டு, ஆங்கில இலக்கணத்தைத் தனிப் பாடமாகப் படிப்பதால் இத்தகைய மொழி அறிவு உண்டாவதில்லை. இந்தியாவில் எந்தப் பகுதியிலும் உத்தியோகம் பெறவும், அகில இந்தியப் பிரஜையாக இருக்கவும் ஆங்கில மொழியறிவே உதவி புரியும். ஆங்கில மொழியறிவு இல்லாவிடில் தமிழகத்தின் படிப்பாளிகள் குறுகியதொரு பிரதேசத்தில் சிறைக் கைதி போல் இருக்க வேண்டியதுதான். லக்ஷ்மணஸ்வாமி முதலியார் கமிட்டியின் சிபாரிசுகளைத் தமிழக அரசாங்கம் எழுத்திலும் சரி, கருத்திலும் சரி, பூரண விசுவாசத்துடன் அமல் செய்ய வேண்டும்.



## மகாதேவன் மறைவு

லஞ்ச ஒழிப்பு டைரக்டராகப் பதவி ஏற்க விருந்த முன்னுள் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸ்ரீ ஆர். எம். மகாதேவனின் திடீர் மரணம் அனைவருக்கும் அதிர்ச்சி தந்துள்ளது. பெங்களூரைச் சேர்ந்த ஸ்ரீ மகாதேவன், நீண்ட நெடுங்காலமாகப் பழைய சென்னை மாகாணத்திலும், பிற்பாடு தமிழ் நாட்டிலும் போலீஸ் துறையில் பல உயர் பதவிகளைச் சிறப்புடன் வகித்தவர். நேர்மைக்கும், நிர்வாகத் திறனுக்கும், கட்டுப்பாட்டுக்கும் பெயர் எடுத்தவர். கொந்தளிப்பு நிறைந்த தேர்தல் சமயத்தில் அவர் எச்சரிக்கையுடன் எடுத்த நடவடிக்கைகள் குறிப்பாகப் பாராட்டுக்குரியன.

ஸ்ரீ மகாதேவன் விளையாட்டுத் துறையில் விசேஷ ஈடுபாடு கொண்டவர். குதிரைச் சவாரியில் நிபுணர். அவரது மறைவில் ஒரு நல்ல அதிகாரியை இழந்து விட்டோம். அவரது குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அநுதாபங்கள்.

# ஆயிரத்தைக் கண்டவர்

# ஒளிந்த ஒளி மீண்டது

அண்ணல் காந்தி அடிகளும், அன்னை கஸ்தூரி பாவும் சென்னை வந்து, எஸ். சீநிவாச அய்யங்கார் இல்லத்தில் தங்கியிருந்த சமயம். இருவருக்கும் கண் நோய் ஏற்பட்டு விட்டது. சீநிவாச அய்யங்காரால் வரவழைக்கப்பட்ட கண் டாக்டர் காந்தியடிகளுக்கும், கஸ்தூரி பாவுக்கும் சிகிச்சைசெய்து, குணப்படுத்தினர்.

அண்ணலுக்கும், அன்னைக்கும் சிகிச்சை செய்யும் மகத்தான வாய்ப்பைப் பெற்ற, அந்தக் கண் டாக்டர் யார் தெரியுமா?

ஸ்ரீ டி. எஸ். துரைசாமிதான் !

இன்னும் ஐந்து வருடங்களானல், இவரது 'கண் வைத்திய அநுபவம்' அரை நூற்றாண்டு வயதை அடைந்துவிடும் !

எஸ். சீநிவாச அய்யங்கார், மகாகனம் சீநிவாச சாஸ்திரியார், சத்தியமூர்த்தி, — ரா. கிருஷ்ணமூர்த்தி, ('கல்கி'), எஸ். எஸ். வாசன் ஆகியோருக்குக் கண் வைத்தியம் செய்திருக்கிறார்.

ஏன்? ராஜாஜி அவர்களுக்கு 1936ல் கண் வைத்தியம் செய்தவரும் டாக்டர் துரைசாமியே! இன்றைய ராஷ்டிரபதி குடும்பத்தாரின் கண் டாக்டர்கூட இவர்தான் !

''1953ல் தஞ்சை ஜில்லாவில் உள்ள ஒரு பதினைந்து வயதுப் பெண்ணுக்குத் திடீரென்று கண் பார்வை போய்விட்டது. கொஞ்ச காலம் கழித்துப் பல டாக்டர்களிடம் போய்ப் பார்த்தும் பலனில்லாமல், வைத்தீசுவரன் கோவிலில் முத்துக்குமரன் சந்நிதியில் நிற்கும்போது திடீரென்று கண் பார்வை 'பெற்று விட்டார்... இது உண்மைச் சம்பவம்....'' என்று கூறி, புகைப்படத்துடன் கூடிய கட்டுரை வெளியான 1953 செப்டம்பர் 'மஞ்சரி' இதழைக் காண்பித்தேன்.



டாக்டர் அதைப் படித்துப் பார்த்தார். அவரும் இதைப் போன்ற சம்பவம், மயிலாப்பூரிலுள்ள முண்டகக்கண்ணி அம்மன் கோவிலில் நடந்ததாகக் கேள்விப்பட்டிருந்தார்.

''திடீரென்று கண் பார்வை பெற்ற யாரையும் நான் சந்தித்ததில்லை. அதனல் இதற்கு விஞ்ஞான ரீதியாக என்னல் பதில் சொல்ல முடியாது. தெய்வ சக்தியினல் எத்தனையோ அதிசயங்கள் நடக்கின்றன. அப்படித்தான் இந்தச் சம்பவத்தையும் நம்ப வேண்டும்!'' என்றார்.



''டாக்டர்! இதோ மற்றொரு செய்தி. பிறவிக் குருடான இவருக்கு அமெரிக்கக் கண் டாக்டர் காக்கமைஸ் அறுவைச் சிகிச்சை செய்து பார்வை அளித்தார். இதற்கு அமெரிக்காவில் இறந்த இருவர் தானமாகச் செய்த கண் விழிகள் கொண்டு வந்து பொருத்தப்பட்டன. இதைப்போலக் குருடராகப் பிறந்தவர்களுக்கெல்லாம் மீண்டும் கண் பார்வை தர முடியுமா?'' (இது 'அமெரிக்கன் ரிப்போர்ட்டர்' கட்டுரை—1960)

''தர முடியும். ஆனல் அப்படிக் குருடர்களாகப் பிறந்தவர்களுக்கு முக்கியமான கண் நரம்பு (Optic Nerve) கெட்டுப் போகாமல் இருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் இறந்தவர்கள் தானமாகத் தந்த விழிகளைப் பொருத்திப் பார்வை தர முடியும்!''

மேல்நாடுகளில் மற்றவர்களுக்குப் பார்வை கொடுக்கப் பயன்படட்டுமென்று மக்கள் தங்கள் கண்களைக் 'கண் சேமிப்பு நிலைய'த்துக்கு எழுதி வைக்கிறார்கள். அவர்கள் இறந்த பின் விழிகளைக் கண் சேமிப்பு நிலையம் எடுத்துக் கொள்ளும்.

இந்தியாவிலும் இந்த இயக்கம் பெருவாரியாகப் பரவ வேண்டுமென்று டாக்டர் துரைசாமி விருப்பம் தெரிவித்தார்.

இவரிடம் கண் ஆபரேஷன் செய்து கொண்டவர்களின் எண்ணிக்கை ஐயாயிரத்துக்கு மேல் இருக்கும்!

''நாடகத் தந்தை பம்மல் சம்பந்த முதலியார் எழுபத்தைந்து வயது வரை கண்ணாடி போட்டுக் கொண்டதில்லையாம். எந்தப் பார்வைக் கோளாறும் வந்ததில்லை என்று தம்மைப் பற்றிய கட்டுரையில் எழுதி யிருக்கிறாரே?'' என்றேன்.

''திரு சம்பந்த முதலியாரை நன்கு தெரியும். அவருக்கு நல்ல பார்வை இருந்தது. கண்ணை நன்கு பாதுகாத்து வந்தார். கடைசிக் காலத்தில்தான் 'காடராக்ட்' வந்தது. அதற்கு ஆபரேஷன் செய்து கொள்ள மறுத்து விட்டார்.''

சூரிய நமஸ்காரம், தெரிந்து, முறையோடு செய்தால் கண்ணுக்கு நோய் வராது என்று கூறும் டாக்டர் இன்னொரு பொதுவான கருத்தையும் வெளியிட்டார்: ''பஸ், லாரி, இராட்டைசல் வாகனங்களின் புகையினல் கண் நோய் வரக் கூடும். இந்தப் புகையினல் மக்கள் பாதிக்கப்படாதபடி அதிகாரிகள் நடவடிக்கை எடுக்க வேண்டும். சாலை விபத்துக்களை வெகுவாகக் குறைக்க, வாகனம் ஓட்டும் டிரைவர்களுக்குக் குறிப்பிட்ட காலங்களில் கண் பரிசோதனை செய்ய வேண்டும். முதல் முறை லைசென்ஸ் பெறும்போது மட்டும் கண் பரிசோதனை பெற்றால் போதாது. இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறையோ மூன்றுண்டுகளுக்கு ஒரு முறையோ கண் பரிசோதனை செய்த பிறகே லைசென்ஸைப் புதுப்பிக்க வேண்டும்.''

பேட்டி: ஏ. சுவாமிநாதன்



விட்டமின்கள் மற்றும்
தாதுப் பொருட்களுக்கான
'உணர முடியாப் பசி' உங்களுக்கு
சோர்வும் எரிச்சலும் ஊட்டுகிறது...

# வாட்டர்பரீஸ் விட்டமின் டானிக்

## மட்டுமே 12 இன்றியமையாத சத்துக்களை அளிக்கிறது

## அந்த 'உணரமுடியாப் பசி'யைத் தீர்ப்பதற்கு

உங்கள் உடலில் விட்டமின்கள், தாதுக்கள் மற்றும் முக்கிய சத்துக்களுக்கான பசி நிரந்தரமாக இருக்கிறது. இந்த 'உணர முடியாப் பசி'யின் விளைவு— சோர்வு, எரிச்சல், இருப்புக் கொள்ளாமை, பசியின்மை, ஜீரண சக்தி குறைவு.

எல்லா சத்துக்களும் அடங்கிய வாட்டர் பரீஸ் விட்டமின் டானிக் சாப்பிட்டு 'உணர முடியாப் பசி'யைப் போக்குங்கள். அதில் 12 முக்கிய சத்துக்கள் உள்ளன: வளர்ச்சிக்கும், வலிமைக்கும் விட்டமின்கள்; இரத்த விருத்திக்கு இரும்புச்சத்து; நல்ல பசியெடுக்க எல்லாப் பொருட்களும்; நரம்புகளுக்கு உரமூட்ட பாஸ்பேட்டுக்கள்.

சிந்தித்துப் பாருங்கள்; உங்களுக்கு அல்லது உங்கள் குடும்பத்தில் யாரேனும் ஒருவருக்கு வாட்டர் பரீஸ் விட்டமின் டானிக் தேவை இன்றே!

இரண்டு அளவுகளில் கிடைக்கிறது:
250 ml 470 ml.



# கவிதை பிறந்த கதை

## குழலில் துடிக்கும் குரலெதுவோ?

''முப்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன். பங்குனி நன்பகல். வெய்யிலாவது வெய்யில். வெய்யில் குழம்பிய தெரு முனையைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது மேற்குத் தெருவிலிருந்து என் தெருவில் நுழைந்தான் வயதான பாம்புப் பிடாரன் ஒருவன். தலையிலே முண்டாசு, இடையிலே கோவணம், கக்கத்திலே பாம்புப் பெட்டி, வலது கையிலே மகுடி. என்னைப் பார்த்ததும், விரைந்து வந்து, அந்தக் கிழவன் என் வீட்டு வாசலில் தன் கடையை விரித்தான். பெட்டியைத் திறந்து பாம்பை எடுத்து வெய்யிலில் எறிந்தான். கீழ குந்திய வண்ணம், மகுடியிலே விசித்திரமான சந்தங்களின் நுண்ணிய ஒலிகளை எழுப்பினான். பாம்பு ஆடவில்லை. தரை வெப்பம் தாங்காமல், என் வீட்டுக்கு முன்னால் இருந்த சாண் நிழலில் ஒண்டியது. மேலே யிருந்து பார்க்கின்ற 'எசமானு'க்குப் பாம்பு தெரிய வேண்டுமே? அதற்காக, பாம்பை எடுத்து எடுத்து, தெரு அனலில் எறிந்தான் பிடாரன். அவன் மகுடியில் ஒலி மாயங்கள் விம்மின. என் நெஞ்சை ஏதோ பிசைந்தது. பாம்பின் ஊமைத் துயரம் என்னை என்னவோ செய்தது.

'' ஓர் அணுவைப் பெற்றுக் கொண்டு பிடாரன் போனான். ஆனால் என் நெஞ்சு கனத்ததே. அந்தப் பாரம் இறங்கவில்லை; பிடாரனுடைய மகுடி விளைத்த மயக்கம், - அதுவும் தணியவில்லை. இந்த மகுடி என்ன சொல்கிறது என்ற வினா என்னை உறுத்தியது. மெல்லப் பாடல் ஒன்று தலைதூக்கியது.

'பாம்பும் பிடாரன்
ஊதிய குழலில்
பதைத்துத் துடிக்கும்
குரலெதுவோ ?
'' சாம்பற் காடும்
தாழை மடலும்
சண்பக மணமும்
மறந்(து) இசையில்
கூம்பிய பேதமை
கூட்டிய நெறியிற்
குறுகிக் கூடத்தில்
அடைந்து மனம்
தேம்பி மயங்கும்
பாம்பின் குரலா,
திகைத்திது காணும்
என் குரலா ?'

''இப்படி அவ்வப்போது தோன்றிய மனச் சலனங்களே என் பாடல்களுக்குத் தாயும் தந்தையும்'' என்று கூறும் கவிஞர், மற்றொரு சம்பவத்தையும் மிக அழகாக வர்ணிக்கிறார். ''ஒரு நாள், பல ஆண்டுகளுக்கு முன் சேரன்மாதேவிக்கு அருகில், தாமிரவருணிக் கரையில் பரந்து கிடந்த நெல் வயற் பசுமையின் மேலே, வான் நீலத்தையும் வயல் மரகதத்தையும் இணைத்த மங்கல நாண் போல், வெள்ளைப் பறவை ஒன்று சில்லென்று ஊசலாடிச் சென்றது. இது போதாதா கவிதை பிறக்க?

'வெள்ளைப் பறவை ஒன்று
துள்ளிச் சென்றது -- தூளி
வெண்மை படர்ந்த
நீலவான வெளியில்.
தென்னைத் தெளிந்திருண்ட
மடலிலுள்ளோ -- ஒரு
தெய்வக் கனற் பிழம்பு
பாய்ந்த தென்னவே.
மீனும் கதிரும் எழில்
வெண்ணிலவுமே -- ஆன
மின்னும் இழைகள்
பின்னிச்செய்த நாணேறி
வான வளைவு காணும்
மாய வில்லினை - வாங்கி
வையம் படைத்த
வில்லினெய்த பாணமோ?'

கவிஞர் முதன் முதலில் கவிதை பாடியது, எப்போது? நாற்பத்து நான்கு ஆண்டுகளுக்குமுன் காவிரி மணலில், நாணல் சூழ்ந்த திட்டு ஒன்றில் கவிஞர் உட்கார்ந்திருந்தார். மேற்கே அந்தியின் இரத்த வெள்ளம். சுற்றிலும் காவிரி வெள்ளமும், நாணற்காடும் இழைத்த முனைகளும், பெருமூச்சம். அந்த வேளையில், அழகும் உயிரும் கொஞ்சிய அந்த நேரத்தில், ஏனோ சாவைப் பற்றி எண்ணினார் கவிஞர். அந்த எண்ணம் ஒரு பாடலாக அரும்பியது. அப்போது வெளிவந்து கொண்டிருந்த 'கலா நிலையம்' என்ற பத்திரிகைக்கு அனுப்பினார். ''அது வெளிவந்ததாக ஞாபகம். அந்தப் பாட்டு இப்போது கைவசம் இல்லை. சாவைப் பற்றிய அந்தப் பாட்டு செத்துப் போனது சரிதானே ? நாணற் புதரின் நடுவிலே என் முதற் கவிதை தோன்றியதால், 'நாணல்' என்ற புனைபெயரைச் சூட்டிக் கொண்டேன்.

''சாவைப் பற்றி முதலில் எழுதினேன். அப்போது சாவைப் பற்றி ஒன்றும் தெரியாது. பிறகு வாழ்வைப் பற்றி எழுத முயன்றேன். அதைப் பற்றியாவது துல்லியமாகத் தெரியுமா? அதுவும் இல்லை. ஆனால் இந்த மயக்கில்தானே, வானும், மண்ணும், வாழ்வும், சாவும் மனித உள்ளமும் பின்னுகிற இந்த மருமத்தில்தானே—அது எது, திகைப்பா, வியப்பா,





பிரமிப்பா, ஆசையா, அவலமா, அழகா, சத்தியமா, யாரால் சொல்ல முடியும் ? அது எதுவாய் இருந்தாலும், அந்த ஒன்றில்தானே—கவிதை பிறக்கிறது?'' என்கிறார் கவிஞர் சீநிவாச ராகவன்.

பேட்டி: **பி. வி. கிரி**

மூடியிருந்த கண்ணாடி ஜன்னலின் ஊடே நோக்கினால் புகை மண்டலம் போன்றதொரு தோற்றத்தை உண்டாக்கிக் கொண்டிருந்தது பனிக் காற்று. இரவு நேரம்.

அழைப்பு மணி கிணுகிணுத்தது. முழுக்கை கம்பளி ஸ்வெட்டரை நீக்கிக் கைக் கடிகாரத்தைப் பார்த்தாள் நிர்மலா. இரு முள்களும் பன்னிரண்டில் உறவாடிக் கொண்டிருந்தன. வாசல் பக்கம் அவளுடைய நடை விரைந்தது. தாங்க முடியாத உபாதைக்குட்பட்ட ஒரு குழந்தை தன் குரல் மூலமே எல்லாருக்கும் அதைத் தெரிவித்துவிட வேண்டுமென்ற துடிப்புடனிருப்பது போல் அடித் தொண்டையிலிருந்து கத்திக் கொண்டும், கைகால்களை உதைத்துக் கொண்டும் வில்லாக வளைந்து கொண்டுமிருந்தது, அவனுடைய கையிலிருந்தபடி. கம்பிக் கதவின் வழியாக எல்லாவற்றையும் ஒரு நொடிக்குள் கவனித்த நிர்மலா தாளை விலக்கிக் கதவைத் திறந்தாள். திறந்த வேகத்திலேயே தன் மனக் கதவை மூடிக் கொள்ளப் பெரிதும் பிரயத்தனம் எடுத்துக் கொண்டாள் என்பது அவளுடைய நிதானம் இல்லாத செய்கையின் மூலம் தெரிந்தது.



# சபலம்

ஸி. ஆர். ராஜம்மா

''குழந்தை ரொம்பவும் அழுகிறான். விடியும்வரை தாங்க முடியாது போலிருக்கிறது. அதனால்தான் உங்களுக்குத் தொந்தரவு தருவதற்காக இந்த இரவில்...'' அவனுடைய அந்தச் சொற்களை அவள் காதில் வாங்கிக் கொள்ளாததோடு மட்டுமல்லாமல் அந்த மாதிரியான பேச்சுக்களைத் தான் விரும்பவில்லை என்பது போலும் முகத்தைச் சுளித்து அவனைப் பார்த்தாள். அவன் அத்துடன் பேச்சைத் துண்டித்துக் கொள்ளத் துடித்தாலும் மனம் ஏனோ அவளுடன் உரையாடவே விழைந்தது. அந்த இரவு வேளையில் தன் உதவி ஆள் இல்லாததால் நிர்மலாவே மாத்திரைகளைப் பொடி செய்து, மருந்தைக் கலக்க வேண்டி வந்த நேரத்தில் தனியாக உட்கார்ந்திருந்த அவன் அந்த அறையையும், அதற்கு அடுத்தாற்போல் உள்ள அறைகளையும் நன்கு நோட்டமிட முடிந்தது. அவ

ளுடைய கைபட்ட சக்தியினாலோ என்னவோ குழந்தையின் அழுகை நின்று விட்டிருந்தது.

“நிம்மு! ராமநாதனையே உனக்கு நிச்சயம் செய்து விட்டேனம்மா. அவர்கள் சீக்கிரமே கல்யாணத்தை முடிக்க விரும்புகிறார்கள்” என்று தந்தை சொன்னபோது அன்றொரு நாள் நிம்முவுக்கு ஏற்பட்ட மன நெகிழ்ச்சியும், அந்த மகிழ்ச்சியையும், மறைக்க முடியாமல் அவள் பட்ட பாடும் மற்றவர்கள் அவளுடைய நாணத்தைக் கண்டு கேலி செய்ததும் எல்லாம் வேகமாக அடித்துச் செல்லும் நீரோட்டத்தில் ஒரு நிமிஷம் மட்டுமே தோன்றி மறையும் காட்டுச் செடிகளின் காய்களைப்போல் தோன்றி மறைந்தன.

தன் அண்ணனுடன் நண்பன் என்ற முறையில் வீட்டுக்கு வந்து வீட்டிலுள்ள ஒரு நபர் போல் பழகிய ராமநாதனிடம் நிர்மலா மனத்தைப் பறி கொடுத்துத் திண்டாடினாள். உற்ற தோழிகளுடன் மனத்தில் உள்ளதைப் பகிர்ந்து கொள்ள முடியுமே தவிர பெற்ற தாயற்ற அவள் வேறு என்ன செய்வாள் ?

எப்படியோ ஜாடை மாடையாக நிம்முவின் தந்தைக்கு விஷயம் தெரிந்ததும் தன்னைவிட அந்தஸ்தில் பெரியவர்கள் என்றுகூடப் பாராமல் ராமநாதனைத் தமது மாப்பிள்ளையாக்கிக் கொள்ளத் தீர்மானித்தார். ராமநாதன் வீட்டார் போட்ட சட்ட திட்டங்களுக்கெல்லாம் அவர் உட்படவும் தயாராகி விட்டார்.

'நிம்மு ஒருத்திதானா? இன்னும் அடுத்தடுத்துக் கல்யாணத்துக்கு இரு பெண்கள் இருக்கிறார்கள். மூத்த மகனுக்குத் திருமணமாகி மனைவி வீட்டுக்கு வரும்போது வீட்டில் என்ன இருக்கும்? எல்லாவற்றையும் நிம்முவுக்குக் கொடுக்கத்தானே சரியாக இருக்கும்?' என்று நிம்முவின் தகப்பனாரிடம் ஊரிலுள்ள பலர் ,சொன்னார்கள்.

“எல்லோருக்கும் இப்படியே செய்வேன். எனக்குச்சக்தியைக் கொடுத்திருக்கிறார் ஆண்டவன். வியாபாரத்தில் இன்னும் அதிகமாக விருத்தியையும் கொடுப்பார்” என்றார் நிம்முவின் தந்தை.

ராமநாதனுக்கு நிம்முவை மணப்பதில் அதிக ஆனந்தம் இருந்தது என்று தெரிந்தது. அவளுடைய காது கேட்கும்படியாகவே அவளுடைய அழகைப் புகழ்ந்து அவளை நாணச் செய்தான்.

முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போதுதான் அந்தச் சிறு பொறி கூட்டத்தினிடையே விழுந்து பெரும் நெருப்பாகப் பரவியது. நிஜமான நெருப்பை அணைத்துவிட முடியும். ஆனால் இது கலக நெருப்பாயிற்றே. காற்றில்லாமலே பரவக் கூடியதல்லவா?

மாப்பிள்ளையின் மாமாவை யாரோ அவமதித்துவிட்டார்கள். மரியாதைக் குறைவாக நடந்தவர்கள் பெண்ணுக்கு நெருங்கிய உறவினர்கள் என்பதில் ஆரம்பித்த சர்ச்சை ஓங்கியது. 'என் பையன் பாயஸம், பாயஸம் என்று கத்தினான். பாயஸம் இருந்தால் அல்லவா போட' என்றாள் ராமநாதனின் தமக்கை. 'சீர் வரிசைகள் எதுவும் சரியாக இல்லை' என்றாள் ராமநாதனின் தாயார். 'பெண்ணின் நகைகளைப் பொன் வேலை செய்பவனிடம் கொடுத்துப் பரிசோதிக்க வேண்டும்' என்றார் பையனின் மாமா. இந்தச் சொற்கள் நிம்முவின் தந்தையை ஆத்திரம்கொள்ளச்செய்தன. 'நாங்கள் உங்களைப் போல் பணக்காரர்கள் இல்லையே தவிர ஏமாற்றுக்காரர்கள் இல்லை' என்றார் அவர். இவ்வளவுதான். யார் எதைச் சொன்னார்கள் என்று யாருக்கும் தெளிவாகத் தெரியாத கூச்சல், குழப்பம்.

“வாடா ராமநாதா!” என்று பையனை இழுத்தார்கள் அவன் தரப்பு மனிதர்கள். அருகில் அமர்ந்திருந்த நிம்முவின் கண்களுடன் அவன் கண்கள் மோதிப் பிரிந்தன. ஒரு க்ஷண காலம்தான். ஆனால் அதற்குள்தான் எத்தனை எண்ணப் பரிமாற்றங்கள் நடந்து முடிந்து விட்டன!

'இந்த அற்பக் காரணங்களுக்காக நம் கற்பனைக் கோட்டைகளைச் சிதற அடித்து விடாதீர்கள். கல்லூரியில் நீங்கள் முதலாவதாகத் தேறிப் பாராட்டப்பட்ட போதும், பந்து விளையாட்டில் ஜெயித்து நீங்கள் பரிசு வாங்கியபோதும், எத்தனை அபூர்வமான, தீரமான ஆண் என்று நான் உங்களைப் பாராட்டியதுண்டு. அந்தப் பாராட்டுதல்களால் நீங்கள் மகிழ்ந்ததுமுண்டு. அந்தத் தீரத்தை, அசாதாரணமான மன உறுதியை இந்த ஒரே நிமிஷம் மட்டும் காண்பியுங்கள். அந்த உங்களுடைய செய்கையால் என்றென்றும் நான் உங்கள் அடிமையாக இருக்கத் தயார்' என்று கண்களாலேயே கெஞ்சினாள் அவள். அவனும் அதைப் புரிந்து கொள்ளாமல் இல்லை. ஆனால் புரிந்துகொண்டு செயலாற்றாமல் மற்றவர்களின் கைப்பொம்மையாக இருந்தான். கல்யாணம் நின்றுவிட்டது.

மருந்தைக் கரைத்துக் கொண்டிருந்த நிம்முவுக்குக் கடந்த சம்பவங்களெல்லாம் மனத்துள் கலந்து ஒரு நீண்ட பெருமூச்சாக வெளிவந்தன.

கல்யாணம் நின்றுபோன பின் நிம்முவின் தகப்பனார் மனமொடிந்து போனார். நிம்முவை உடனே வேறு ஒருவனுக்கு மணம் முடித்துக் கொடுப்பதற்காகச் செய்த ஏற்பாடுகளை அவள் அதி பலவந்தமாக எதிர்த்து மேற்கொண்டு படித்து இன்று டாக்டராக நல்ல பெயருடன் விளங்குகிறாள்.

டாக்டர் நிர்மலா மருந்துப் பாட்டிலுடன் முன்னறைக்கு — அதாவது நோயாளிகளைப் பார்வையிடும் அறைக்கு வந்தபோது அறை வெறிச்சோடிக் கிடந்தது. 'வந்தவர் போய் விட்டாரா? தன்னைப் புரிந்து கொண்டவுடன் இப்படி நேர்ந்ததா?' என்று எண்ணியபோது உள் பக்கத்திலிருந்து குழந்தையை எடுத்துக் கொண்டு அவன் வந்தான். 'உள் பக்கம் போய்விட்டான், தூக்கிக் கொண்டு வந்தேன்' என்றான் அவன்.

“நிம்மு... நீ தனியாகவா இருக்கிறாய்?” என்று கேட்ட ராமநாதனைத் தன் விழிகளால் பார்த்து ஆட்சேபம் தெரிவித்தது மட்டுமல்லாமல், “நான் இப்பொழுது ஒரு டாக்டர். என் கடமையைச் செய்து கொண்டிருக்கும்போது சொந்த விஷயங்களைப்

பேசுவதையோ, செல்லப் பெயரைச் சொல்லி உறவு கொண்டாடுவதையோ விரும்பவில்லை நான்'' என்றாள் டாக்டர் நிர்மலா கண்டிப்பு நிறைந்த குரலில். ஆனால் அதே கட்டுப்பாட்டுடன் தன் மனத்தை வைத்துக் கொள்ள முடிந்ததா என்றால், அதுதான் இல்லை!

மருந்து கொடுக்க வேண்டிய சமயங்களையும், ஆகார முறைகளையும் கூறிய அவள் குழந்தைக்கு ஓர் ஊசியும் போட்டாள்.

ராமநாதன் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வாசல் பக்கம் வந்தபோது கூடவே பின்தொடர்ந்து வந்த அவள் ''நான் செய்ய வேண்டிய வேலைகள் முடிந்து விட்டதால் நீங்கள் கேட்டதற்குப் பதில் சொல்கிறேன்: நான் தனியாகத்தான் இருக்கிறேன்'' என்றாள், தன் உச்சரிப்பில் அழுத்தம் கொடுத்து.

''இப்படி ஒரு சந்திப்பு ஏற்படும் என்று நான் கனவிலும் எண்ணவில்லை'' என்றான் ராமநாதன்.

''நான் என்றாவது இப்படி ஒரு சந்திப்பு ஏற்படும் என்றுதான் எண்ணினேன்'' என்று நிர்மலா கூறியதும் ராமநாதன் வியப்புடன் நோக்கினான்.

''இவன் உங்களுடைய குழந்தையா?'' பனி கொட்டும் இரவில் வெளியே கொண்டுபோகப் படும் குழந்தைக்குப் பாதுகாப்பாக சுற்றப் பட்ட உல்லன் குல்லாயைப் போட்டு, போர்வையால் மூடிக் கொண்டிருக்கும் அவன் வாயிலிருந்து எந்த வார்த்தைகள் வரவேண்டும் என்று அவள் காத்திருக்கிறாள்?

'திருவனந்தபுரத்தில் நம் கல்யாணம் நின்றபின், நான் வட நாட்டுக்கு வேலையாகப் போய்விட்டேன். இப்போது இந்த ஊருக்கு மாற்றலாகிக் கொண்டு வந்திருக்கிறேன். 'இவன் என் தங்கை பிள்ளை' என்று சொல்ல மாட்டானா, 'நிம்மு! இந்தக் குழந்தை என்னுடையவன்தான், ஆனால் தாயற்றவன்' என்றாவது சொல்ல மாட்டானா என்றுதான் எதிர்பார்க்கிறாளா நிர்மலா? ஏன் இந்த ஆசை? ஏன் இந்தச் சபலம்? எத்தனை வைராக்கியமாக வாழ்ந்தாள் இத்தனை நாட்கள்? வாழவும் எண்ணினாள்? அவனைக் கண்டவுடன் பிடிவாதமுள்ள சிறுவனைப் போல் கைக்குப் பிடிபடாமல் மனம் ஏன் நழுவி ஓடுகிறது? மறுபடியும் அவனோடு ஒன்றி வாழ ஆசையா?

குழந்தையை எடுத்துத் தோளில் சாத்திக் கொண்ட ராமநாதன், ''ஆமாம், இவன் என் மூன்றாவது குழந்தை. இவன் தம்பியை இவன் தாயார் பிரசவித்துப் பத்து நாட்கள் கூட ஆகவில்லை'' என்றான் சர்வ சாதாரணமாக. பிறகு அவளிடம் விடைபெற்றான்.

''சலீர்...''

என்ன ஓசை அது? கண்ணாடிப் பாட்டில் உடைந்தாற்போல்... நிர்மலாவுக்கு மட்டுமே கேட்டது ஓசை. அவளுடைய மனக் கோட்டைகள் மறுபடியும் உடைந்து சிதறிய ஓசைதான்.

சே... என்ன சபலம்? டாக்டர் நிர்மலா உள்ளே வருகிறாள்.

குழந்தையை எடுத்துக் கொண்டு போன ராமநாதன் மனம் கடல் போல் எண்ண அலைகளை எழுப்பி எழுப்பி அடங்குகிறது. 'என் நிம்மு, பதினாறு வருஷங்களுக்கு முன் ஒரு க்ஷண கால உணர்ச்சியை வெல்ல முடியாமல் உன் கெஞ்சுதல்களைப் புரிந்து கொள்ளாதவன் போல் மணப் பந்தலில் ஓடி வந்த எனக்கு அதற்குப் பின் நல்ல முறையில் திருமணம் நடந்தது. இப்போது நான் வைத்துக் கொண்டு தவிக்கிறேனே, கையில், அவனை என் கையில் தன் வயிற்றிலிருந்து ஒப்படைத்த அன்று அவனுடைய தாயார் மறைந்து விட்டாள். நான் ஏன் உன்னிடம் பிறகு பொய் சொன்னேன்?...

'என் செல்வ மகன் உள்ளே ஓடிப் போன போது வெளுத்த உடையில் டாக்டர் தொழிலில் நீ வாழ்ந்துவரும் துறவுக் கோலத்தைக் கண்டு புரிந்து கொண்டேன். ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் படங்கள், விவேகானந்தரின் உபதேச மொழிகள் உள்ள புத்தகங்கள். கீதைப் புத்தகம் பிரித்தபடி மேஜையில் கிடந்தது – நான் எல்லாவற்றையும் கண்டு உன்னைப் புரிந்து கொண்டேன். என்னைப் பற்றி நீ என்ன தெரிந்து கொள்ள விரும்புகிறாய், என் பதில் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறாய் என்பதை உன் ஆர்வக்குரல் எனக்கு உணர்த்தாமலில்லை. பிறகு நான் ஏன் பொய் சொன்னேன்?...

'நீ வாழும் வாழ்வைப் போன்றதொரு வாழ்வை என்னால் உனக்கு அமைத்துக் கொடுக்க முடியாது நிர்மலா. சராசரி மனிதனைப் போல் நான் தாயற்ற குழந்தைகளின் பராமரிப்புக்காகப் பெரும் நேரத்தைச் செலவிட்டுக் கொண்டிருக்கிறேன். இந்தப் பொறுப்பை நீ ஏற்க முன் வருவாயேயானால் உன் சிறப்புப் பணிகள் என்னாவது? மிக அரிதான, பொன்னான உன் வாழ்வில் நான் குறுக்கிட்டு அதைப் பயனற்றதாக்க விரும்பாமல்தான் அப்படி ஒரு பொய் சொன்னேன்' என்று தனக்குள் சொல்லிக் கொள்கிறான் ராமநாதன்.

இரண்டு நாட்களுக்குப் பின் நிர்மலாவுக்கு ராமநாதன் சொன்ன பொய் தெரியவருகிறது. அவளிடம் மருந்து கலந்து கொடுத்து அவளுக்கு உதவியாக இருக்கும் பெண், ராமநாதன் குடியிருக்கும் கீழ்ப் பகுதியில் குடியிருப்பவள். மாடியில் வெளியூரிலிருந்து வேலை மாற்றலாகி வந்த ராமநாதனையும் தாயற்ற மூன்று குழந்தைகளுடன் அவன் படும் பாட்டையும் பற்றிப் பேச்சோடு பேச்சாக ஒருநாள் கூறுகிறாள் அவள்.

அந்தச் செய்தியைக் கேட்டுக் குளிர் காலத்திலும் நெற்றியில் உணர்ச்சி வேகத்தால் துளிர்த்த வியர்வையைக் கைக்குட்டையால் துடைத்துக் கொள்கிறாள் நிர்மலா. வியர்வையை மட்டுமா துடைத்தாள்? தன்னிடமுள்ள சபலத்தை, அவன் மேலுள்ள அதீதமான ஆசையை நெஞ்சிலிருந்து துடைத்தெறிகிறாள்.

'என்ன ஆண்கள்! அன்று என்னைத் துணிந்து ஏற்க மறுத்தவர் இன்று பொய் சொல்லி என்னிடமிருந்து விலகப் பார்க்கிறார். இவருக்காகவா நான் சபலத்துக்கு ஆளானேன்? எங்கும் நிறைந்த பரம்பொருளே! எனக்கு வைராக்கிய உள்ளத்தைக் கொடு' என்று மனத்துக்குள்ளாகவே வேண்டிக் கொள்கிறாள் டாக்டர் நிர்மலா.




## மகாராஜா ஸ்வாதித் திருநாள் கிருதிகள்

(முதல் பாகம்)

தேவாமுதத்துக்கு உள்ள பெருமை "ஸ்வாதித் திருநாள் கிருதிகளின் முதல் தொகுப்பு"க்கு உண்டு. நாராயணன் சயனிக்கும் க்ஷீரசாகரத்தில் பிறந்த அமுதம் நாராயணாம்சமான தன்வந்தரியால் கலசத்தில் எடுத்து வரப்பட்டு, நாராயணனின் மாயா சக்தியான மோகினியால், நாராயணனை வழிபடும் தேவாதியருக்கு வழங்கப்பட்டது அல்லவா? அவ்வாறே நாராயணனாகிய அனந்தபுர பத்மநாபனிடம் உளம் உருகி வாழ்ந்த ஸ்ரீ ஸ்வாதித் திருநாள் சங்கீத சாகரத்தைக் கடைந்தெடுத்துத் தந்த கிருதிகளை, இசைப் புலமை மிக்க திருவிதாங்கூர் மகாராணியாரும் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜாவும் வெளிக்கொணர முயற்சி எடுத்து, சங்கீத கலாநிதி செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீநிவாசய்யர் அவர்களும் வீணை வித்வான் ஸ்ரீ கே. எஸ். நாராயணஸ்வாமி அவர்களும் இக்கிருதிகளை அருமையாகச் சீர்திருத்திப் புத்தகமாகத் தந்திருக்கிறார்கள். நன்றாகப் பாடக்கூடிய வித்வான்கள் கீர்த்தனைகளை ஸ்வரப்படுத்திப் புத்தகமாக வெளியிடுவது, அப்பாடல்களை எளிதில் பாடம் பண்ணுவதற்கு எவ்வளவு வசதியாக இருக்கும் என்பதற்கு இந்தப் புத்தகம் ஓர் எடுத்துக்காட்டு. இந்த அமிருதத்தை இசை அன்பர்கள் அனைவரும் மாந்தி மகிழுவர் என்பதில் ஐயமில்லை.

முதலில் ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்கள் ஸ்வாதித் திருநாள் கீர்த்தனங்களைப் பிரகாசப்படுத்தும் பொறுப்பை மேற்கொண்டு அரும் பணி புரிந்தார். அவர் சேமித்த பாடல்கள் ஸ்ரீ செம்மங்குடி அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டன. அவர், மற்ற பல வித்வான்களின் துணை கொண்டு இவற்றை ஸ்வர தாளக் குறிப்புடன் சீராகப் பிரசுரிக்கும் பொறுப்பை அற்புதமாக ஆற்றி வருகிறார்.

இப்போது வெளிவந்துள்ள முதல் தொகுதியில் நாற்பத்தைந்து கீர்த்தனங்களும், பதுமநாபர் திருவிழாவில் ஒவ்வொரு தினமும் பாடுவதற்காக இயற்றப்பட்ட பன்னிரண்டு உத்ஸவப் பிரபந்தக் கிருதிகளும், நாற்பத்திரண்டு சுலோகங்களும் அடங்கியுள்ளன. பாவம், கவிநயம், இசை, மொழி அனைத்திலும் உன்னதமான பாடல்கள். இவற்றில் ஒன்பது விதமான பக்தி பாவங்களை விளக்கும் நவரத்ன மாலிகையையும், தசாவதார ராகமாலிகையையும், ராமாயண ராகமாலிகையையும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

ஸ்வாதித் திருநாளின் உள்ளச் சிறப்பே சிறப்பு! சரபோஜி மன்னனுக்காகப் பாட மாட்டேன் என்று கூறி 'மமதை வாய்ப்பட்ட மனிதனைத் துதிப்பது சுகம் தருமா?' என்று தியாகையர் பாடிய 'நிதி சால ஸுகமா' பிரசித்தமான பாடல். மன்னனாக நாடு ஆண்ட ஸ்வாதித் திருநாளும் இதே கருத்தை 'ஸ்மர ஹரி பாதார விந்தம்' என்ற சாம ராகப் பாடலில் கூறுவது குறிப்பிடத் தக்கது. பஜ கோவிந்தக் கருத்துக்களை அடியொற்றிப் புனையப்பட்ட இப்பாடலில், 'பணம் எனும் மதுவினால் மதம் கொண்ட மனிதனைச் சேவித்து மனத்தை நோகடித்துக் கொள்ளாதே' என்கிறார் மகாராஜா.

முக்கியமாகப் பதுமநாபப் பெருமானையே ஸ்வாதித் திருநாள் பாடினாலும் ஸ்ரீராமர், கண்ணன், நரசிம்மமூர்த்தி, பரமேசுவரன் ஆகியோர் மீதும் மனம் கசிந்து பாடியுள்ள பாடல்களை இங்கு காண்கிறோம்.

பன்மொழிகளில் பாடியிருக்கிறார். சம்ஸ்கிருதக் கிருதிகள் முப்பத்தொன்பது. உத்ஸவக் கிருதிகளும் சுலோகங்களும் மலையாளம் சம்ஸ்கிருதம் இரண்டும் கலந்த மணிப்ரவாளத்தில் அமைந்தவை. ஹிந்துஸ்தானி மெட்டுக்களில் ஹிந்தி மொழியில் ஐந்து மதுரமான பாடல்களையும் காண்கிறோம். 'ராஜீவாக்ஷ பாரோ' என்பதாகக் கன்னடத்திலும் ஒரு கிருதியைக் கண்டு வியக்கிறோம்.

நூலின் இசையம்சத்தைப் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. தேன் இனிக்கும் என்பதை விளக்கவும் வேண்டுமா? கன ராகங்களிலும் அபூர்வ ராகங்களிலும் இசை நுணுக்கம் மிளிரும் கிருதிகளைக் காண்கிறோம். இசைவிளக்கம் மிகமிகத் தெளிவாக உள்ளது.

இந்தப் பிரசுரத்தில் மிகவும் போற்றிப் புகழ வேண்டிய அம்சம் பாடல்களின் சாகித்தியத்தை தேவநாகரி, தமிழ், மலையாளம் ஆகிய மூன்று லிபிகளிலும் தந்திருப்பதும் ஸ்வரங்களுக்குக் கீழே சாகித்யங்களைத் தமிழ், மலையாளம் ஆகிய இரு மொழிகளிலும் தந்திருப்பதுமாகும். ஸ்வரக் குறிப்புக்களைச் சௌகரியமாகப் படிக்க வசதியாகப் புத்தகம் அகலவாட்டில் அமைந்திருக்கிறது. பாடல்களின் பொருளைத் தமிழிலும் மலையாளத்திலும் தந்திருப்பது, அர்த்த பாவத்துடன் பாடப் பேருதவி புரியும்.

இந்த நூலில் ஸ்வரத் தாளக் குறிப்பு அமைத்துத் தந்துள்ள செம்மங்குடி அவர்கள், வீணை வித்வான் ஸ்ரீ கே. எஸ். நாராயணஸ்வாமி ஐயரவர்கள், கிருதிகளை ஆராய்ந்து பொருள் கொடுத்துள்ள ஸ்ரீ எஸ். நீலகண்ட சாஸ்திரி, வித்வான் கே. நாராயணன், நூலைத் தொகுத்துச் சீர்செய்துள்ள ஸ்ரீ வி. வி. சுந்தரராஜன், இதனை வெளியிடப் பொருளுதவி புரிந்துள்ள ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராஜா, மஹாராணி சேது பார்வதி பாய் ஆகியோருக்கு இசையன்பர்கள் மிக்க நன்றிக் கடன் பட்டிருக்கிறார்கள்.

ஸ்வாதித் திருநாள் என்ற கற்பக விருட்சம் சொரிந்த ஏனைய இசை மலர்களும் இவ்விதமே நறுமண மாலைகளாகத் தொகுக்கப்பெற்று வெளிவருமாக!

**Maharaja Sri Swati Tirunal Kritis (Part 1): St. Joseph's Press, Cotton Hill Road, Trivandrum – 14, Price Rs. 8. Packing, Postage etc. Rs. 2 extra.**

## பதினாறாம் அத்தியாயம்

## நள்ளிரவு நாடகம்

பங்கஜம் பளிச் சென்று விளக்கை அணைத்தாள். சத்தமில்லாமல் ஜன்னலண்டை போய் வெளியில் பார்த்தாள்.

ஏறக் குறைய பாதி வட்டமாயிருந்த சந்திரன் மேற்கே அஸ்தமித்துக் கொண்டிருந்தது. அதனுடைய மங்கிய ஒளி அப்போது பெய்து கொண்டிருந்த பனியினால் இன்னும் மங்கலாகக் காட்டிற்று. அந்த மங்கிய நிலவில் ஓர் உருவம் பங்கஜத்தின் அறைப் பக்கத்திலிருந்து எதிர்ப்புறமாகப் போய்க் கொண்டிருந்ததை அவள் பார்த்தாள். பார்த்ததும், பங்கஜம், ''யாரடா அது?'' என்று கூச்சல் போட எண்ணினாள். ஆனால் அவளுடைய நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. வாயிலிருந்து சத்தம் கிளம்பவில்லை. அவளுடைய தேகமெல்லாம் அந்த மார்கழி மாதக் கடுங்குளிரில் சொட்ட வியர்த்தது. ஒரு நிமிஷ நேரம் அப்படியேபார்த்துக் கொண்டு நின்றாள்.

பங்களாவுக்கு எதிரில் கார் வந்து நிற்பதற்கான முன் முகப்பு இருந்தது. அந்த முகப்புக்கும் வாசல் காம்பவுண்டுச் சுவருக்கும் மத்தியில் மர மல்லிகை மரங்களும், குரோட்டன்ஸ் செடிகளும், சம்பங்கி, நித்திய மல்லிகை முதலிய கொடிகள் அடர்த்தியாகப் படர்ந்த ஒரு கொடி வீடும் இருந்தன. அங்கிருந்து மலர்களின் நறுமணம் கம்மென்று வந்து கொண்டிருந்தது.



# மகுடபதி




ஜன்னல் பக்கத்திலிருந்து போன உருவம் அந்தக் கொடி வீட்டுக்கருகில் சென்றது. அங்கே சற்றுத் தயங்கி நின்றது. பிறகு அந்தக் கொடி வீட்டுக்குள் நுழைந்தது.

பங்கஜம் சற்று நேரம் ஜன்னலண்டையில் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள். கொடி வீட்டுக்குள் நுழைந்த உருவம் வெளியே வரவில்லை. இதற்குள் அவளுக்குப் பயம் தெளிந்து விட்டது. அச்சமயம் தான் என்ன செய்ய வேண்டுமென்று யோசித்தாள். அப்பாவிடம் போய்ச் சொல்லலாமா? அது தான் நியாயமாகச் செய்ய வேண்டியது. ஆனால்...? பங்கஜத்தின் மனத்துக்குள் ஒரு விசித்திரமான சந்தேகம் உதித்தது. அவளுடைய அறையின் ஜன்னலோரத்திலிருந்து கிளம்பிச் சென்று கொடி வீட்டுக்குள் நுழைந்த உருவம் பார்ப்பதற்கு ஓர் இளைஞனுடைய உருவமாயிருந்தது. அது யாராயிருக்கும்? ஒரு வேளை...? என்ன பைத்தியக்காரத்தனம்! ஒரு நாளும் இருக்காது..... ஆனால் ஏன் இருக்கக் கூடாது?...... இல்லை, இல்லை. கார்க்கோடக் கவுண்டர்தான் அப்பா திரும்பி வந்து என்ன சொல்கிறார் என்று தெரிந்து கொள்வதற்கு ஆளை அனுப்பியிருக்க வேண்டும்... ஒரு வேளை சாதாரணத் திருடனோ, என்னவோ? சே! திருடனாயிருக்க முடியாது. திருடன் அவ்வளவு துணிச்சலாய், வீட்டில்

விளக்கு எரியும்போது வந்து ஜன்னலண்டை உட்கார்ந்திருப்பானு?

எப்படி யிருந்தாலும் தானே அந்த மர்மத்தைக் கண்டுபிடித்து விடுவது என்று பங்கஜம் தீர்மானித்துக் கொண்டாள். அப்பாவைக் கூப்பிட வேண்டியதில்லே. தன்னுடைய சந்தேகம் ஒருவேளை உண்மையா யிருந்தால், அப்பாவைக் கூப்பிட்டால் காரியம் கெட்டுப் போய்விடும். அப்படி என்ன மோசம் ஒருவனுல் வந்துவிடப் போகிறது? திருடனுய்த்தா னிருக்கட்டுமே? ஒருவனுல் என்ன செய்ய முடியும்? — எல்லாவற்றுக்கும் முன்ஜாக்கிரதையாக இருந்தால் போகிறது. அப்படி மிஞ்சிவந்தால் முன் அறையில்தானே அப்பா படுத்திருக்கிருர். கூச்சல் போட்டால் உடனே வந்து விடுகிருர்.

இப்படியெல்லாம் சிந்தித்து, இந்நிலைமையில் சாதாரணப் பெண் எவளும் செய்யத் துணியாத காரியத்தைச் செய்யத் துணிந்தாள் பங்கஜம். அவள் படித்திருந்த நூற்றுக்கணக்கான கதாநாயகிகளின் தைரியம், துணிச்சல் எல்லாம் அவளிடம் அந்த நிமிஷத்தில் வந்து குடிகொண்டன. ஓசைப்படாமல் நடந்து போய் ஓர் அலமாரியைத் திறந்தாள். அதற்குள்ளிருந்து இரண்டு பொருள்களை எடுத்துக்கொண்டு வந்து ஜன்னலண்டை வந்து நிலவு வெளிச்சத்தில் பார்த்தாள். அவற்றில் ஒன்று டார்ச் லைட்; இன்னென்று கைத் துப்பாக்கி!

கைத் துப்பாக்கி அவளுடைய தகப்பஞர் கடப்பை ஜில்லாவில் உத்தியோகம் பார்த்த காலத்தில் அபாயத்துக்காக வைத்துக் கொண்டிருந்தது. இப்போது அது துருப்பிடித்துக் கிடந்தது. அதில் ரவையும் கிடையாது. ஒரு விளையாட்டுப் பொருளாக அதைப் பங்கஜம் தன் அலமாரியில் எடுத்து வைத்திருந்தாள். சில சமயம் அவளுடைய தோழிகள், தம்பிமார்கள், வேலைக்



காரர்கள். முதலியோரை விளையாட்டுக்காகச் ''சுட்டு விடுவேன்'' என்று அவன் இந்தத் துப்பாக்கியைக் காட்டிப் பயமுறுத்துவதுண்டு. திருடனை அதனால் ஒன்றும் செய்ய முடியாதென்று அவனுக்குத் தெரியும். ஆனாலும் அவன் இப்போது கொண்டிருந்த நோக்கத்துக்கு அதுவே போதுமாயிருந்தது.

பிறகு பங்கஜம் ஓசைப்படாமல் அந்த அறையிலிருந்து வெளி வராந்தாப் பக்க முன்ன கதவைத் திறந்தாள். வெளியில் எல்லாம் நிச்சப்தமாய் இருந்தது- அடி மேல் அடி வைத்து நடந்து தாழ்வாரத்திலிருந்து 'போர்டிகோ' வில் இறங்கி, அங்கிருந்து கொடி வீட்டின் அருகில் வந்தாள். அப்போது அக் கொடி வீட்டுக்குள்ளிருந்து மிக மெலிந்த விம்முகிற குரலில் யாரோ பேசும் சத்தம் வந்து கொண்டிருந்தது. பங்கஜம் உற்றுக் கேட்டாள். 'பைத்தியம், பைத்தியம்' 'செந்திருவுக்குச் சித்தப் பிரமை' என்று ஒரு குரல் தனக்குத் தானே சொல்லிக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அந்தக் குரலில் எவ்வளவோ ஏக்கமும், ஏமாற்றமும், வேதனையும் கலந்திருந்தன.

சற்றுத் திகைத்து நின்ற பிறகு, பங்கஜம் கொடி வீட்டின் அருகில் நெருங்கிச் சென்று ஒரு கையில் துப்பாக்கியை நீட்டியபடி இன்னொரு கையில் இருந்த டார்ச் லைட்டை அமுக்கினாள். பளீரென்று வெளிச்சம் அடித்தது. கொடி வீட்டுக்குள்ளே உட்காருவதற்காகப் போடப்பட்டிருந்த செமெண்ட் விசிப் பலகையில் ஒரு வாலிபன் உட்கார்ந்திருந்தான். திடீரென்று வெளிச்சம் அடித்ததும், அவன் திடுக்கிட்டுக் குனிந்த தலையை நிமிர்ந்து பார்த்தான். அவனுடைய கண்களிலிருந்து வழிந்து கொண்டிருந்த கண்ணீரில் டார்ச் லைட்டின் ஒளி பட்டு மின்னியது. எதிரே கைத்துப்பாக்கியுடனும் டார்ச் லைட்டுடனும் நின்று கொண்டிருந்த பங்கஜத்தைப் பார்த்ததும் அவனுக்கு ஒரே திகைப்பாய்ப் போயிருக்க வேண்டும். ஒரு விநாடியில் அவனுடைய கண்களில் கண்ணீர் வறண்டு விட்டது. பங்கஜத்தை வியப்புடன் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

ஐந்து நிமிஷம் வரையில் இவ்விதம் இருவரும் ஒருவரை யொருவர் மௌனமாக உற்றுப் பார்த்தபடி இருந்தார்கள்.



பங்கஜத்துக்கும் பேச நா எழவில்லை. அவளுடைய சந்தேகம் ஒரு விஷயத்தில் உண்மையாயிற்று. இந்த வாலிபன் அன்று அவர்கள் வீட்டுக்குப் புதிதாக வந்த தவிசுப்பிள்ளைதான்! அன்று சாயங்காலம் பங்கஜம் தன் அறைக்குள் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தபோது வாசலில் யாரோ வந்து, 'ஸார்!' என்று கூப்பிடும் சத்தம் கேட்டது. கதையின் சுவாரஸ்யத்தில் ஆழ்ந்திருந்தபடியால் பங்கஜம் போய் யார் என்று கேட்கவில்லை. அவளுடைய தாயார் உள்ளேயிருந்து வந்து வாசல் கதவைத் திறந்தாள். அம்மாவுக்கும் வந்திருந்தவனுக்கும் பின்வரும் சம்பாஷணை நடந்தது பங்கஜத்தின் காதில் விழுந்தது.

''யாரப்பா நீ?''

''ஐயாவை ஒரு காரியமாய்ப் பார்க்க வந்தேன். இருக்கிறார்களா?''

''தவிசுப் பிள்ளையா? இதற்கு முன் யார் வீட்டில் சமையல் செய்து கொண்டிருந்தாய்?''

''வந்து நான்...''

''கோடி வீட்டு ஆச்சி அனுப்பினாங்களா? அவங்க கிட்டத்தான் நான் தவிசுப்பிள்ளை வேண்டுமென்று சொல்லி வைத்திருந்தேன்.''

இவ்வளவுதான் பங்கஜத்துக்குக் கேட்டது. அப்போது அவளுக்குச் சிரிப்பாய் வந்தது. அவளுடைய தாயாருக்குக் கொஞ்சம் காது மந்தம். ''யாரோ ஒருவன் எதற்காகவோ அப்பாவிடம் வந்திருக்கிறான்; அவனைப் பிடித்து அம்மா தவிசுப் பிள்ளையா என்று கேட்டாள்'' என்பதாக எண்ணி பங்கஜம் தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

ஆனால் சாயங்காலம் பங்கஜம் சமையல் அறைக்குள் போனபோது ஒரு வாலிபன் — நாகரிகமும் அழகும் வாய்ந்த தோற்றம் உள்ளவன் — சமையல் வேலையில் அம்மாவுக்கு உதவி செய்து கொண்டிருப்பதைப் பார்த்து வியப்படைந்தாள். அம்மாவிடம் ஜாடையினால், ''இவன் யார்?'' என்று கேட்டாள். ''தவிசுப்பிள்ளை வேண்டு மென்று கோடி வீட்டு ஆச்சியிடம் சொல்லி யிருந்தேன். அவர்கள் அனுப்பி யிருக்கிறார்கள்'' என்று தாயார் சொன்னாள். ''சாயங்காலம் வந்தவன் இவன்தானா? அம்மா தப்புச் செய்கிறாள் என்று நாம் நினைத்தது அல்லவா தப்பு போலிருக்கிறது?'' என்று எண்ணிக் கொண்டாள். பிறகு சாப்பிடும் சமயத்தில் பங்கஜம் புதிய சமையற்காரனைக் கொஞ்சம் கவனிக்கத் தொடங்கினாள். ''இவ்வளவு நாகரிகமான சமையற்காரனும் இருக்கிறானா? முகத்தில் என்ன களை? எவ்வளவு சுத்தமா யிருக்கிறான்?'' என்று எண்ணிக்கொண்டாள். ஆனால் அந்தத் தவிசுப்பிள்ளை தன்னைக் கடைக்கண்ணால் அடிக்கடி பார்ப்பதைக் கவனித்த போது, பங்கஜத்துக்கு அசாத்திய கோபம் வந்தது. ''அம்மாவிடம் சொல்லிப் பிரயோசனமில்லை. அப்பா வந்ததும் இந்தத் தவிசுப்பிள்ளை வேண்டாம் என்று போகச் சொல்லிவிடவேண்டும்'' என்று எண்ணிக் கொண்டாள்.

ஆனால், அப்பா இராத்திரி பத்து மணிக்கு வந்த பிறகு அவர் கூறிய ஆச்சரியமான விவரங்களை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்ததில், புதிய தவிசுப்பிள்ளையைப் பற்றி அவள் அடியோடு மறந்து விட்டாள்.

இப்போது கொடி வீட்டுக்குள் உட்கார்ந்து விம்மிக் கொண்டிருந்தவனை டார்ச் லைட்டின் வெளிச்சத்தில் பார்த்ததும், புதிய தவிசுப்பிள்ளைதான் என்று தெரிந்து போய் விட்டது. ஆனால், உண்மையில் இவன் யார்? கார்க்கோடக் கவுண்டரின் ஆளா? உளவு அறிந்து போவதற்காக வந்தவனா? அல்லது... ஒருவேளை... அப்படியும் இருக்க முடியுமா?

ஐந்து நிமிஷ நேரம் இவ்விதம் சிந்தனையில் ஆழ்ந்து நின்ற பிறகு, பங்கஜத்துக்கு ஏதாவது பேசினாலொழிய நெஞ்சு வெடித்து விடும் என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது.

''யார் நீ? நிஜத்தைச் சொல்லிவிடு! இல்லாவிட்டால்...'' என்று பங்கஜம் சொல்லத் தொடங்கித் தொண்டையைக் கனைத்தாள்.

அந்த வாலிபனும் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''இல்லாவிட்டால்....?'' என்றான்.

''இந்தத் துப்பாக்கியின் குண்டுக்கு இந்த நிமிஷமே இரையாவாய்!'' என்று பங்கஜம் நாவல் பாஷையில் சொன்னாள்.

அந்த வாலிபன் சிரித்தான். அந்தச் சிரிப்பில் எவ்வளவோ சோகமும் வெறுப்பும் கலந்திருந்தன.

''அப்படியே செய்துவிடு அம்மா! எனக்குப் பெரிய உபகாரமாக இருக்கும்'' என்றான்.

பங்கஜத்துக்கு என்னமோ செய்தது. ஆனாலும் அவள் சமாளித்துக் கொண்டு, ''இந்தப் பாசாங்கெல்லாம் வேண்டாம். நீ யார்? உன் பெயர் என்ன? நிஜத்தைச் சொல்லிவிடு!'' என்றாள்.

''நிஜம் சொல்ல வேண்டுமா? நிஜம்! நிஜம்! இந்த உலகத்தில் நிஜத்துக்கும்

மதிப்பு இருக்கிறதா? நிஜம் சொன்னால் கேட்கிறவர்களும் உண்டா! — அம்மா? நிஜத்தைச் சொல்கிறேன். அதற்குப் பதிலாக எனக்கு ஓர் உபகாரம் செய்வாயா?'' என்று வெறி பிடித்தவன் போல் பேசினான்.

''உபகாரமா? என்ன உபகாரம்?'' என்று பங்கஜம் கேட்டாள்.

''உன் கையிலிருக்கிற துப்பாக்கியால் என்னைச் சுட்டுக் கொன்றுவிடு; இல்லாவிட்டால் அந்தத் துப்பாக்கியை என் கையிலாவது கொடு. நானாவது சுட்டுக் கொண்டு சாகிறேன்'' என்றான் வாலிபன்.

''இந்தா!'' என்று பங்கஜம் தன் கையிலிருந்த துப்பாக்கியைக் கொடுத்தாள்.

அதை வாங்கி விசையை இழுத்துப் பார்த்து விட்டு வாலிபன் வெறுப்புடன் அதைக் கீழே போட்டான்.

பங்கஜம் சிரித்தாள்.

வாலிபன் அவளைக் கோபமாய்ப் பார்த்து, ''உனக்குச் சிரிப்பும் வருகிறதா?'' என்று கேட்டான்.

''சிரித்தால் என்ன?''

''உன் சிநேகிதிக்கு இப்படிப்பட்ட விபத்து வந்திருக்கும்போதா சிரிப்பது? உன் மனம் என்ன கல்லா?''

''என் சிநேகிதிக்கு என்ன விபத்து வந்து விட்டது?''

''வேறென்ன விபத்து வரவேண்டும்? உன் தகப்பனார்தான் சொன்னாரே, பைத்தியம் பிடித்து விட்டதென்று?''

''செந்திருவுக்கா பைத்தியம்? ஒரு நாளுமில்லை. அவளுக்குப் பைத்தியம் என்று சொல்லுகிறவர்களுக்குத்தான் பைத்தியம்!'' என்றாள் பங்கஜம்.

''என்ன, என்ன? பைத்தியம் இல்லையா? அதெப்படிச் சொல்கிறாய்? பகவானே! இதுமட்டும் நிஜமாயிருந்தால்? உனக்கு எப்படித் தெரியும்? எதனால் இவ்வளவு நிச்சயமாய்ச் சொல்கிறாய்?''

''முதலில் நீ யார் என்று சொல்! சொன்னால்....''

''சொன்னால்...?''

''செந்திருவுக்குப் பைத்தியம் ஏன் இல்லையென்று நான் தெரிவிக்கிறேன்.''

''என் பெயர் மகுடபதி!''

''நினைத்தேன், நினைத்தேன். நீதானா என் சிநேகிதியைப் பைத்தியமாக அடித்த புண்ணியவான்!'' என்றாள் பங்கஜம். (தொடரும்)

# சிங்கப்பூரில் திருப்பணிச் செல்வர்

பத்து கும்பாபிஷேகங்களை நடத்தியுள்ள ஒரு திருப்பணிச் செல்வர் எழுபத்தாறாவது வயதில் அறுபதாம் கல்யாணத்தைக் கொண்டாடியிருக்கிறார்: சிங்கப்பூரில். 135 வருடங்களுக்குமுன் சிங்கப்பூருக்கு வந்து, சிங்கப்பூரிலேயே நிலைகொண்டுவிட்ட ஒரு குடும்பத்தின் தலைவரான பக்கிரிசாமிபிள்ளை சிங்கப்பூர் இந்தியர் வரலாற்றின் ஓர் அங்கமாக விளங்கக் கூடிய அளவுக்கு சமூக, சமயப் பணிகளைச் செய்திருக்கிறார்.

திரு பக்கிரிசாமி 1911ம் வருடம் இந்துச் சடங்குகளின்படி சிங்கப்பூரிலேயே பிறந்தவரான குமாரி லட்சுமியை மணந்து கொண்டார். சிங்கப்பூரில் பிறந்த இந்துக்களான தமிழர்களால் திருமண வைர விழா கொண்டாடப்பட்டிருப்பது சிங்கப்பூர் வரலாற்றிலேயே இதுதான் முதல் தடவை. எனினும் பக்கிரிசாமி பிள்ளை தம்பதியர் அடக்கமாகவே அறுபதாம் கல்யாணத்தைக் கொண்டாடியிருக்கிறார்கள்.



திரு பக்கிரிசாமி ஏற்ற பதவிகளும், பெற்ற பட்டங்களும் ஏராளம். இருபத்தைந்து வருடங்கள் ஒரு வழக்கறிஞர் கம்பெனியில் முக்கிய பதவி பெற்றிருந்தார். பிரிட்டிஷ் அரசாங்கம் 1935ம் வருடம் சிங்கப்பூர் மாரியம்மன் கோயில், பெருமாள் கோயில், சிவன் கோயில், காளியம்மன் கோயில் ஆகியவற்றின் நிர்வாகக் கமிட்டிக்கு அவரை உறுப்பினராக அமர்த்தியது. இந்த நான்கு கோயில்களுக்கு உரிய நிர்வாகக் கமிட்டியில் முப்பத்தொன்றரை வருடங்களும், முஸ்லிம், இந்து அறநிலைய கமிஷனராகப் பதினெட்டரை வருடங்களும் சேவை புரிந்திருக்கிறார். 1937ம் ஆண்டில் தம் தந்தையின் நினைவாகக் கிருஷ்ணன் கோயிலையும் புதுப்பித்தார்.

திரு பக்கிரிசாமி தமது பொறுப்பில் இருந்த சிங்கப்பூர் கோயில்களில் பத்து கும்பாபிஷேகங்களை நடத்தியிருக்கிறார். அவர் செய்த சேவையைப் பாராட்டிச் சிங்கப்பூர் இந்து சமூகத்தினர் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்திருக்கின்றனர்.

சட்டமன்ற உறுப்பினராகவும், முனிசிபல் கமிஷனராகவும், ஏராளமான ஸ்தாபனங்களில் உறுப்பினராகவும் நெடுங்காலம் அவர் பணியாற்றினார். சிங்கப்பூர் ராமகிருஷ்ண மிஷன் துணைத் தலைவராகவும், ஒரு டிரஸ்டியாகவும் இருந்துவருகிறார். சிங்கப்பூர் தமிழர் சங்கத்தின் டிரஸ்டிகளில் ஒருவராகவும் இருக்கிறார். 1947ம் வருடம் திரு பக்கிரிசாமி ஜே. பி. பட்டம் பெற்றார்.

சிங்கப்பூர் இந்தியரான திரு பக்கிரிசாமி 1909ம் வருடமும், 1956ம் வருடமும் இந்தியாவுக்குச் சென்று குடும்பத்துடன் ஸ்தல யாத்திரை செய்திருக்கிறார். இமயத்திலிருந்து குமரி வரை 130க்கு மேற்பட்ட கோயில்களுக்குச் சென்று வழிபாடு நடத்தினார்.

செல்வக் குடும்பத்தின் தலைவரான பக்கிரிசாமி பிள்ளை தாராள சிந்தை படைத்தவர். அன்பும் அடக்கமும் நிறைந்த அவர் சிங்கப்பூர் இந்தியர்களின் மதிப்புக்குரிய பெருமகனாகத் திகழ்கிறார். - சாந்தா

# இயற்கை ஏமாற்றுகிறது! அம்பாள் ஏமாற்றுகிறாள்!

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் அருளுரை

மனிதனுக்குப் பலவிதமான இச்சைகள், பாசங்கள், ஆசைகள். தன் இச்சையைப் பூர்த்தி செய்து கொள்கிறான். அதில் பூரித்துப் போகிறான். தான் ஆசையும் பாசமும் வைப்பவர்கள் திருப்பித் தன்னிடம் ஆசையும் பாசமும் வைத்தால் ஒரேயடியாகச் சந்தோஷப்படுகிறான். கலியாணம் பண்ணிக்கொண்டு குழந்தை குட்டிகள் பெற்று, இவ்வாறு தன் இச்சை பூர்த்தியானதாகச் சந்தோஷப்படுகிறான். குழந்தையை இவன் ஆசையோடு தூக்கிக் கொஞ்சும்போது அது 'களுக்'கென்று சிரித்தால், 'அடடா, என்னிடம் குழந்தை ஆசையாக இருக்கிறது' என்று ஒரே ஆனந்தம் அடைகிறான். அதை மேலும் அன்போடு வளர்க்கிறான்.

மனிதன் இந்தக காம இச்சை, வாத்ஸல்யம் எல்லாம் தன் சுகத்துக்காக என்று எண்ணிக் கொண்டிருக்கிறான். அதுதான் இல்லை. ஜீவர்கள் பிறவி எடுத்துத் தங்கள் கர்மத்தை அநுபவித்தாக வேண்டும். முடிவாகக் கர்மத்தைக் கழித்துக்கொண்டு மோக்ஷ நிலையைப் பெற வேண்டும். அதற்காகத்தான் இவனுக்குக் கலியாணமும், சந்ததியும். ஆனால் இவன் தன் இன்பத்துக்கென்று நினைத்து ஆனந்தப்படுகிறான். இப்படியாக மநுஷ்யனை இயற்கை ஏமாற்றுகிறது. இயற்கை என்றால் என்ன, அம்பாள் ஏமாற்றுகி—ள்!

இப்படி மநுஷ்யனை பலவிதத்தில் ஏமாற்றியாகிறது! பலவித வியஞ்சனங்களை ருசித்துச் சாப்பிட்டுவிட்டு இவன் சந்தோஷப்படுகிறானே! உணவு இவனது நாவின் சந்தோஷத்துக்காகவா ஏற்பட்டது? இல்லை. இவன் தன் கர்மாவை அநுபவிப்பதற்கு உடம்பை வளர்த்துக் கொள்ள வேண்டும். உடம்பு வளருவதற்கு ஆகாரம் வேண்டும். ஒரே ருசியில் ஆகாரம் இருந்தால் சாப்பிட அலுத்துப் போகும். அதனால் இயற்கை—அம்பாள் — பலவிதமான ருசிகளைக் காட்டி, இவனைச் சாப்பிட வைத்து, இவனை, "ருசியாகச் சாப்பிட்டோம்" என்று சந்தோஷப்படவும் செய்து, இவன் கர்மாவை அநுபவிக்க வசதியாக உடம்பை வளர்க்கிறாள்.

தன் குழந்தையிடம் உள்ள அபிமானம் பக்கத்து வீட்டுக் குழந்தையிடம் இவனுக்கு இல்லை. 'எனது, எனது' என்று இந்தக் குழந்தையிடமே அலாதி வாஞ்சை காட்டிப் பூரித்துப் போகிறான். எல்லாக் குழந்தைகளிடமும் இவனுக்கு ஒரே மாதிரியான அபிமானம் இருந்தால் இந்தக் குழந்தையைப் பார்த்துப் பார்த்துக் குளிப்பாட்டி, உணவூட்டி, தூங்க வைத்து, இப்படியெல்லாம் செய்வானா? அந்தக் குழந்தை வளர வேண்டும் என்பதற்காகவே அதனிடத்தில் இவனுக்கு விசேஷ அபிமானம் உண்டாகச் செய்திருக்கிறாள் அம்பாள்.

'ஒரு சரீரம் பிறந்து வளர்வதற்காக இவனிடம் காமத்தை வைத்து, பிறகு வாத்ஸல்யத்தைத் தந்திருக்கிறாள் அம்பாள். இவனுடைய சரீரம் வளருவதற்காகவே இவனுக்கு ருசி, பசி முதலியனவற்றை அம்பாள் வைத்திருக்கிறாள்' என்று சொன்னேன். 'சரி, இப்படி இவன் வாழ்வதாலோ, இவனால் இன்னொரு ஜீவன் பிறந்து வளர்வதாலோ என்ன பிரயோஜனம்? பழைய கர்மத்தை அநுபவிப்பது தவிர இதில் என்ன பயன்? இவனும் ஆத்ம க்ஷேமம் அடையக் காணோம். இவனுக்குப் பிறக்கிற ஜீவனும் ஆத்ம க்ஷேமத்தை அடையக் காணோம். பொதுவாக நாம் பார்க்கிற எல்லா ஜன்மாவும் வீணாகத்தானே போகின்றன? காம, குரோத, லோப, மோக, மத, மாச்சரியங்களை அதிகப்படுத்திப் பாபத்தைப் பெருக்கிக் கொள்வதாகத்தானே ஆகிறது?' என்று சந்தேகம் வரலாம்.

இப்படிச் சந்தேகப்பட வேண்டாம். ஒரு மாமரத்தில் நிறையப் பழங்கள் உண்டாகின்றன. பழம் உண்டாவதன் பயன் அதன் கொட்டையிலிருந்து மீண்டும் மரம் தோன்றுவதற்குத்தான். ஆனால் ஒவ்வொரு மாமரத்திலும் உண்டாகிற அத்தனை பழங்களில் உள்ள வித்துக்களும் மரமானால் உலகிலே வேறெதற்குமே இடம் இராதே! ஒரு மரத்தில் உள்ள நூற்றுக் கணக்கான பழங்களில், ஒரே ஒரு வித்து மரமானால் நாம் திருப்திப்படவில்லையா? பாக்கியெல்லாம் வியர்த்தமாயிற்றே என்று வருந்துகிறோம்?

அப்படித்தான் லட்சக் கணக்கில் நாம் இத்தனை பேரும் ஆத்ம க்ஷேமம் பெறாமல் வீணாகப் போனாலும் பரவாயில்லை. நம்மில் யாராவது ஓர் ஆத்மா பூரணத்வம் பெற்றுவிட்டால் போதும். ஸ்ருஷ்டியின் பயன் அதுவே! அந்த ஒரு பூரண ஆத்மா நம் அனைவருக்கும் சக்தி தரும். அப்படிக் கோடாநு கோடி ஜீவர்களில் ஒன்று தோன்றவே இத்தனை காமமும், சஞ்சலமும், இன்ப துன்பமும் வைத்திருக்கிறது.

உறியடி உற்சவத்தில் வழுக்கு மரத்தில் பலர் ஏறி ஏறிச் சறுக்கி விழுவார்கள். கடைசியில் ஒருவன் ஏறிவிடுகிறான்! அவன் ஒருவன் ஏறுவதற்காகத்தான் அத்தனை பேரையும் அத்தனை பிரயாசைப்படுத்தி விளையாட்டு நடக்கிறது! உலக விளையாட்டும் அப்படியே! நம்மில் பலர் சறுக்கி விழுந்தாலும் ஒருவன் பூரணத்வத்தைப் பிடித்துவிட்டால் போதும். எத்தனை முறை சறுக்கினாலும் உறியடியில் திரும்பத் திரும்ப முயற்சி செய்பவனைப் போல் நாமும் பூரணத்துவத்தை அடைய முயன்றுகொண்டேயிருப்போம்.



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

### நாற்பத்தைந்தாம் அத்தியாயம்

## "விடை கொடுங்கள்!"

பெரிய பழுவேட்டரையரின் கோப வெறி நந்தினிக்கு எந்தவிதமான வியப்பையும் உண்டாக்கியதாகத் தெரியவில்லை. மூன்று ஆண்டு காலமாக அந்த மகா வீரரான முதுகிழவரை அவள் கையில் பிடித்த கயிற்றின் நுனியில் ஆடும் பாவையைப் போல் ஆட்டி வைத்துக் கொண்டிருந்தாள். முதன்முதலாக, இன்றைக்கு அந்தக் கயிறு அறுந்து விட்டது. ஆட்டி வைத்தபடி ஆடிக் கொண்டிருந்த பாவை உயிரும் சுய அறிவும் பெற்றுவிட்டது. இதை நந்தினி எதிர்பார்த்ததாகவே தோன்றியது. இனி இந்தப் பாவையினால் அவளுக்கு ஆகவேண்டிய காரியமும் ஒன்றுமில்லை.

சிறிதும் பதற்றம் காட்டாமல் நந்தினி எழுந்து பெரிய பழுவேட்டரையரின் முன்னால் நமஸ்கரித்தாள். உணர்ச்சி மிகுதியினால் தழுதழுத்திருந்த குரலில் அவள் கூறினாள்:

''சுவாமி! என்னுடைய வார்த்தைகள் தங்களுக்குத் தேனையும் தேவாமிருதத்தையும்விட இனிப்பதாகப் பல முறை சொல்லியிருக்கிறீர்கள். ஆனால் இன்றைக்கு நான் கொடுத்த கஞ்சியைப் போலவே என் வார்த்தைகளும் தங்களுக்கு நஞ்சினும் கசப்பாயிருக்கும். ஆயினும், கருணை கூர்ந்து தங்களிடம் நான் இறுதி விடைபெறுவதற்கு முன்னால் சில வார்த்தைகள் சொல்ல அனுமதி கொடுங்கள். அருமைக் கண்மணி என்றும், ஆசைக் காதலி என்றும் என்னை அழைத்த வாயினால் இன்று பாதகி என்றும், ராட்சசி என்றும் அழைத்தீர்கள். நான் பாதகிதான்; ராட்சசிதான்! மூன்று வருஷங்களாகத் தங்களை வஞ்சித்து ஏமாற்றி வந்தேன். வனாந்தரத்தில் அனாதையாக நின்ற என்னை அழைத்து வந்து அரண்மனையில் வைத்தீர்கள். பேரரசிகளும் இளவரசிகளும் எனக்கு மரியாதை செய்யப் பண்ணினீர்கள். தங்கள் உயிருக்குயிரான சின்னப் பழுவேட்டரையரிடம் விரோதித்துக் கொள்ளவும் துணிந்தீர்கள். நாட்டு மக்களும் நகர மக்களும் கூறிய பழிச் சொற்களும் பரிகாசப் பேச்சுக்களும் தாங்கள் என்னிடம் கொண்டிருந்த அபிமானத்தைப் பாதிக்க முடியவில்லை. இப்படியெல்லாம் என்னிடம் நம்பிக்கை வைத்து இணையில்லாச் சிறப்புக்கள் அளித்த தங்களை நான் வஞ்சித்து வந்தேன், அது உண்மைதான். என்னுடைய நோக்கத்தை நிறைவேற்றிக்



கொல்வதற்காகவே தங்கள் அரண்மனையில் வசித்து வந்தேன். தங்களுக்குத் தெரியாமல் பல காரியங்களைச் செய்து வந்தேன். சதிகாரர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தேன். கந்தமாறன் — பார்த்திபேந்திரன் போன்ற வாலிபர்களின் மதியை மயக்கி அவர்களை என் காரியத்துக்கு உபயோகப்படுத்திக் கொண்டேன். ஆனால், ஐயா, ஒரே ஒரு காரியத்தில் மட்டும் தங்களை நான் வஞ்சிக்கவில்லை. தங்களை உலகமறிய மணந்த நாளிலிருந்து தங்களையே என் பதியாகக் கொண்டிருந்தேன். தலைமுறை தலைமுறையாக மகாவீரர்களை அளித்து வந்த தங்கள் பழம் பெரும் குலத்துக்கு என்னுடைய ஒழுக்கத் தவறினால் சிறிதும் களங்கம் ஏற்படவில்லை. இனியும் நான் உயிரோடிருந்தால் அத்தகைய களங்கம் தங்களுக்கு ஒருநாளும் ஏற்படாது......"

"நந்தினி! இது என்ன வார்த்தை சொல்லுகிறாய்? என் குலத்துக்கு இனி ஏற்படக்கூடிய களங்கம் வேறு என்ன இருக்கிறது? ஐயோ! என் கையினால்... இந்த என் கையினால்.... அடி பாவி! வாள் ஒன்று வைத்திருந்தாயே? அது எங்கே? அதனால் என் கையை நீயே வெட்டிவிடு! எனக்கு நீ செய்யக் கூடிய உதவி அது ஒன்றுதான்!...... இல்லை, இல்லை! வேண்டாம்! இந்தக் கைக்கு இன்னும் ஒரு வேலை இருக்கிறது: மிக முக்கியமான வேலை இருக்கிறது. நான் கூறியதை உண்மை என்று நினைத்து அப்படி ஏதாவது செய்து விடாதே!..."

"சுவாமி! அப்படியொன்றும் நான் செய்ய மாட்டேன். எத்தனையோ காலமாக நான் பழி முடிக்க எண்ணி இருந்தவரின் பேரிலேயே அந்த வாளை என்னால் உபயோகிக்க முடியவில்லை. சமயம் நழுவிப் போய் விடுமோ என்று நான் பயந்து மதி மருண்டிருந்த நேரத்தில் தாங்கள் என் உதவிக்கு வந்தீர்கள்..."



"அடி பாதகி! உன் உதவிக்கா நான் வந்தேன்? என்ன வார்த்தை சொல்லுகிறாய்? சண்டாளி! பெண் உருக்கொண்ட பேயே! இம்மாதிரி நேரும் என்று தெரிந்திருந்தால்

நான் அங்கு வந்திருக்கவே மாட்டேன்! தெய்வமே! கொள்ளிடத்து வெள்ளத்திலே நான் முழுகித் தத்தளித்தபோதே அந்தப் பாவி யமன் என்னைக் கொண்டு போயிருக்கக் கூடாதா?''

''சுவாமி! தாங்கள் என் உதவிக்கு வரவில்லை. என் காரியத்தில் தங்களை உதவி செய்யும்படி நான் கோரவும் இல்லை. தாங்கள் சோழ மன்னர் குலத்துக்கு உண்மையாக நடக்கவும், சோழ குலத்தின் சேவையில் உயிரைக் கொடுக்கவும் பரம்பரையாக உறுதி பூண்ட குலத்தில் வந்தவர். நானோ சோழ குலத்தின் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்காக வந்தவள். ஆகையாலேயே தங்களிடம் என் உண்மை நோக்கத்தை நான் தெரிவிக்கவில்லை. சில சமயம் நான் அவ்விதம் தங்கள் மூலம் என் காரியத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமா என்று எண்ணியதுண்டு. யோசித்துப் பாருங்கள். தாங்கள் இன்று 'ராட்சஸி' என்றும், 'பெண் உருக் கொண்ட பேய்' என்றும் அழைக்கும் இந்தப் பேதையின் முக சௌந்தரியத்தில் கண்ணையும் கருத்தையும் கொடுத்து அமிதமாக மதுபானம் செய்தவரைப் போல் மதியிழந்து பல தடவை தாங்கள் நின்றதில்லையா? அப்போதெல்லாம் தங்களைக் கொண்டே என் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டால் என்ன என்று நான் நினைத்ததுண்டு. ஆனால் தங்களை அப்படிப்பட்ட துரோகச் செயல் புரியும்படி செய்து தங்கள் குலத்துக்குக் களங்கம் உண்டாக்க நான் விரும்பவில்லை. இதனாலேயே தங்களைக் கடம்பூரிலிருந்து தஞ்சைக்குப் போகச் செய்வதற்கு நான் அவ்வளவு பாடுபட்டேன். தாங்களும் போனீர்கள். ஆனால் விதியானது தங்களைச் சமயம் பார்த்துத் திரும்பிக் கொண்டு வந்து விட்டது! தாங்களாக எனக்கு உதவ முன்வரவில்லை. ஆனால் விதியானது தங்களை என் உதவிக்கு நல்ல சமயத்தில் கொண்டு வந்து சேர்த்தது! ஆம், ஐயா! விதிதான் தங்கள் மனத்தில் என் ஒழுக்கத்தைப் பற்றிச் சந்தேகத்தை மூட்டியது. நான் பழி முடிப்பதைத் தடுப்பது மட்டும் தங்கள் நோக்கமாயிருந்தால், பகிரங்கமாகவே வந்திருப்பீர்கள். நான் ஒழுக்கம் தவறு செய்து தங்களுக்குத் துரோகம் செய்கிறேனா என்று சந்தேகப்பட்டுத்தான் வேஷம் தரித்து இரகசிய வழியில் வந்தீர்கள்.... அந்த விஷயத்திலாவது தங்கள் சந்தேகம் தீர்ந்து போயிருக்க வேண்டும் !'' இல்லாவிடில், இப்போதாவது தீர்த்துக் கொள்ளுங்கள். மனைவியும் கணவனும் வாழ்க்கைத்துணைவர்கள் என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். நான் தங்களுக்கு உண்மையான பத்தினியாக இருந்தபடியால் தான் எனக்குத் துணை செய்வதற்குத் தக்க சமயத்தில் தங்களை விதி கொண்டு வந்து சேர்த்தது....''

''நந்தினி! போதும்! நிறுத்து! உன் வார்த்தைகள் என்னைச் சித்திரவதை செய்கின்றன. அதைக் காட்டிலும், என்னை ஒரேயடியாகக் கொன்று போட்டுவிடு! தடுப்பதற்குக்கூட என் கையில் சக்தி இல்லை; உடம்பிலும் வலிவு இல்லை. வாளினால் கொல்ல உனக்குத் தைரியம் இல்லையென்றால், உண்மையாகவே கஞ்சியில் விஷத்தைக் கலந்து எனக்குக் கொடுத்து விடு !''

''அரசே! என்னை மன்னியுங்கள்! இல்லை... என்னை உங்களால் மன்னிக்க முடியாது. இந்த ஜன்மத்தில் மன்னிக்க இயலாதுதான்! ஒன்று சொல்கிறேன், கேளுங்கள்! நாம் இருவரும் மறுஜன்மம் எடுத்து இந்தப் பூமியில் பிறந்தால், அப்போது இந்தப் பிறவியின் நினைவு ஒன்றும் நமக்கு இராது. நான் தங்களை வஞ்சித்துத் தங்கள் அரண்மனையில் வாழ்ந்ததும், தங்களுடைய பொக்கிஷத்தின் பொருளை என்னுடைய பழி முடிக்கும் காரியத்துக்கு உபயோகப்படுத்தியதும், கடைசியாகக் கடம்பூர் அரண்மனையில் விதிவசத்தினால் நேர்ந்த விளைவும், இவையொன்றும் தங்களுக்கும் நினைவு இராது; எனக்கும் நினைவு இராது. இந்த ஜன்மத்தில் தங்களுக்கு நான் செய்த துரோகத்துக்கு அடுத்த ஜன்மத்தில் பரிகாரம் செய்ய விரும்புகிறேன். மறு பிறப்பில் நான் தங்களையே மணப்பேன் ; தங்களுக்கு உண்மையான வாழ்க்கைத் துணைவியாக இருப்பேன். இந்த வரத்தைத்தான் இனி இந்த உடம்பில் உயிர் இருக்கும் வரையில் எல்லாத் தெய்வங்களிடமும் நான் வேண்டிக் கொள்ளப் போகிறேன்.''

பெரிய பழுவேட்டரையர் இந்த வார்த்தைகளைக் கேட்டு உடலும் உள்ளமும் நெகிழ்ந்து, ''நந்தினி! நீ போய் விடு ! உடனே இவ்விடம் விட்டுப் போய் விடு! இன்னும் சிறிது நேரம் இப்படியே நீ பேசிக் கொண்டிருந்தால் என் புத்தியே பேதலித்து விடும்! என் கடமையைக் கைவிடும்படி நேரிடும் ! இவ்வளவு காலமும் உன்னால் நேர்ந்த அனர்த்தங்கள் போதும்! இன்னமும் என் புத்தியைச் சிதற அடித்துப் பித்துப் பிடிக்கச் செய்யாதே! போய்விடு. இப்போதே போய்விடு!'' என்றார்.

''சுவாமி! மன்னியுங்கள்! என்னுடன் வந்தவர்களின் யோசனையை நான் கேட்

டிருந்தால், இதற்குள்ளே இந்தப் பச்சை மலையையும் கொல்லி மலையையும் கடந்து கொங்கு நாட்டுக்குள் சென்றிருப்பேன். ஆனால் தங்களிடம் பேசி விடைபெற்றுக் கொள்ளாமல் போக எனக்கு மனம் வரவில்லை. கடம்பூர் கோட்டைக்கு வெளியிலே வந்ததும் தாங்கள் மூர்ச்சை யடைந்தீர்கள். தங்களை அங்கேயே போட்டுவிட்டு வந்துவிடும்படி அவர்கள் சொன்னார்கள். அதற்கும் நான் சம்மதிக்கவில்லை. அவர்களையே தங்களைத் தூக்கிச் சுமந்து கொண்டு வரச் செய்தேன். இரவு பகல் நாங்கள் இடைவிடாமல் நடந்து வந்தும் மூன்று நாள் ஆகிவிட்டன. இங்கே வந்த பிறகும் தங்களை விட்டுப் போய்விடலாம் என்று சொன்னார்கள். தங்களுக்கு நினைவு வந்த பிறகு சொல்லிக் கொண்டுதான் பிரிந்து வருவேன் என்று பிடிவாதம் பிடித்தேன். அந்த என் எண்ணம் நிறைவேறி விட்டது. தாங்கள் என்னைக் கொல்லப் பார்த்தீர்கள். அதற்கு நியாயமும் இருந்தது. ஆனால் விதி வசத்தினால் வேறுவிதமாக நடந்துவிட்டது. என் உயிரை வாங்க எண்ணிய தங்களை நான் உயிர்ப்பித்தேன். சற்றுமுன் என் கையால் கொடுத்த கஞ்சியை விஷம் என்று சொல்லி விட்டெறிந்தீர்கள். ஆனால் மூன்று தினங்களாகத் தாங்கள் நினைவிழந்திருந்த காலத்தில் இந்தக் கையினாலேதான் தங்கள் வாயில் தண்ணீர் விட்டுக் காப்பாற்றி வந்தேன். மூன்று ஆண்டுகாலம் தாங்கள் என்னைத் தங்கள் அரண்மனையின் பேரரசியாக வைத்து இணையற்ற பெருமை அளித்து வந்தீர்கள். அதற்குக் கைம்மாறு இந்த ஜன்மத்தில் நான் செய்ய முடியாது. என்றாலும் இந்த மூன்று நாள் தங்களுக்கு என் கையினால் பணிவிடை செய்யக் கொடுத்து வைத்திருந்தேன். இந்த நினைவு என் உயிர் உள்ள வரையில் எனக்குத் திருப்தி அளித்து வரும். போய் வருகிறேன், ஐயா! விடை கொடுங்கள்!"

"நந்தினி! என்னிடம் ஏன் விடை கேட்கிறாய்? கேட்காமலே போய்விடு! நீ இங்கே தாமதிக்கத் தாமதிக்க, என் புத்தி தடுமாறிக் கொண்டு வரும்!"

"ஆம்; என்னை மறுபடியும் கொல்ல வேண்டும் என்று தங்களுக்குத் தோன்றினாலும் தோன்றிவிடும். சுவாமி! தங்கள் கையினால் உயிர் துறக்கும்படி நேர்ந்தால் அதை அடியாள் பெறற்கரிய பாக்கியமாகக் கருதுவேன். ஆயினும் முதலில் என்னைக் கொல்லுவதற்காகத்தானே தாங்கள் மாறு வேடம் பூண்டு வந்தீர்கள்?"

## தேடுவது என்ன?

இந்தியர்களுக்கு எதிராக அண்மையில் டெஸ்ட் மாட்சுகளில் தலைமை தாங்கப் போகும் இங்கிலாந்து காப்டன் இல்லிங்வொர்த் இங்கு எதைத் தேடுகிறார்?



ஒரு வேளை 'டாஸ்' செய்த நாணயம் எங்கே உருண்டு ஓடிப்போயிற்று என்று தேடுகிறாரோ?

(31ம் பக்கம் பார்க்க)

"எதற்காக மாறுவேடம் பூண்டு வந்தேன்? நீ ஏதோ ஒரு காரணம் கூறினாய். உன் ஒழுக்கத்தைச் சந்தேகித்து உண்மையைக் கண்டுபிடிக்க வந்தேன் என்று கூறினாய். அது சரியல்ல. நான் பழுவேட்டரையனாக உன்முன் தோன்றி நீ இரண்டு வார்த்தை என்னிடம் பேசி விட்டால், என் மனம் இளகிவிடும் என்று பயந்துதான் அவ்வாறு வேடம் போட்டுக் கொண்டு இரகசிய வழியில் வந்தேன். உனக்குப் பேசுவதற்கே இடங்கொடாமல் நீ பிரமித்து நிற்கும் போதே உன் மீது கத்தியை எறிந்து கொல்ல எண்ணி வந்தேன். கடம்பூர் அரண்மனை வேலைக்காரன் இடும்பன் காரியைப் பயமுறுத்தி அவன் கையிலிருந்த கத்தியைப் பிடுங்கிக் கொண்டு வந்தேன். அது மட்டுமல்ல, நந்தினி! கிழவன் பழுவேட்டரையன் பொறாமை கொண்டு அவனுடைய இளம் மனைவியைக் கொன்றான் என்ற பழிச் சொல் பரவி ஊர் சிரிக்கக் கூடாது என்று நினைத்துக் காளாமுகனுடைய வேடத்துடன் வந்தேன். ஆனால் சற்று முன் நீ கூறியது போல், நான் ஒன்று நினைக்க விதி வேறு ஒன்று நினைத்தது. இனி ஒரு தடவை அத்தகைய முயற்சி என்னால் செய்யவே முடியாது. ஆகையால், நீ போய் விடு! இதை மட்டும் சொல்லி விட்டுப் போ! அச்சமயம் நான் வந்து குறுக்கிட்டிராவிட்டால், என்ன நடந்

இருக்கும்? உன் நோக்கத்தை எப்படி முடிக்க எண்ணியிருந்தாய்?''

''ஆம், ஆம்; அதையும் சொல்ல வேண்டுமென்றுதான் காத்திருந்தேன். தங்கள் கோபம் என் புத்தியையும் குழப்பி விட்டது. சுவாமி! தாங்கள் தஞ்சைக்குப் போகும் போது 'தங்கள் குல தர்மத்துக்கு என் கையினால் களங்கம் நேரிடாது' என்று உறுதி கொடுத்தேன். அதை நிறைவேற்றப் பெரும் பிரயத்தனம் செய்தேன். மணிமேகலை, கந்தமாறன், வந்தியத்தேவன் இவர்களில் ஒருவர் மூலமாக என் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளலாமென்று யுக்திகள் செய்தேன். முக்கியமாக, மணிமேகலையை நான் அதிகமாக நம்பியிருந்தேன். வேறு காரணத்துக்காக அங்கே மறைந்து நின்ற வந்தியத்தேவனைக் கொல்வதற்காகக் கரிகாலர் வெறிகொண்டு ஓடுவார்; அப்போது மணிமேகலை அவரைக் கொல்லுவாள்; மணிமேகலையின் மேல் குற்றம் சாராமலிருப்பதற்காக வந்தியத்தேவன் 'நான்தான் கொன்றேன்!' என்று ஒப்புக்கொள்வான்; அதனால் பழையாறைக் குந்தவையின் பேரில் என் வஞ்சத்தைத் தீர்த்துக்கொண்டதுமாகும்; — இப்படியெல்லாம் திட்டமிட்டிருந்தேன். ஆனால் இதற்கெல்லாம் அவசியம் ஏற்படவே இல்லை. இளவரசர் தம் கையினாலேயே தம் உயிரை மாய்த்துக் கொண்டார்.''

''இல்லை, நந்தினி! இல்லை! கரிகாலர் தம் உயிரைத் தாமே மாய்த்துக் கொள்ளவில்லை. என்னைக்கூடவா ஏமாற்றப் பார்க்கிறாய்?''

''சுவாமி! இடும்பன்காரியின் கத்தியைத் தாங்கள் அச்சமயம் எறிந்திரா விட்டால், அடுத்த கணத்தில் கரிகாலர் தம்மைத் தாமே வீர பாண்டியன் வாளினால் மாய்த்துக் கொண்டிருப்பார்....''

''ஆம், ஆம்; ஒரு கணம் நான் தாமதித்து வந்திருந்தால் இந்தப் பெரிய துரோகச் செயலைச் செய்திருக்க மாட்டேன். ..தற்கு மாறாக, உன் பேரில் சந்தேகப்பட்டிருப்பேன். நந்தினி! விதிப்படி நடந்து விட்டது. இனி அதை மாற்ற முடியாது. விதி ஒரு விதத்தில் எனக்கும் நல்லது செய்திருக்கிறது. இருவரும் இன்னொரு ஜன்மம் எடுத்தால், நீ என்னையே வாழ்க்கைத் துணைவனாய்க் கொள்ள விரும்புவதாய்க் கூறினாயே? அதைக் காட்டிலும் இனிமையான வார்த்தைகளை என் வாழ்நாளில் நான் கேட்டதில்லை. உன்னிடம் கூடக் கேட்டதில்லை. என் ஆவி பிரியும் நேரத்தில் நான் அந்த வார்த்தைகளைத்தான் நினைத்துக் கொண்டு சாவேன். ஆம், நந்தினி! இந்தப் பிறவியில் இனி நீயும் நானும் சேர்ந்து வாழ்க்கை நடத்த முடியாது. ஆகையால் நீ போய் விடு! போவதற்கு முன்னால், நான் ஆத்திரத்தினால் கொட்டியது போகக் கஞ்சி மிச்சமிருந்தால் கொடுத்து விட்டுப் போ! கஞ்சி இல்லாவிட்டால் கொஞ்சம் தண்ணீராவது உன் கையினால் கொடுத்துவிட்டுப் போ! நான் முதலில் கூறியதை யெல்லாம் மறந்து மன்னித்து விட்டதற்கு அடையாளமாக ஒரு வாய் கஞ்சியாவது, தண்ணீராவது கொடுத்து விட்டுப் போ!'' என்றார் பழுவேட்டரையர்.

''ஆகட்டும், ஐயா! இவ்வளவு கருணை செய்ததற்கு என் உயிர் உள்ளவரைக்கும் நன்றி செலுத்துவேன்!'' என்று நந்தினி கூறிவிட்டு, அடுப்பிலிருந்து கஞ்சி எடுத்து வரச் சென்றாள்.

ஆழ்வார்க்கடியான் அந்தச் சமயம் பார்த்துக் குகையிலிருந்து நழுவிச்செல்ல நினைத்தான். தெரிந்து கொள்ள விரும்பியதை யெல்லாம் அவன் தெரிந்து கொண்டு விட்டான். இனி அங்கிருப்பதில் உபயோகம் இல்லை; அபாயமும் உண்டு. இனிமேல் செய்ய வேண்டியதென்ன என்பதைப் பற்றி வெளியிலே போய் யோசித்துக் கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டே வெளியேறினான்.

### நாற்பத்தாறாம் அத்தியாயம்

## ஆழ்வானுக்கு ஆபத்து!

ஆழ்வார்க்கடியானும் பூங்குழலியும் மலையடிவாரத்து மரத்தினடியில் உட்கார்ந்தார்கள்.

''பெண்ணே! நான் வந்த காரியம் ஆகி விட்டது. புறப்படலாமா?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''வைஷ்ணவரே! நீர் வந்த காரியம் ஆகிவிட்டதென்றால் நீர் போகலாம். நான் வந்த காரியம் இன்னும் பூர்த்தி ஆகவில்லை!'' என்றாள் பூங்குழலி.

''நீ என்ன காரியத்துக்காக வந்தாய்?''

''என் அத்தையைக் கொன்ற பாதகனைத் தேடிக் கொண்டு வந்தேன்.''

''அவனைக் கண்டு பிடிக்கவில்லையா? அதோ அந்தச் சதிகாரரின் கூட்டத்தில் அவன் இல்லையா?''

பி.வி.ஆர் எழுதும் புதுமைத் தொடர் கதை

# சென்ட்ரல்




கல்கி ஆகஸ்ட் 8 இதழில் ஆரம்பம்

''இருக்கிறான்!''

''பின்னே என்ன?''

''அவனைத் தரிசனம் செய்து புண்ணியம் கட்டிக் கொண்டு போவதற்காக வந்தேனா? கொலைக்குக் கொலை, பழிக்குப் பழி வாங்குவதற்காக வந்தேன்.''

''பூங்குழலி! குற்றம் செய்தவர்களைத் தண்டிப்பதற்கு நாம் யார்! அதற்குக் கடவுள் இருக்கிறார்!''

''கடவுள் இருக்கிறாரா, இருந்தாலும் மனிதர்களுடைய துரோகச் செயல்களைத் தண்டிக்கிறாரா என்பது பற்றி எனக்குச் சந்தேகமாயிருக்கிறது.''

''கடவுளை விட்டு விடுவோம். இந்த உலகில் குற்றம் செய்தவர்களைத் தண்டிக்கும் பொறுப்பு அரசர்களுடையது; அரசர்கள் நியமிக்கும் அதிகாரிகள் செய்ய வேண்டியது.''

''அரசர்களும் அவர்களுடைய அதிகாரிகளும் தங்கள் கடமையைச் சரிவரச் செய்யா விட்டால்?''

''செய்யவில்லை யென்று நாம் எப்படித் தீர்மானிப்பது?''

''வைஷ்ணவரே! அதோ உள்ள பாதகர்களில் ஒருவன், மேல் மாடியிலிருந்து வேலை எறிந்து அன்பே உருவான என் அத்தையைக் கொன்றான். வாயினால் பேசத் தெரியாதவளும் ஒருவருக்கும் ஒரு தீங்கும் நினையாதவளும் வாழ்க்கையெல்லாம் துர்ப்பாக்கியசாலியாக இருந்தவளுமான ஒரு பேதைப் பெண்ணைக் கொன்றான். சக்கரவர்த்தியும் அவருடைய ராணிமார்களும் தஞ்சைக் கோட்டை அதிகாரியான சின்னப் பழுவேட்டரையரும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆயினும் அவனைத் தப்பி ஓடும்படி விட்டு விட்டார்கள்....''

''பூங்குழலி! சோமன் சாம்பவனைப் பிடிப்பதற்கு யாதொரு முயற்சியும் அவர்கள் செய்யவில்லையா?''

''வாழ்நாளெல்லாம் என் அத்தையை நிராகரித்த சக்கரவர்த்தி இப்போது அவளை மடியில் போட்டுக் கொண்டு அழுதார். மற்றவர்கள் எல்லாரும் திக்பிரமை கொண்டு நின்றார்கள். 'கொலைகாரனைத் தொடர்ந்து நான் போகிறேன்' என்றதும் சின்னப் பழுவேட்டரையரும் எழுந்து வந்தார். ஆனால் சுரங்கப் பாதையில் அவர் திரும்பிப் போக நேர்ந்தது.''

''அது ஏன்?''

''சுரங்கப் பாதையில் நானும் அவரும் சென்ற போது இருளில் ஓர் ஓலக் குரல் கேட்டது. சின்னப் பழுவேட்டரையர் அந்தக் குரல் வந்த இடத்தை நோக்கிப் பாய்ந்து அங்கே இருந்தவனைப் பிடித்துக் கொண்டார். 'இதோ கொலைகாரன் அகப்பட்டு விட்டான்!' என்று கூவினார். 'இல்லை, இல்லை! நான் கொலை செய்யவில்லை!' என்று ஒரு குரல் வந்தது. அது யாருடைய குரல் என்பது சின்னப் பழுவேட்டரையருக்குத் தெரிந்ததும் அவர் திகைத்துப் போய், 'ஐயோ? நீர் ஏன் இங்கே வந்தீர்?' என்றார். 'பொக்கிஷமெல்லாம் பத்திரமாக இருக்கிறதா என்று பார்ப்பதற்கு வந்தேன்' என்றது இருளில் வந்த குரல். 'ஐயோ! தெய்வமே! உம்மை இங்கே யாராவது பார்த்தால் என்ன நினைத்துக் கொள்வார்கள்? நீர் அல்லவோ சக்கரவர்த்தியைக் கொல்ல முயன்றதாக எண்ணிக் கொள்வார்கள்?' என்றார் காலாந்தக கண்டர். 'சக்கரவர்த்தி செத்துப் போய்விட்டாரா?' என்று ஆவலுடன் கேட்டார் சின்னப் பழுவேட்டரையருடைய அருமை மருகரான மதுராந்தகத் தேவர். 'அசட்டுப் பிள்ளையே! என்னுடன் வா! யாரும் பார்ப்பதற்குமுன் வா!' என்று சொல்லிக் காலாந்தக கண்டர் அவருடைய மருமகப் பிள்ளையின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய் விட்டார். பிறகு நான் மட்டும் இந்தக் கொலைகாரனைத் தொடர்ந்து வந்தேன். இவ்வளவுதூரம் சிரமப்பட்டு வந்து, என் நோக்கத்தை நிறைவேற்றாமல் திரும்பிப் போகச் சொல்கிறாயா?'' என்றாள் பூங்குழலி.

''பெண்ணே! நீ ஆண் பிள்ளையாகப் பிறந்திருக்க வேண்டியவள். பிறந்திருந்தால் பெரியதொரு சாம்ராஜ்யத்தின் சர்வாதிகாரியாக இருந்திருப்பாய். அது போனால் போகட்டும். இதைக் கேள். ஒரு நியாயம் சொல்லு! ஒருவரைக் கொல்ல நினைத்து இன்னொருவரைத் தற்செயலாகக் கொன்றவன் மீது கொலைக் குற்றம் சாட்ட முடியுமா?''

''உம்முடைய கேள்வி எனக்கு விளங்கவில்லை. கொன்றவன் கொலைக் குற்றம் செய்தவன்தானே?''

'' அது எப்படிச் சொல்ல முடியும்? ராமாயணம் கேட்டிருப்பாய். தசரதர் யானை தண்ணீர் குடிப்பதாக நினைத்து அம்பை விட்டார். அது ரிஷிகுமாரன் மீது விழுந்தது. ரிஷி குமாரனைக் கொன்ற கொலைக் குற்றத்துக்காகத் தசரதர் தண்டிக்கப்பட்டாரா? இல்லை! இப்போது நீ தொடர்ந்துவந்த சோமன் சாம்பவனை எடுத்துக் கொள். அவன் சக்கரவர்த்தியைக் கொல்வதற்காக வேலை எறிந்தான். ஆனால் சக்கரவர்த்தி உயிரோடிருக்கிறார். உன் அத்தை குறுக்கே வந்து வேலைத் தாங்கி உயிரை விட்டாள். அவள் தற்கொலை செய்து கொண்டவள்தானே? பின், சோமன் சாம்பவன் மீது கொலைக் குற்றம் எப்படிச் சேரும்?''

''வைஷ்ணவரே! உம்முடைய நீதி முறை அதிசயமாக இருக்கிறது.....''

''என்னுடைய நீதி முறை மட்டும் அல்ல. சர்வலோக நாயகனுன சாக்ஷாத் நாராயண மூர்த்தியின் நீதி முறையே விசித்திரமாகத்தான் இருக்கிறது. இந்த உலகில் பாவம் செய்கிறவர்கள் செழிப்புடன் இருக்கிருர்கள். நல்லவர்கள் — புண்ணியாத்மாக்கள் — கஷ்டப்பட்டு உயிரை விடுகிருர்கள். இதற்கெல்லாம் கடவுளுடைய நியாயம் ஏதோ இருக்கத்தானே வேண்டும் ?''

''நீரும் உம்முடைய நாராயணனும் எப்படியாவது போங்கள். எனக்குத் தெரிந்த நியாயத்தை நான் நிறைவேற்றி விட்டுத்தான் வருவேன்.''

''பூங்குழலி! உனக்காக மட்டும் நான் இந்தப் பேச்சை எடுக்க வில்லை. அதோ அந்த மலைக் குகையில் இரண்டு பேர் இருக்கிருர்கள். அவர்களில் ஒருவர் ஆதித்த கரிகாலரைக் கொன்றவர். ஆனல் கரிகாலரைக் கொல்ல வேணுமென்று நினைத்துக் கொல்ல வில்லை. வேருருவரைக் கொல்ல நினைத்து எறிந்த கத்தி இளவரசரின் பேரில் விழுந்து அவரைக் கொன்று விட்டது. அவரைக் கொலைகாரர் என்று சொல்ல முடியுமா ?''

''வைஷ்ணவரே ! என் மூளையைக் குழப்ப வேண்டாம். மலைக் குகைக்குள் இருப்பவர்கள் யார்?''

''சோழசாம்ராஜ்யத்தின் தனதிகாரி, தஞ்சை அரண்மனையின் சர்வாதிகாரி, இருபத்து நான்கு போர்க்களங்களில் போரிட்டு அறுபத்து நாலு விழுப் புண்களைத் தம் திருமேனியில் சுமந்திருக்கும் வீராதி வீரர், இறை விதிக்கும் தேவர், குறுநில மன்னர் குழுவின் மாபெரும் தலைவர், நந்தினி தேவியின் கணவர்,— பெரிய பழுவேட்டரையர் அந்த மலைக் குகையில் வீற்றிருக்கிருர்.....!''

இவ்வாறு ஆழ்வார்க்கடியான் பெருங் குரலில் கட்டியம் கூறுவதுபோல் கூறினன். அதே சமயத்தில் ரவிதாஸன், ரேவதாஸன், பரமேசுவரன், சோமன் சாம்பவன் முதலியவர்கள் திடு திடு வென்று ஓடி வந்தார்கள். பூங்குழலி சட்டென்று அப்பால் விலகி நின்ருள். வந்தவர்கள் ஆழ்வார்க்கடியானைச் சூழ்ந்து கொண்டார்கள். ரவிதாஸன் கையில் குறுந்தடி ஒன்று இருந்தது. அதை ஓங்கிய வண்ணம் ரவிதாஸன், ''அடே வேஷதாரி வைஷ்ணவனே! அன்பில் அநிருத்தனின் ஒற்றனே! கடைசியில் எங்களிடம் அகப்பட்டுக் கொண்டாயா? நாங்கள் செய்த மூன்று முயற்சியில் ஒன்றிலேதான் வெற்றி அடைந்தோம். இரண்டில் தோல்வி அடைந்தோம். அந்தத் தோல்விகளைப்பற்றி எங்களுக்கு இனிக் கவலை இல்லை. மூன்று

## தேடுவதா?
## தலை தப்பினுல் போதாதா?



சென்ற ஆண்டு மேற்கிந்தியத் தீவுகளுடன் இங்கிலாந்து இரண்டாவது டெஸ்ட் லார்ட்ஸ் மைதானத்தில் ஆடியபோது பாட்ஸ்மனுக்கு மிக அருகில் நின்று கொண்டார் காப்டன் இல்லிங்வொர்த். அப்போது பிரேனன் வீசிய பந்தை மேற்கிந்திய ஆட்டக்காரர் கமாசோ விளாசினுரே பார்க்கலாம்! தலை தப்பினது தம்பிரான் புண்ணியம் என்பதுபோல் காப்டன் இல்லிங்வொர்த் சரேலென்று குனிந்து கொண்டார். விநாடி தாமதித்திருந்தால் அவர் கதையே வேறுகியிருக்கும்.

ஆனல் இன்று, வசவிலே வாழ்கிறவர் என்ற ''பட்டம்'' பெற்றுத் திகழ்கிருர் இல்லிங்வொர்த். காரணம்?

ஒரு சமயம் ஸ்நோ வீசிய 'ஷார்ட்' பந்தில் ஆஸ்திரேலிய ஆட்டக்காரர் ஜென்னர் அடிபட்டு விழுந்தார். அதைக் கண்டு அம்பயர் ரோவன் பௌலர் ஸ்நோவை எச்சரித்தார். இதைப் பார்த்த காப்டன் இல்லிங்வொர்த் அம்பயர் ரோவனிடம் சென்று கையை நீட்டிப் பலமாக வாதிட்டார். அதோடு மட்டுமல்ல; அவர் தம் ஆட்டக்காரர்களோடு மைதானத்தை விட்டே வெளியேறினுர்! இந்தப் பிரச்னை அகில உலகிலும் அலசப்பட்டது. காப்டன் இல்லிங்வொர்த் பலரது வசவுகளுக்கு உள்ளானுர். அவரது கிரிக்கெட் சரித்திரத்தில் வேறு பல சந்தர்ப்பங்களிலும் இதேபோல் அவர் நிந்தனைக்கு உள்ளானுலும் மாபெரும் 'ஆஷஸ்' வெற்றியை - பன்னிரண்டு வருஷங்களாகக் கிடைக்காததை - இங்கிலாந்துக்குப் பெற்றுத் தந்தவரும் காப்டன் இல்லிங்வொர்த்தான். இந்த வெற்றிக்குப் பிறகு சிட்னியில் மைதானத்தில் நாற்காலியில் வைத்து அவரை ஆங்கிலேய ஆட்டக்காரர்கள் தூக்கி வந்தனர்.

குண்டுமணி - படம்: பி.ஐ.எஸ்.

ஆண்டுகளாகத் தேடிக் கொண்டிருந்த உன்னைப் பிடித்தோமல்லவா?'' என்றான்.

உடனே ஆழ்வார்க்கடியான், முன்னை விட உரத்த குரலில், ''அப்பனே! தேடுகிறவன் யார்? தப்பி ஓடுகிறவன் யார்? எல்லாரும் அந்த சாக்ஷாத் நாராயண மூர்த்தியின் குமாரர்கள் தான்! அவனன்றி ஓரணுவும் இந்த உலகில் அசையுமா? ரவிதாஸா! நீயும் கேள்! உன்னைச் சேர்ந்தவர்களும் கேட்கட்டும். வேறு வேறு சில்லறைத் தெய்வங்களை யெல்லாம் விட்டு விட்டு சாக்ஷாத் மகா விஷ்ணுவைச் சரணமடையுங்கள்! பகவான் உங்களுடைய பாவங்களை யெல்லாம் மன்னித்துக் காப்பாற்றுவார்! பரம பதத்தில் உங்களுக்கு இடந் தேடிக் கொள்ளுங்கள்! எங்கே? என்னுடன் சேர்ந்து எல்லாரும் பாடுங்கள், பார்க்கலாம்:—

**''நாராயணனே தெய்வம் —**
**நாமெல்லோரும் துதி செய்வம்!''**

என்று பாடத் தொடங்கினான்.

ரவிதாஸன் கலகலவென்று சிரித்து விட்டு, ''ஏனப்பா, வைஷ்ணவனே? சாக்ஷாத் பரமசிவன் மட்டும் தெய்வம் இல்லையா? பரமசிவனைத் துதித்தால் பரம பதம் கிட்டாதா?'' என்றான்.

ஆழ்வார்க்கடியான் உற்சாகத்துடன், ''பரமசிவன் அழிக்கும் தெய்வம். நாராயணன்தான் காக்கும் தெய்வம்! அன்று முதலை வாயில் அகப்பட்டுக் கொண்டு தவித்த கஜராஜனை எங்கள் நாராயண மூர்த்தி காப்பாற்றியதை மறந்து விட்டீர்களா?'' என்றான்.

''அப்பனே! கஜராஜனைக் காப்பாற்றிய விஷ்ணுபகவான் முதலையைக்கொல்லத்தானே செய்தார்? அது போலவே இராவணன், கும்பகர்ணன், இரணியாட்சன், இரணிய கசிபு, சிசுபாலன், தந்த வக்கிரன் ஆகியவர்களை உங்கள் மகாவிஷ்ணு அழிக்கவில்லையா?''

''எங்கள் பெருமாளின் கையால் வதையுண்டவர்களும் சாக்ஷாத் ஸ்ரீ வைகுண்டத்தை அடைவார்கள். இரணியனையும் இராவணனையும் சிசுபாலனையும் கொன்ற பிறகு அவர்களுக்குப் பகவான் வைகுண்ட பதவியை அளித்தார். உங்கள் பரமசிவனோ திரிபுரர்களை ஒரேயடியாக நெற்றிக் கண்ணால் எரித்து அழித்துப் போட்டார். அவர்களுக்கு மோட்சத்தைக் கொடுத்தாரா?''

''சரி! சரி! உன் கதையை நிறுத்து! உன்னுடைய நாராயணன் இப்போது உன்னை வந்து காப்பாற்றட்டும்!'' என்று சொல்லிக் கொண்டே ரவிதாஸன் தன் கையில் இருந்த குறுந்தடியை ஓங்கினான்.

அச் சமயம் பூங்குழலி ஆழ்வானுக்கு உதவி செய்ய விரும்பி இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்தாள். அதே நேரத்தில் மலைக் குகையிலிருந்து தலைவிரி கோலமாக ஒரு பெண்ணுருவம் ஓடி வருவதைப் பார்த்தாள். ஒரு கண நேரம் அவளைத் தன் அத்தை மந்தாகினி என்று எண்ணிப் பிரமித்து நின்றாள். பின்னர், 'இல்லை, இவள் பழுவூர் ராணி நந்தினி' என்று தெளிந்தாள்.

இதற்குள் நந்தினி ஆழ்வார்க்கடியான் அருகில் வந்து விட்டாள். ரவிதாஸனுடைய ஓங்கிய கைத்தடியைத் தன் கரங்களினால் தடுத்து நிறுத்தினாள்.

''வேண்டாம்! என் சகோதரனை ஒன்றும் செய்யாதீர்கள்! ரவிதாஸா! நான் உங்கள் ராணி என்பது உண்மையானால் தடியைக் கீழே போடு!'' என்றாள்.

ஆழ்வார்க்கடியான் அப்போது, ''சகோதரி! உனக்கு நன்றி. ஆனால் இவர்களால் எனக்கு எந்தவிதத் தீங்கும் செய்திருக்க முடியாது. நான் வணங்கும் தெய்வமாகிய நாராயணமூர்த்தி என்னைக் காப்பாற்றியிருப்பார்!'' என்றான்.

ரவிதாஸன் சிரித்துவிட்டு, ''எப்படிக் காப்பாற்றி யிருப்பார்? அன்றைக்குப் பிரஹலாதனைக் காப்பாற்றத் தூணி லிருந்து வந்தது போல் இன்று இந்த மரத்தைப் பிளந்து கொண்டு நாராயண மூர்த்தி வந்திருப்பாரா?'' என்றான்.

''மந்திரவாதி! என் பேச்சில் உனக்கு நம்பிக்கை இல்லையா? நல்லது! அதோ, பார்! சற்றுத் தூரத்தில் தெரியும் அய்யனார் கோயிலைப் பார்! அந்தக் கோயிலுக்கு முன்னால் மண் குதிரைகள் இருக்கின்றன அல்லவா? ஸ்ரீமந் நாராயணனுடைய கருணையினால் அந்த மண் குதிரைகள் உயிர் பெற்றுவிடும்! அவற்றின் பேரில் வேல் பிடித்த வீரர்கள் ஏறிக் கொண்டு வந்து உங்களைச் சிறைப் பிடித்து என்னைக் காப்பாற்றுவார்கள்.''

ஆழ்வார்க்கடியான் மேற்கண்டவாறு சொல்லிக்கொண்டே கையினால் சுட்டிக் காட்டிய திக்கை அனைவரும் நோக்கினார்கள். தங்கள் கண்களை நம்பமுடியாமல் திண்டாடிப் போனார்கள்! ஏனெனில், அந்த மண் குதிரைகள் உண்மையாகவே உயிர் பெற்று அவர்களை நோக்கிப் பாய்ந்து ஓடி வந்ததாக அவர்களுக்குத் தோன்றியது. ஒவ்வொரு குதிரையின் பேரிலும் வேல் பிடித்த வீரன் ஒருவன் உட்கார்ந்திருந்தான்! (தொடரும்)

## புகை விடாத கார்!




சென்னையில் காற்று மண்டலம் நச்சமய மாவதைத் தவிர்க்க என்ன செய்யலாம் என்று ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டிருக்கிறது.

மேல்நாடுகளில் இது பெரும் பிரச்னையாகி விட்டது. முக்கியமாக மோட்டார் கார்கள் வெளியேற்றும் புகை சூழலை நஞ்சாக்குகிறது என்பதால் புகையே வெளியிடாத கார்களைத் தயாரிப்பதில் முனைந்திருக்கின்றன மோட்டார் கார் உற்பத்தி ஸ்தாபனங்கள்.

படத்தில் காணப்படுவது மேற்கு ஜெர்மனியில் தயாரான ஒபல் மோட்டார் கார். மின்சாரத்தால் ஓடுகிறது. நச்சுப் புகை வெளியிடாமல் மணிக்கு 223 கிலோமீட்டர் வேகத்தில் விரையும்.

-- பூ. பி. எஸ்



உலகிலேயே சூழலில் நச்சுக் கலக்கம் மிக அதிகமாய் உள்ள நகர் டோக்கியோ தான். டோக்கியோ சாலைகளில் பிராண வாயு வழங்கும் இயந்திரங்கள் உள்ளன. ஒரு நுகர்ச்சிக்கு இவ்வளவு எனக் காசு போட்டு மக்கள் பிராணவாயுவை நுகர்ந்து செல்கின்றனர்.

- பாகன்



"உங்கள் கண்கள் பளபளவென்று இருக்க, உங்கள் உடல் பருக்காமல் இருக்க, உங்கள் உடல் வாடாமல் இருக்க, உங்கள் தலைமயிர் ஆரோக்கியமாக வளர, உங்கள் பற்கள் வெண்மையாக இருக்க, நீங்கள் அழகாக இருக்க, இதைச் சாப்பிடுங்கள் என்று அமெரிக்கப் பத்திரிகைகளில் விளம்பரங்கள் வருகின்றன.

அந்த 'இது' என்ன?

தயிர் - ஆடை இல்லாதது!

-- ராஜாமணி

## கிரிக்கெட்!

'எல். பி. டபிள்யூ'க்காக, ஆட்டக்காரர் மட்டையுடன் பெவிலியனை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தார். அம்பயர் அவரை அழைத்து, "ஏன் திரும்புகிறீர்கள்?" என்று கேட்டார். ஆட்டக்காரர், "நீங்கள்தான் கையை உயர்த்திக் காட்டி விட்டீர்களே?" என்றார். உடனே அம்பயர், "'ஹௌ இஸ் தட்?' என்று பதினெட்டு பேரும் பயங்கரமாகக் கத்தியதும், 'அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும்' என்றல்லவா கையை மேலே காட்டினேன்!" என்றார்.




ஒரு காப்டனின் மனோ நிலை :

முதல் நாள்: நிச்சயமாக ஜெயிப்போம்.
இரண்டாம் நாள்: ஜெயிப்போம்.
மூன்றாம் நாள்: ஜெயிக்கலாம்!
நான்காம் நாள்: ஜெயிக்க வேண்டும்!
ஐந்தாம் நாள்: போனால் போகட்டும்!













"உங்கள் 'டீம்' இன்று தோற்றுப்போனதற்கு 'ஃபீல்டிங்'தான் காரணம்."

"ரொம்ப தாங்க்ஸ் சார்! உங்களைத் தவிர மற்ற எல்லாரும் நாங்கள்தான் காரணம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்!"

-- கே. வி. எம்.

## அத்தியாயம் 19

திராட்சைக் கொடி வீட்டின் நிலவறையை ஆராய்ந்த சேகரின் முகத்திலே தோன்றிய உணர்ச்சிக் கலவையைக் கண்ட மஞ்சுளா பீதியடைந்தாள். அங்கு ஏதோ ஒரு விபரீதத்தை அவன் உணர்ந்து விட்டான் என்ற உள்ளுணர்வு ஏற்பட்டது அவளுக்கு. தன் காதலியின் தவிப்பைப் புரிந்து கொண்டாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் அவன் கேட்டான்: ''மேலே அறைகள் இருக்கிறதில்லையா?''

மஞ்சுளா அவனுக்குப் பதில் சொல்லவில்லை. படிகளைத் தாவிக் கடந்து மேலே போய் அங்கிருந்த அறைக் கதவைத் திறந்து விட்டாள். மூவரும் உள்ளே நுழைந்தார்கள். ஒற்றை விளக்கு அழுது வடிந்தது. பிரகாசமற்ற பல்பு. ஜன்னல்கள், விட்டத்தில் உள்ள கண்ணாடித் திறப்புகள் எல்லாம் சேதமாகியிருந்தன. புயலின் பிடியில் அவை தாங்கள் பட்ட பாட்டை விளக்கிக் கொண்டிருந்தன. படிந்திருந்த புழுதியில் மழை நீர் வாரி அடிக்கப்பட்டு அலங்கோல

# சுழிக்

மாக்கிய சுவடுகள் தெரிந்தன. பழைய புத்தகங்கள், பத்திரிகைகள், பள்ளிக் கூடத்து நோட்டுகள் பில் புத்தகங்கள், குப்பை கூளம், மருந்து வாங்கிய காலி அட்டைப் பெட்டிகள், தட்டு முட்டுச் சாமான்கள்... நாற்காலிகள் ஸ்டூல்கள் எல்லாம் தாறுமாறாகக் கிடந்தன. அவ்வளவும் மழை நீரில் குளித்துப் பிறகு காய்ந்து விரைத்துக் கிடந்தன.

அந்தச் சூழலைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தபடி நின்றிருந்தான் சேகர். அவன் என்ன செய்யப் போகிறான் — சொல்லப் போகிறான் என்று தடதடக்கும் நெஞ்சோடு இங்கும் அங்குமாக நின்றிருந்தார்கள் கோபாலும் மஞ்சுவும்.

இதைச் செய்யும்போதே அங்கு கிடந்த ஏதோ ஒரு பொருளை அவன் தன் கைகளுக்குள் பத்திரப்படுத்திக் கொண்டான். பிறகு மஞ்சுளாவின் பக்கம் திரும்பியவன் தன் உள்ளங்கையிலிருந்த அந்தப் பொருளை அவளிடம் காட்டினான். அதைக் கண்ட அவள் முகத்தில் இளநகை அரும்பியது.

''நான் சின்னக் குழந்தையாக இருக்கும்போது உபயோகித்த சாக்கட்டியாக இருக்கும். என் இள வயது உடைமைகளான புத்தகங்கள், பொம்மைகள் எல்லாம் இங்குதான் குவிந்து கிடக்கும்'' என்ற மஞ்சுளா ''ஆனால்... இது ரோஸ் நிறச் சாக்கட்டியல்லவா?... ஆ ... உங்




# காற்று

கௌசிகன்

சேகர் அந்தப் புத்தகம், காகிதக் குப்பலை ஒன்று சேர்த்து அடுக்கினான். உத்தேசமாக இரண்டடி அகலம் மூன்றடி நீளம் இரண்டரை அடி உயரமுள்ள ஒரு மேடையைப் போல அவைகளை அமைத்தான்.

களுக்கு ! அனுப்பி யிருந்த அந்தப் பார்சலில் — டிரங்கின் மீது ரோஸ் சாக்கட்டியால்தானே விலாசம் எழுதப்பட்டிருந்தது?'' என்று கேட்டாள் பரபரப்புடன்.

''இதே சாக்கட்டியால்தான் எழுதப் பட்டிருக்கிறது. இந்தக் காகிதங்களை

அடுக்கியிருக்கிற இதே அளவுதான் எனக்கு அனுப்பிய டிரங்கின் அமைப்பும் இருந்தது இல்லையா? அந்த டிரங்கிலிருந்தவைதான் இத்தனை காகிதம், புத்தகங்கள் எல்லாம். பாலுவின் உடலுக்கு இடம் தருவதற்காக இவைகள் அதிலிருந்து அப்புறப்படுத்தப் பட்டிருக்கின்றன.''

பேச்சற்ற நிலையிலிருந்தனர் மஞ்சுளாவும் கோபாலும்.

அந்த அறையை விட்டுக் கீழே கூடத்துக்கு வந்தான் சேகர். அவர்களும் தொடர்ந்தனர். கீழே வந்தவன் வாசலை நோக்கிப் போனான். அவர்கள் முன்பு விட்டுச் சென்ற ஆயுதங்கள் அங்கேயே கிடந்தன. கைக் கடப்பாறை கத்தி, ஸ்குரு டிரைவர் முதலியன.. கோகிலாவும் டாக்டர் ரகுநாத்தும் அவர்களை அங்கிருந்து வெளியேற்றுவதில்தான் தீவிரம் காட்டினார்கள். அந்த ஆயுதங்களை அப்புறப்படுத்தவில்லை. இப்போது உள்ளே நுழையும் போதே சேகர் அவைகளைப் பார்த்திருந்தான். சிறு கைக் கடப்பாறையை எடுத்துக் கொள்ளும்படி. சேகர் தன் நண்பனிடம் கூறினான்.

''மஞ்சுளா, நீ இங்கேயே இரு. எங்களோடு உள்ளே வர வேண்டாம்'' என்றான் தன் காதலியிடம்.

''நான் காணக் கூடாத, காண வேண்டாத ஏதோ பயங்கரத்தை எதிர்பார்க்கிறீர்களா சேகர்?'' என்று கேட்டாள் மஞ்சுளா.

''அப்படித்தான் எதிர்பார்க்கிறேன்.. நீ இங்கேயே எங்களுக்காகக் காத்திரு.''

இருவரும் அந்தத் திராட்சைக் கொடி வீட்டினுள் புகுந்து மறைந்தார்கள். நாலைந்து படிகள் இறங்கிச் சென்றடையும் நிலவறை போன்ற தாழ்ந்த அந்தக் கூடத்துக்குப் போனார்கள். மஞ்சுளா போட்ட ஸ்விட்சுகளை அணைக்கவில்லை. ஆகவே விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

அந்தக் கூடத்தில் புறக்கணிக்கப்பட்ட பல பொருள்கள் கிடந்தன. ஒரு மூலையில் ஒரு குழாயுமிருந்தது. மற்றொரு மூலையில் மண்ணும் கல்லும் குவிக்கப்பட்டிருந்தன. பெருச்சாளி தோண்டித் தள்ளி இருக்குமோ? சேகரின் கண்கள் தலத்தை நோட்டமிட்டபடி இருந்தன. ஒரு மூலையில் இரண்டு சாக்குகள், சிமிண்டுச் சாக்குகள். ஒன்று காலி, மற்றதில் பாதி சிமெண்டு இருந்தது. அந்த இருள் கவிந்த மூலையில் அது என்ன? அந்தத் தரையைச் சேகர் தன் கால்களால் ஆராய்ந்தான். பிறகு குனிந்து, கையைப் பதிய வைத்துப் பரிசோதித்தான். கோபால் தன்னிடம் இருந்த டார்ச்சின் ஒளியை அங்கு பாய்ச்சினான். அந்தத் தரைப் பகுதி மற்ற பகுதியை விடச் சமீபத்தில் பூசப்பட்டது என்பதை அப்பட்டமாகக் காட்டிக் கொண்டிருந்தது.

எழுந்து நின்ற சேகர் கோபாலைப் பார்த்தான். அவன் பார்வையின் கட்டளையைப் புரிந்து கொண்ட கோபாலின் கைகள் கடப்பாறையை அந்தப் பகுதியில் உறுதியாக இறக்கின.

''திம்...திம்...''

தான் அத்தனை வேகமாகச் செயல்பட்டிருக்க வேண்டியதில்லை என்று, கோபால் எண்ணினான். அவனது மூர்க்கமான தாக்குதலுக்கு அங்கு தேவையிருக்கவில்லை. பழைய தளத்தோடு ஒட்டாத புதிய தளம் அப்படியே பாளமாக எழுந்து கொண்டது. மூன்றாவது தாக்குதல் கூட அவசியப்படவில்லை. ஏதோ ஒரு பலகையை நகர்த்துவது போல அந்தப் புது சிமிண்ட்டுப் பாளத்தை அநாயாசமாக நகர்த்தினான் கோபால். அதை அடுத்து...

அது அவர்களுக்கு அதிக வேலை வைக்கவில்லை. இரண்டே நிமிஷங்களில் கோபால் இன்னும் சரியாகக் காயாத கெட்டிப்படாத ஜல்லிக் கலவையைப் பரபரவென்று அப்புறப்படுத்தினான்.

சேகரின் கையிலிருந்த டார்ச் அந்தப் பகுதியில் தன் ஒளியை நிலைகுத்தி நிறுத்தியிருந்தது. ஒரு நிலையில், பரபரத்துக் கொண்டிருந்த கோபாலின் கரங்கள் பின்வாங்கின... அங்கே...?

பார்த்த பழக்கமான கால்கள்..... தந்தம் போன்ற வெண்மையான, அழகான பெண்ணின் கால்கள் — அது..அது நிர்மலாவினுடையதா?

சேகர் சட்டென்று டார்ச்சை அணைத்தான்.

வியர்வை வழிய நிற்கும் கோபாலிடம், ''இனி நீ போகலாம். இதன் முடிவை அறிய நான் ஒருவனே போதும். மஞ்சுளா இங்கு ஓடிவந்துவிடப் போகிறாள். நீ போய் அவளைத் தடுத்து நிறுத்திவை'' என்றான்.

இரண்டிரண்டு படிகளாகத் தாவி ஏறிக் கூடத்துக்கு வந்து வாசலை நோக்கிப் பாய்ந்து சென்றான் கோபால். ஓடி வரும் கோபாலையும் வியர்வை வழியும் வெளுத்துப் போன அவன் முகத்தையும் கண்ட மஞ்சுளா தன் அருகில் வந்ததும் அவன் புழுதி படிந்த கரங்களை இறுகப் பிடித்துக்கொண்டாள். அவள் பார்வையின் கேள்விக்கு அவன் கண்கள் பதில் கூறின. வாய் பேசவே இல்லை. இரவின் அமைதியான குளிர்ந்த காற்றை ஆழ்ந்து சுவாசித்துத் தன் களைப்பைப்

## ஒரே சலவையில் 3 வழிகளில் செயல் புரிந்து...




## டெட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது

— மற்ற எந்த பவுடரையும்விட.

**இதோ, எப்படி என்று பாருங்கள்:**

1. **டெட்** டிலுள்ள தனிப்பட்ட சக்திவாய்ந்த பொருள் அதி விரைவாகத் துணியில் ஊடுருவிச் சென்று, மறைந்துள்ள அழுக்கைக்கூட நொடியில் விரட்டி அடிக்கிறது. துணிகள் வெண்மையாகின்றன.
2. **டெட்** அழுக்கை வெளிக்கொணர்ந்த பிறகு, அது மீண்டும் படியாமல் தடுக்கிறது. துணிகள் அதிக சுத்தமாகின்றன; சுத்தமாகவே நீடித்து இருக்கின்றன.
3. **டெட்** துணிகளை அதிவெண்மையாக்குகிறது. துணிகள் முன்னைவிட அதிவெண்மையுடன் பளிச்சிடுகின்றன. (நீலம் அல்லது வெண்மைச் சாதனம் சேர்க்கவேண்டிய அவசியமில்லை.)

**இன்றே டெட் வாங்குங்கள்!** ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்.

SHILPI HPMA 38A/70 TAM

போக்கிக் கொண்டிருந்தான் கோபால். ஆனால் மஞ்சுளாவுக்கோ மூச்சுத் திணறுவது போலிருந்தது. திராட்சைக் கொடி வீட்டின் அடிவாரத்திலிருந்து, ''திம் திம்'' என்று ஓசை வந்துகொண்டிருந்தது. சட்டென்று அந்தச் சப்தமும் நின்றது. சில நிமிஷங்களில் சேகர் வியர்வையிலே குளித்தவனாக வெளியே வந்தான்; ஒரு கையில் கடப்பாறை, மறுகையில் வாக்கிங் ஸ்டிக்கும் டார்ச்சுமாக.

அவன் முகம் உணர்ச்சிகளை வெளியிடாதபடி இறுகிக் கிடந்தது. மௌனமாக உள்ளே எரிந்து கொண்டிருந்த விளக்கை அணைத்தான். திறந்து கிடந்த கதவைச் சாத்தினான். தாளையும் போட்டான்.

மெள்ள அருகில் வந்து அவன் தோளைப் பற்றினாள் மஞ்சுளா. இப்போது அவள் கேட்ட வினாவுக்குச் சேகர் வாய் திறந்தே பதில் கூறினான்:

''இரண்டு பேரும், ஆமாம், உன் தோழி நிர்மலாவும் அவள் காதலன் — காணமற் போனதாகக் கூறப்படும் ராமுவும் அங்கு அருகருகே புதைக்கப் பட்டிருக்கிறார்கள்.''

இரண்டு மணி நேரத்துக்கும் அதிகமாக ஆகியிருக்கும். திராட்சைக் கொடி வீட்டின் தலைவாசற் படியில், சேகர் கோபால் இருவருக்கும் நடுவே சிலையாக உட்கார்ந் திருந்தாள் மஞ்சுளா. அவர்கள் எவ்வளவோ சொல்லியும் அவள் கேட்கவில்லை. அங்கு அவர்களோடு இருக்கப் போவதாகப் பிடிவாதமாகச் சொல்லி விட்டாள். அவர்கள் யாரும் பேசவே யில்லை. மூவரின் உள்ளத்திலும் ஏதேதோ எண்ணங்கள், சிந்தனைகள், குழப்பங்கள், தவிப்புக்கள்.

பின்னல் திராட்சைக் கொடி வீட்டின் தலைவாசல் அகலத் திறந்து கிடந்தது. விளக்குகளெல்லாம் பளீரிட்டுக் கொண்டிருந்தன. அவ்வீட்டின் கோடியில் எங்கோ மூலையில் எதை எதையோ பெயர்க்கும், நகர்த்தும் சப்தங்கள் துல்லியமாகக் கேட்டுக் கொண்டிருந்தன. இவர்கள் மௌனமும் அந்தச் சத்தமும் ஒரு நிலையில் இறுதியை அடைந்தன. விளக்குகள் அணைந்தன. கதவை இழுத்துத் தாளிடும் ஒலி கேட்டுப் படிகளில் உட்கார்ந்திருந்த மூவரும் எழுந்தனர்.

சேகரினுடைய அழைப்பின் பேரில் ஓடோடி வந்திருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரமும் போலீஸ் இலாகாவின் துப்பறியும் பிரிவைச் சேர்ந்த துரைசாமியும் அங்கே தங்கள் சோதனைகளை முடித்துக் கொண்டு வெளியே வந்தார்கள். வியர்வை அவர்களைக் குளிப்பாட்டி யிருந்தது. அவர்களது அயர்வைக் கைக்குட்டைகள் தங்களை நைப் பாக்கிக் கொள்வதன் மூலம் சமனப் படுத்திக் கொண்டிருந்தன.

''அந்தச் சாவிகள் உங்களிடம்தானே இருக்கின்றன?'' இன்ஸ்பெக்டர் கேட்டார்.''அவைகளை என்னிடம் தாருங்கள். நான் எடுத்துச் செல்லுகிறேன்.''

''இல்லை இன்ஸ்பெக்டர், இப்போது அவைகளைத் தருவதற்கில்லை. அவைகள் என்னிடமே இருக்கட்டும் இரண்டொரு நாட்களுக்கு'' என்றான் சேகர்.

''ஏன்...?''

''ஒரு முக்கியமான காரணமாகத் தான். அது என்ன என்பதை விரைவிலேயே நான் உங்களுக்கு விளக்குவேன் என்றும் நினைக்கிறேன்!''

அதற்கு மேல் சேகரை வற்புறுத்த விரும்பாத இன்ஸ்பெக்டர், ''நாம் பங்களாவுக்குப் போய் இது விஷயமாக இன்னும் கொஞ்சம் பேசலாமா?'' என்று கேட்டார்.

''ஆட்சேபணை ஏதுமில்லை. பேசத்தான் வேண்டும்'' என்றான் சேகர்.

பர்மாத் தேக்கினாலான பண்ணை வீட்டின் மிகப் பெரிய கதவுகளை மஞ்சுளா அகலத் திறந்தாள். வரவேற்பறையில் கோகிலா ஒரு சோபாவில் உட்கார்ந்திருந்தாள். களைத்துச் சோர்ந்து காணப்பட்டாள் அவள். டாக்டர் ரகுநாத் அவளுக்குத் தெம்பூட்டத்தக்க மாத்திரைகளைக் கொடுத்திருக்க வேண்டும். அப்படி யிருந்தும் கோகிலா கண் மூடி அரை மயக்க நிலையில்தான் இருந்தாள். அவ்வீட்டிலுள்ள முக்கியமானவர்கள் எல்லாரையும் விசாரிக்க வேண்டும் என்று இன்ஸ்பெக்டர் விரும்பியதால் லலிதா, மோகனா இருவரையும் அங்கு ஆஜராகும்படியான பணியை மஞ்சுளா மேற்கொண்டாள். பாதித் தூக்கத்தில் எழுப்பியதால் ஏற்பட்ட கடுப்பு இருந்தாலும் லலிதா வசீகரமாகவே காணப் பட்டாள். கலைந்த கேசமும் உடையும் தூக்கம் தெளியாத கண்களும் கூட அவளுக்குக் களையாகவே இருந்தன. நர்ஸ் உடையில் மோகனா தனது வழக்கமான போதையூட்டும் கவர்ச்சியோடு அங்கு வந்து உட்கார்ந்ததும் கோபாலின் கண்கள் அகல விரிந்தன.

துப்பறியும் துரைசாமி பிரதான நுழை வாசலின் நிலையில் சாய்ந்தபடி நின்றுகொண்டிருந்தார் யோசனையுடன். உள்ளே ஏகாம்பரம் தமது விசாரணையை நடத்தலானார்.

''பண்ணை தனது பெரியவரையும் சின்னவரையும் இழந்து நிற்கும் இந்தத்

துக்ககரமான நிலையில் இங்கு நாங்கள் இப்படியொரு விசாரணையை நடத்துவதற்கே மனமில்லைதான். ஆனால் நடத்தாமலும் இருக்க முடியாது. ஆகவே இன்றிரவு நான் என்னுடைய விசாரணையை எவ்வளவு சுருக்கமாக முடித்துக் கொள்ள முடியுமோ அத்தனை சுருக்கமாக முடிக்கிறேன். பெரியவர்கள் நோய்வாய்ப்பட்ட பிறகு பண்ணையை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றிருந்த உங்களிடம்தானம்மா நான் சில கேள்விகளைக் கேட்க வேண்டியிருக்கிறது. திராட்சைக் கொடி வீட்டில் நாங்கள் கண்டுபிடித்துள்ள பயங்கரத்தைப்பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கோகிலாவைப் பார்த்துக் கேட்டார், இன்ஸ்பெக்டர்.

சில விநாடிகள் மௌனத்துக்குப் பின் கோகிலா பதில் சொன்னாள். அவள் குரல் பலவீனமாக ஒலித்தது. ''இந்த முல்லைவாசல் பண்ணைக்குச் சம்பந்தமில்லாத யாரோ ஒருவருடைய திட்டமிடப்பட்ட செயல் அது என்பதைத் தவிர நான் அதைப் பற்றி விவரிக்க வேறு என்ன இருக்கிறது?''

''அதாவது நீங்கள் குறிப்பிடுவது காளியப்பனை என்று நினைக்கிறேன். ஒரு மாதத்துக்கு முன்பு அடித்த புயலினால் சேதமடைந்த திராட்சைக் கொடி வீட்டை உபயோகத்துக்கு லாயக்கில்லாதது என்று அதனுள் யாரும் உள்ளே போக முடியாதபடி அடைத்துவிட்டதைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு அந்த இடத்தைத் தன் கொடூரச் செயலுக்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறான் அவன் என்கிறீர்கள், அப்படித்தானே?'' கோகிலாவின் பதிலுக்கு ஒரு முழு வடிவம் கொடுத்து அலங்கரிக்கலானார் ஏகாம்பரம்.

''அப்படித்தான் இருக்க வேண்டும் என்று படுகிறது.''

''திராட்சைக் கொடி வீட்டின் தலைவாசல் பூட்டு மாற்றப்பட்டிருக்கிறதம்மா.''

''எப்படி நடந்திருக்கலாம் என்பதை இப்படி நான் ஊகிக்கிறேன்'' என்றாள் கோகிலா, உணர்ச்சியற்ற குரலில். ''பூட்டிக் கிடந்த திராட்சைக் கொடி வீட்டினுள் நுழைவதற்கு அதன் பழைய சாவியை அவன் திருடியிருக்க வேண்டும். இது அப்படியொன்றும் பெரிய காரியமல்ல. அதன் உதவியால் முதலில் உள்ளே புகுந்தவன் அதன் பிறகு அந்தப் பூட்டை மாற்றி இருக்கிறான்; நாங்கள் யாரும் அதன் உள்ளே போகக் கூடாதபடி. இதைப் பற்றிய அனுமானம் என்ன என்பதை அறியத்தான் என்னிடம் கேட்கிறீர்கள் என்று நினைக்கிறேன். ஆனால் நான் சொல்லும் எந்தச் சிறிய விவரத்தையும் அதுவே என் இறுதி முடிவு என்று கொள்ளக் கூடாது.''

''உண்மைதான்.... முல்லை வாசல் பண்ணையின் ஒவ்வொரு மூலை முடுக்கும் இங்குள்ள அத்தனை இடங்களும் காளியப்பனுக்கு அத்துபடியானவை. ஏனெனில் அவனுடைய தகப்பனார் ஒரு காலத்தில் இந்தப் பண்ணையின் உரிமையாளராக இருந்தார் இல்லையா?''

''இந்தப் பண்ணை ஒரு காலத்தில் காளியப்பனுடைய வீடாக இருந்தது.''

''சரி... திராட்சைக் கொடி வீட்டின் வாசல் பூட்டு மாற்றப் பட்டிருப்பது மறுக்க முடியாததோர் உண்மை. இல்லையா? அந்தப் பூட்டை நீங்கள் மாற்றினீர்களா? அல்லது வேறு யாராலோ மாற்றப்பட்டிருக்கிறதா?''

''நான் மாற்றவில்லை....'' இது கோகிலா.

''திராட்சைக் கொடி வீட்டினுள் யாரும் போகக் கூடாது என்று உத்தரவு பிறப்பித்து... எவரும் அதனுள் புகுந்துவிட முடியாதபடி அதை அடைத்துப் போட்டீர்கள் இல்லையா கோகிலாம்மா?''

''ஆமாம். ஏனென்றால் இங்கு வீசிய புயல் அந்த வீட்டை அப்படிச் சேதப்படுத்தி யிருந்தது. அதனால்தான் அப்படியொரு முடிவெடுக்க வேண்டியிருந்தது.''

''இதைத் தவிர அதற்கு வேறு காரணம் ஏதுமில்லையா?''

''இல்லவே இல்லை!''

சில விநாடிகள் மௌனத்துக்குப் பிறகு ஏகாம்பரம் கேட்டார் நிதானமாக: ''உங்கள் பெண் மஞ்சுளா திராட்சைக் கொடி வீட்டிற்குள் போவதை நீங்கள் விரும்பவில்லை. தடுத்தீர்கள். அங்கு விரும்பத் தகாத எதையாவது அவள் பார்த்து விடப் போகிறாளே என்ற பயம்தான் அதற்குக் காரணமா?''

தன் துளைக்கும் பார்வையால் இன்ஸ்பெக்டரை உற்றுப் பார்த்த கோகிலா, ''இது விஷயமாக நீங்கள் மஞ்சுளாவிடமும் சேகரிடமும் முன்பே விசாரித்திருக்கிறீர்கள் என்று தெரிகிறது. நல்லது. அவளை நான் அங்கு போக வேண்டாம் என்று ஏன் கூறினேன் என்பதை மஞ்சுளா நன்கு அறிவாள். அடைக்கப்பட்டுக் கிடந்த அந்த வீட்டினுள் பலவந்தமாக நுழைவதற்கு முயன்று இரவின் அமைதிக்கும் ஊறு விளைவித்தாள். அவள் தகப்பனாரின் நலனுக்காகவே அவள் செயலுக்குத் தடை

யாக இருந்தேன். அந்த வீட்டின் நிலவறையில் இரு உடல்கள் புதைக்கப்பட்டிருக்கும் உண்மை எனக்குத் தெரியும் என்று நினைத்துக் கொண்டு நீங்கள் வினாக்களை எழுப்புவது வேடிக்கை மட்டுமல்ல; விபரீதமாகவும் இருக்கிறது. அந்தச் சடலங்களைப் பற்றி எனக்கு ஏதும் தெரியாது. அப்படி நினைத்துப் பார்க்கவுமே முடியவில்லை என்னால்...''

கோகிலாவின் கோபமான பேச்சு இன்ஸ்பெக்டரைக் கொஞ்சம் கலக்கத்தான் செய்தது. அதற்குமேல் கோகிலாவிடம் கேள்வி கேட்க விரும்பாதவரைப் போல லலிதாவின் பக்கம் பார்த்து, ''இதைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்'' என்றார்.

''ஒன்றுமில்லை...'' என்றாள் லலிதா அமைதியாக. ஆனால் கோகிலாவே தன் தங்கைக்காக மேலும் தொடர்ந்து கூறினாள். ''உண்மைதான். அவளுக்கு இதைப் பற்றி எதுவுமே தெரியாது. தெரிவதற்கும் காரணமில்லை. லலிதாவுக்கு உடல் நலமில்லை. அவளைப் படுக்கையிலிருந்து எழுப்பி இங்கு அழைத்து வந்ததே தவறு. அவள் உடல் நலனைக் கருதி நான்....'' என்று எழுந்திருந்த கோகிலா தன் பார்வையால் லலிதாவையும் எழுந்திருக்குமாறு ஆணையிட்டாள். ''ஓய்வெடுத்துக் கொள்ளுவதற்கு எங்களை அனுமதிக்க வேண்டும்'' என்றாள் மிடுக்காக.

''ஆட்சேபணை இல்லை. இப்போதைக்கு யாரையுமே நான் இது விஷயமாக இங்கு தாமதப்படுத்த விரும்பவில்லை. ஆனால் மறுபடியும் உங்களை விசாரணை செய்யவேண்டி இருக்கலாம்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''மிக்க மகிழ்ச்சி. வந்தனமும்கூட.... வா, லலிதா நாம் போகலாம்'' என்று கூறி மாடிப் படிகளில் ஏறினாள் கோகிலா. லலிதா பின்தொடர்ந்தாள். இத்தனை நேரமும் மஞ்சுளாவைக் கோகிலா ஏறெடுத்தும் பார்க்கவில்லை. 'தன் தகப்பனுக்கு விஷமிடப்பட்டிருக்கிறது' என்ற மஞ்சுளாவின் அந்தப் பேச்சுதான் கோகிலாவிடம் அத்தகையதொரு மாறுதலை ஏற்படுத்தியிருந்தது. தன்னை விரோதியாகக் கருதி இருப்பவளிடம் தனக்கென்ன பேச்சு என்றுதான் அப்படி முகத்தைத் தூக்கிக் கொண்டு போனாள் அவள்.

இன்ஸ்பெக்டரின் பார்வை மோகனுவின் மீது பதிவதற்கும், அவர் கேட்கப் போகும் கேள்விகளுக்கு அவனே முந்திக் கொண்டு பதில் சொல்வதற்கும் சரியாக இருந்தது.

**''மது........''**

நீட்டிய கரத்தில் வோட்டைத் தந்து
நீயே எங்கள் நல்லவ னென்று
வாழ்த்திய எனக்கு இதுவோ பரிசு?
தாய்க்குலம் உன்னை நிச்சயம் ஏசும்!



பாரதி பாடிய நற்றமிழ் நாட்டில்
மதுவைத் தந்து மயக்கிட வைத்தாய்
இத்துணை செய்து இன்புறும் நண்பா!
'குடிகெ(ா)டுத்த' பட்டம் ஏற்பாய் நன்று!

- என். பாபு

---

''இந்தக் கொலைகளைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது, சார். நான் இங்கு வேலைக்கு வருவதற்கு முன்னாலேயே பண்ணையின் காரியஸ்தரான ராமு மாயமாக மறைந்து விட்டிருந்தார். நான் இங்கு வந்ததிலிருந்து இரண்டு கடும் நோயாளிகளைக் கவனிப்பதற்கே இரவு பகல் எந்நேரமும் சரியாக இருந்தது. ஓய்வே கிடையாது.''

முகவாயைத் தடவியவாறே அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தார் இன்ஸ்பெக்டர். அதைவிட அவன் கவர்ச்சியைப் பருகிக் கொண்டிருந்தார் என்று சொல்லுவதே பொருந்தும். ''இது பற்றி நான் மறுபடியும் விசாரிக்கப்போகிறேன். நாளைக்கு நீங்கள் இங்கேதானே இருப்பீர்கள்?'' என்று கேட்டார் மோகனுவிடம்.

''எஜமானியம்மா — கோகிலா — சொன்னார்கள். முதலாளியின் — கந்தசாமியின் — ஈமச் சடங்குகள் எல்லாம் முடிந்த பிறகு நான் போகலாம் என்று. அதன் பிறகுதான் நான் டவுனுக்குப் போக வேண்டும். அது வரை இங்கு தான் இருப்பேன்.''

''ஆல்ரைட்... நீங்கள் போகலாம்'' என்று மோகனுவுக்கும் விடை கொடுத்தார். ஒயிலாக எழுந்த மோகனு சொகுசாக நடந்து போகும் போது தன் பார்வையைக் கோபாலின் மீது வீசினான். அது அவனை மின்சாரமாகத் தாக்கிச் சிலிர்க்க வைத்தது. கனவுலகிலே மிதப்பவனைப் போலக் கண்ணிமைக்காமல்; ஒவ்வொரு படியாக ஏறிச் செல்லும் அவனது இளமையின் எழில் வடிவ வளைவுகளைக் கண்டு வியந்துபோய் மயங்கிக் கிடந்தான் கோபால்.

(தொடரும்)



நீங்கள் ஓர் இல்லத்தரசியோ—
நாகரிக கல்லூரி வனிதையோ
உங்கள் எழில்மிக்க
சருமத்தை, மிருதுவாகவும்,
புத்துணர்ச்சியுடனும்,
பாதுகாப்பது **சந்திரிகா**
ஆயுர்வேதிக் டாய்லெட்
சோப் ஒன்றேதான்.




# சந்திரிகா

## ஆயுர்வேதிக் டாய்லெட் சோப்

சந்திரிகா பிராடக்ட்ஸ் கோயம்பத்தூர்-2. சென்னை-10.




கம்யூனிஸ்டு கிழக்கு ஜெர்மனியிலிருந்து அரசு நூறு டிராக்டர்களை விவசாயிகளுக்கு விற்பதற்காக வரவழைத்தது. ஆனால் நம் விவசாயிகள் வாங்கிய டிராக்டர்களின் மொத்த எண்ணிக்கை பதினைந்துதான். மீதி எண்பத்தைந்து டிராக்டர்களை வாங்க எவரும் முன் வரவில்லை. இந்த டிராக்டர்களின் விலை ஒன்று சுமார் ரூ 14,500 ஆகும். இறக்குமதி செய்யப்பட்ட இந்த டிராக்டர்கள் சரிவர வேலை செய்யாததால் விவசாயிகள் எவரும் இதனை வாங்க மறுப்பதால் டிராக்டர்களின் விலையை ரூ. 10,600 என்று குறைத்து விற்கப் போவதாக விவசாய தொழில் கார்ப்பொரேஷன் தலைவர் அறிவித்துள்ளார்.

அரசின் இந்தச் செயல் நகைப்புக்கிடமாகிறது. ஆராய்ந்தறியாமல் வாங்கியதால் இந்த டிராக்டர்களை விலை குறைத்து விற்க முனைகிறது நம் அரசு. மக்களுக்கு இந்த நஷ்டம் அரசின் அவசரச் செயலால் அமைந்துவிட்டது. அரசினர் துறை என்றாலே ஆடம்பரத் திட்டம், அவசரக் கோலம், அநாவசியச் செலவு, அபரிமித நஷ்டம் என்றாகிவிட்டது.

சென்னை—1
26—6—71 எம். ராமமூர்த்தி

நான், திருநெல்வேலியிலிருந்து நாகர் கோவில் செல்வதற்காகத் தமிழ் நாடு அரசு போக்குவரத்து பஸ்ஸில் பிரயாணம் செய்தேன். வள்ளியூருக்கு வடக்கே பஸ் 'பிரேக் டவு'னாகி விட்டது. என்ன முயன்றும் டிரைவரால் வண்டியைக் கிளப்ப முடியவில்லை. பிரயாணிகள் அனைவரையும் இறக்கி விட்டு விட்டனர். வள்ளியூரிலிருந்தாவது பாதிப் பணத்தை வாபஸ் செய்யச் சொன்னோம். கண்டக்டர் ''அப்படிச் செய்ய எங்களுக்கு அதிகாரம் இல்லை'' என்று மறுத்துவிட்டார். எங்களோடு பயணம் செய்த ஒரு விவசாயி நாகர்கோவிலுக்கான பஸ்சார்ஜ் மட்டும் வைத்திருந்தாராம். அவர் என்ன செய்வதென்று அறியாமல் பரிதவித்தார். நாங்கள் இரக்கப்பட்டு அங்கிருந்து செல்வதற்கான ரூபாயைக் கொடுத்தோம். இந்த லட்சணத்தில் ஐம்பதுக்கு மேற்பட்ட பஸ்கள் உள்ள

★ இக் குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது

வர்களின் பஸ்களை அரசு எடுத்துக்கொள்வதாக அறிவித்துள்ளது !

வடகரை,
2—7—71 எம். ஷேசன்

★''முதல்வர் வேண்டுகிறார்'' என்ற ''பிச்சைக்காரர் மறுவாழ்வு நிதிக்கான அரசு முத்திரையில்'' ஒரு பிச்சைக்காரர் கப்பரையை ஏந்திக் கொண்டு முத்திரையிலுள்ள உதய சூரியனை நோக்கிச் செல்லுவது போல் வரையப்பட்டுள்ளது. தன்னை ஒரு சமதர்ம சார்புள்ள அரசாங்கம் என்று கூறிக்கொள்ளும் தமிழக அரசு, இப் பொதுக் காரியத்தில் கூட கட்சியின் சின்னமான ''உதய சூரியனை''க் கையாண்டிருக்கும் செயலானது கட்சிப் பிரசாரமே. இம்மாதிரியான பொதுக் காரியங்களில் கட்சியின் சின்னத்தைப் பயன்படுத்துவது மக்களை ஏமாற்றுவதாகும்.

திருச்சிராப்பள்ளி-8
4—7—71 அன்னகுட்டி

தங்கள் 4—7—71 கல்கி இதழில் சிவாஜிலிஸ்ட் திரு சீனிவாசனைப் பற்றி ஆயிரத்தைக் கண்டவர் என்ற பகுதியில் எழுதப்பட்டுள்ளது. எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் சில மேற்படி சீனிவாசனைப் பாராட்டும் வகையினதாக இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1968 மே மாதம் 17ந் தேதி தொடங்கி ஜூன் மாதம் 11ந் தேதியுடன் முடிய 26 நாட்கள் கொண்ட வடநாட்டு யாத்திரையைக் காஞ்சீபுரம் திரு ஆர். ராமச்சந்திர முதலியார் நடத்தினார். அதில் சுமார் 150 அன்பர்கள் 3 பஸ்களில் சென்றவர்களில் நானும் ஒருவன். மேற்படி ராமச்சந்திர முதலியாருக்கு யாத்திரை சம்பந்தமாக எல்லாவித ஏற்பாடுகளையும் செய்தவர் திரு சிவா சீனிவாசன்தான். அவரேதான் யாத்திரைக்குக் கைடு செய்தார்.

எங்கள் 26 நாட்கள் சுற்றுலாவில் நாங்கள் 20 வேளைகள்தான் உணவைச் சாப்பிட்டிருப்போம். மற்றபடி இரண்டு அல்லது மூன்று மணிக்கு உப்புமா அல்லது பொங்கல்தான் எங்கள் உயிரைக் காப்பாற்றியது. வழியில் டீக்கடை வந்தால் டீ சாப்பிடுவோம். சற்று ஆசாரமானவர்களுக்கு நித்திய ஏகாதசிதான். அந்த 26 நாட்களில் முறையாக இட வசதி செய்யப்பட்டது ஐந்து இடங்களில் தான். மற்ற தினங்களில் நாங்கள் இரவுகளைக் கழித்தது பெட்ரோல் பங்க் அல்லது பிளாட்பாரம்.

மேற்படி யாத்திரைக்கு உணவு, இட வசதி, கைடு, உள்ளூர் வரிகள் உள்பட சகல செலவுகளுக்கும் சேர்த்துக் கட்டணம் வசூலிக்கப்பட்டது. ஆயினும் பயணிகளின் வசதிகள் சற்றும் கவனிக்கப்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருப்பத்தூர்
3—7—71 டி. எஸ். சுப்பிரமணி



# காஷ்மீர் காதல்!

**ப**ழைய் பேப்பர் வாங்கிக் கொள்பவனுடன் பேரம் பேசி முடிந்தாய் விட்டது. காமாட்சியம்மாள் பழைய பேப்பர்க் கட்டுகளை எடுத்து வரும்படி வேலைக்காரிக்குக் குரல் கொடுத்தாள். கண் கொத்திப் பாம்பாய்க் கவனிக்கா விட்டால் தராசை இப்படி அப்படி ஜாலக் செய்து ஏமாற்றி விடுவான் என்ற எண்ணத்தில் அவள் இடத்தை விட்டு அசையாமல் வேலைக்காரியைக் கொண்டு வரச் சொன்னாள். ஒரு மாதத்துக்கு மேலாகத் தூசு படிந்திருந்த பேப்பர்க் கட்டை வேலைக்காரி கொண்டு வந்து வைத்தாள். பேப்பர் எடுப்பவனும் முன் தராசின் கயிறுகளை முறுக்கு எடுத்துக் காமாட்சி யம்மாளுக்குச் ''சரி தானேம்மா?'' என்று கேட்கும் பாணியில் தட்டைச் சத்தப்படுத்தி எதிரில் வைத்திருந்த பேப்பர்க் கட்டை இழுத்தான்.

''போன வாரம்தானப்பா மளிகைக் கடையில் நிறுத்துக் கட்டி வைத்திருக்கிறேன். இரண்டு கிலோ சரியாய். நீ எடை போட வேண்டிய அவசியமே இல்லை. அப்படியே எடுத்துக் கொண்டு போகலாம்'' என்று முன் எச்சரிக்கையாய்ப் பேப்பர்க் கட்டின் எடையைச் சொன்னாள். இது வியாபாரத்தில் இரு தரத்தாரும் பேசும் ''உண்மை!''

''நான் உங்களை ஏமாற்றப் போகிறேனா அம்மா? இருக்கிற எடைக்குப் பணம் கொடுக்கப் போகிறேன்'' என்று கையில் பத்துப் பேப்பர்களை எடுத்தான். ஒரு தாளிலிருந்து கிழிக்கப்பட்ட பேப்பர் வால் போல் தொங்கிற்று. தராசைத் தரையில் வைத்தான். ஒவ்வொரு மடித்த தாளாய் எடுத்துப் பிரித்துப் பார்த்தான். வீடுகளுக்கு ஜன்னல்கள் போல் ஒவ்வொரு தாளும் கத்தரிக்கப்பட்டிருந்தது.

''என்னம்மா தேனொழுகப் பேசினீங்க! மளிகைக் கடையில் நிறுத்துக் கட்டி வைத்திருக்கிறேன் என்று என்னை எடைகூடப் போட வேண்டாம் என்றீர்களே. இதை மறைக்கத்தானா?'' என்று கிழிக்கப்பட்ட தாள்களைக் கட்டிக் காட்டினான். வேலைக்காரி முன்னிலையில் தன் மானத்தை வாங்கிவிட்டானே என்று காமாட்சி யம்மாளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

''ஏதோ ஒன்று இரண்டு அப்படி இருக்கும். வேண்டாம் என்றால் போயேன். உன்னை எடுத்துக் கொண்டுதான் போக வேண்டும் என்று நிர்ப்பந்தப்படுத்தவில்லையே?'' என்று சமாளித்துக் கொண்டாள்.

''ஒன்று ரெண்டு இல்லேம்மா. எல்லாத் தாள்களுமே கிழிக்கப்பட்டிருக்கின்றன. மளிகைக் கடைக்காரன் என்றீர்களே அவனையே எடுத்துக் கொள்ளச் சொல்லுங்கள்'' என்று தராசைச் சுழற்றிக் கோணியில் வைத்துக் கொண்டு, ''பேப்போர், பேப்போர்'' என்று கத்திக் கொண்டே வீதி வழியே சென்றான்.

அவள் எதிரில் அழுகி அடக்கப்பட்ட கோபம் பீறிட்டுக் கொண்டு வந்தது

• எஸ்.வி. கிருஷ்ணமூர்த்தி •

காமாட்சி யம்மாளுக்கு. ''யாரடீ. இந்தப் பேப்பர்களை யெல்லாம் இந்த மாதிரி கிழித்தது?'' என்று இரைந்தாள். பக்கத்தில் நின்று கொண்டிருந்தது வேலைக்காரிதான். அவள் இவ்வளவு கலை நுணுக்கத்துடன் கத்தரி கொண்டு ஜன்னல் ஜன்னலாய் பேப்பரைக் கத்தரிக்க நியாயமில்லை. காமாட்சியம்மாள் பெண் கல்லூரிக்குப் போயிருந்தாள். பிள்ளை வேலையாய்ப் போயிருந்தான். யார் பேரில் கோபத்தை உபயோகிக்க முடியும்?

''அந்தப் பேப்பரை அப்படியே கட்டி இருந்த இடத்திலே கொண்டு போய் வை'' என்று வேலைக்காரிக்கு உத்தரவு பிறப்பித்து விட்டுக் காமாட்சி யம்மாள் உள்ளே போனாள். பழைய பேப்பர்க்காரன் அவள் பேச்சை ஒரு நொடியில் பொய்யாக்கிவிட்ட ரோசம் குமுறிக் கொண்டிருந்தது.

முகத்தில் எண்ணெய் வழிய, தபால்காரன் பைபோல் தோளிலிருந்த கறுப்புத் தோல் பை புத்தகங்களையும், டிபன்பாக்ஸையும் தாங்கி ஒரு புறம் அவள் தோளை இழுக்க, பௌதிகம் ஆங்கிலம், தமிழ் இலக்கியம், பொருளாதாரம் என்று அன்றைய பாடக் குப்பைகள் மூளையில் அடங்கிக் கிடக்க, காமாட்சியம்மாள் பெண் லாவண்யா இரும்புக் கேட்டைத் திறந்துகொண்டு அன்ன நடை போட்டுக் கொண்டு வீட்டினுள் நுழைந்தாள். அவள் செருப்பைக் கழற்றவில்லை; புத்தகப் பையை ஆணியில் தொங்கவிடவில்லை; முகத்தைக் கைக்குட்டையால் துடைத்துக் கொள்ளவில்லை;



'என்னம்மா டிபன்?' என்று கேட்கவில்லை. அதற்குள் அவள் தாயார் வார்த்தைக் கனல்களை அவள் பேரில் வீசி எறிந்தாள்.

''யாரடி அந்தக் கட்டிய பழம் பேப்பரைத் துண்டு துண்டாய்க் கிழித்தது?'' என்று உறுமலுடன் கேட்டாள். வெய்யிலில் வந்தது, பாடங்களின் மண்டை கனம், பசி எல்லாமாகச் சேர்ந்து அவளையும் தாயார் கோபத்துக்குச் சரிநிகராகப் பதிலுக்குச் சீற வைத்தன.

''யார் கிழிச்சான்னு? கிழிச்சவாளைப் போய்க் கேள்'' என்ற அர்த்த மற்ற பேச்சை வீசினாள் லாவண்யா.

''கிழித்தவள் தெரிந்தால் உன்னை ஏன் கேட்கிறேன், மக்கு, மக்கு'' என்று தாயார் பட்டம் சூட்டினாள்.

''எனக்கு ஒன்றும் தெரியாது. என்ன டிபன்?'' என்றாள் லாவண்யா.





LIFEBUOY
for health
லைப்பாய்
இருக்குமிடம்: அதுவே
ஆரோக்கியம்
இருக்குமிடம்
லைப்பாய் ஸ்நானம்-
பொழுதெல்லாம் தூய்மை-
புத்துணர்வோடு புதுமைப்
பொலிவு... பூரிக்கும் ஆரோக்கிய
நல்வாழ்வு- அளிப்பது லைப்பாய்.
அழுக்கிலுள்ள கிருமிகளைக்
கழுவிக் களைவது
லைப்பாய்

**''சமையலறை மேடையிலே உப்புமா இருக்கு எடுத்துக்கோ''** என்றாள் தாயார்.

''உப்புமாவா? அதைக் குப்பையிலே கொட்டிக்கோ'' என்று வீம்புக்குச் சொல்லி விட்டு முகம் கழுவப்போனான். உப்புமா இல்லே, கருங்கல்லாய் இருந்தாலும், பசி சாப்பிடத் தயாராய் இருந்தது. ஆனால் கோபம் தான் குறுக்கே நின்றுவிட்டதே!

''குடிக்கிறதற்காவது ஏதாவது இருக்கிறதா, அதுவும் இல்லையா?'' என்றான் இரண்டாம் பட்சமாக.

''என்ன என்ன கேள்வி? பாத்திரத்தில் பால் காய்ச்சி வைத்திருக்கிறேன். உனக்கு எது வேண்டுமோ அதைக் கரைத்துக்கொள்ளேன்'' என்று தாயார் சொல்லிக் கொண்டிருக்கும்போதே பின்னே வீட்டினுள் வந்தான்.

பேப்பர்க்காரனின் குத்தல் பேச்சு, பெண்ணின் ஏட்டிக்குப் போட்டி கோபம் இரண்டுமாகக் காமாட்சியம்மாளை எரிமலையாக்கிவிட்டிருந்தன. ஹாலில் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு அம்மாவின் மன நிலையைக் கவனிக்காதவனாய், ''அம்மா! பசி கொல்லுது! ஏதாவது கொண்டா!'' என்று இரைந்தான். காமாட்சியம்மாள் குண்டு பட்ட புலி போல் சீறி அவன் எதிரில் வந்து நின்றாள். லாவண்யா கையில் தம்ளருடன் அவர்கள் இருவரும் சந்திக்கப் போகும் காட்சியை ஆனந்தத்துடன் பார்க்கும் நோக்கத்தோடு ஹாலுக்கு வந்தாள். அம்மாவிடம் தான் வாங்கிக் கட்டிக் கொண்டது மாதிரி அண்ணன் ரவிக்கும் என்ன பட்டம் கிடைக்கப் போகிறது என்று எதிர்பார்க்கும் உத்ஸாகம்.

''உன் பசி கிடக்கட்டும். நான் மெனக்கட்டுக் கட்டி வைத்திருந்த பழைய பேப்பரை யார் எலி துருவுகிற மாதிரி கிழித்து வைத்திருக்கிறது?'' என்று இடுப்பில் கையை வைத்துக் கொண்டு பையன் எதிரில் சிப்பாய் போல் நின்றாள் தாயார்.

அவள் கேள்வியை அவன் லட்சியம் செய்யவில்லை. நாற்காலியை விட்டு எழுந்தான். சமையலறை மேடையில் லாவண்யாவுக்குக் குறிப்புச் சொன்ன மாதிரி ஓர் எவர்சில்வர் டப்பாவில் வைக்கப்பட்டிருந்த உப்புமாவை இரண்டு கை எடுத்து வாயில் போட்டுக் கொண்டான். கொல்லும் பசி கொஞ்சம் தணிந்தது. அந்த டப்பாவைக் கையில் எடுத்துக் கொண்டு மற்றொரு கையில் ஒரு ஸ்பூனும் வைத்துக் கொண்டு சிலையாய் நின்று கொண்டிருந்த அம்மாவுக்கு முன் நாற்காலியில் உட்கார்ந்தான். இன்னுமொரு ஸ்பூன் உப்புமா வாயில் சென்றது.

''அம்மா! அப்ப என்னமோ கேட்டியே, என்ன?'' என்று விஷயத்துக்கு வந்தான்.

தாயாருக்குப் பொங்கி வழிந்த கோபம் ஒரு நொடியில் மறந்து சிரித்து விட்டாள். பிள்ளைக்குத் தெரிந்த பின்னே.

''என்னம்மா, சித்தே முன்னே தாம்தூம்னு குதிச்சே. இப்ப சிரிக்கிறியே!'' என்று மற்றொரு வாய் உப்புமாவை உள்ளே தள்ளினான்.

''உன் அழகான தங்கை இருக்காளே, அவளைப் போய் உப்புமா எடுத்துக்கோமேன்னேன். அதைக் கொண்டு குப்பையிலே கொட்டுன்னு. இப்ப நீ அதை விழுங்கிக் கொண்டிருக்கிறாய். அதைப் பார்த்துச் சிரிப்பு வந்தது'' என்று பக்கத்தில் நின்று கொண்டிருந்த பெண்ணைப் பார்த்துச் சிரித்தாள் தாயார். கடைசியாகப் பாத்திரத்தைத் துடைத்து உப்புமாவைக் காலி செய்தான்.

''எல்லாத்தையுமாடா தின்னுட்டே..... அட, பகாசுரா? எனக்குத் துளிக்கூட வைக்கலையே...'' என்று லாவண்யா சிணுங்கினாள்.

''சோத்துக்கு முந்திக்கோ, மத்த எல்லாத்துக்கும் பிந்திக்கோ.''

''பார் அம்மா! ஒரு வாய்கூட வைக்காமல் கொட்டிண்டுட்டான். எனக்குப் பசி உயிர் போகிறது'' என்று பெண் கொஞ்சினாள்.

''அலமாரியிலே பிஸ்கட் வைத்திருக்கிறேன் டப்பாவிலே. போய் ரெண்டு எடுத்துக்கோ. சீக்கிரமே சமையல் பண்ணிவிடுகிறேன். சாப்பிட்டு விடலாம்'' என்று பெண்ணை அனுப்பினாள்.

''அம்மா, நான் வந்த போது என்னமோ கேட்டியே. அப்ப பசியிலே என் காதிலேயே விழலே.... என்னம்மா?'' என்று ரவி கேட்டான்.

''ஏண்டா, ரவி! பழைய பேப்பர் கட்டி வைத்திருந்தேனே. அதை யாரடா கிழித்து வைத்திருக்கிறது? பேப்பர்க்காரனிடம் போடலாம்னு எடுத்தால், என் மானம் போச்சு'' என்று தாயார் சொன்னாள்.

''எனக்கு ஒன்றுமே தெரியாதேம்மா. நான் பேப்பர் படிக்கிறதே தவிர கிழிக்கிறது கிடையாதம்மா'' என்று ஹாஸ்யமாய்ச் சொல்லி விட்டு மாலைச் சுற்றுலாவுக்குக் கிளம்பினான்.

தாயாருக்கு ஏமாற்றம். யார் அந்தப் பேப்பர்க் கட்டைக் கிழித்திருக்க முடியும் என்று நிர்ணயிக்க முடியவில்லை. கோபத்துக்குக் காரணம் அந்த மாதம் அவள் வருவாயில் இரண்டு ரூபாய் நஷ்டம். பேப்பர், பழைய டின்கள் வியாபாரத்தில் வரும் தொகை அவளைச் சார்ந்தது என்ற குடும்பப் பழக்கம் இருந்தது. தொகை கொஞ்சம் தான். இப்படிக் கிழிக்கப்பட்டு விட்டால் ஒவ்வொரு மாதமும் இதே வழக்கம் நீடிக்கவிடக் கூடாது என்ற எச்சரிக்கை.

''இந்த வீட்டிலே வைத்தது வைத்த இடத்தில் இருக்கிறதே கிடையாது'' என்று முணுமுணுத்துக் கொண்டே லாவண்யா தாயாரைக் கடந்து சென்றாள்.

''இப்ப என்ன முணுமுணுப்பு?'' என்று கேட்டாள் காமாட்சி.

''தையல் மிஷினில் வைத்திருந்த கத்திரிக்கோலைக் காணோம்'' என்று அவள் எரிச்சலுக்குக் காரணத்தை எடுத்துரைத்தாள்.

''உன்னைத் தவிர யார் அந்தத் தையல் மிஷினிடம் போகிறார்கள்? நீதான் ஞாபக மறதியாய் எங்கேயாவது வைத்து விட்டு முணுமுணுத்துக் கொட்டுவாய்!'' என்று தாயார் அவள் நினைவைத் தூண்டிப் பார்க்கச் சொல்ல, லாவண்யாவுக்கு ஞாபகம் பளிச்சென்று வந்தது.

''நீ சொல்றது சரிதான், அம்மா. போன வாரம் ரவி எதற்கோ கேட்டான்னு தந்தேன்'' என்று நினைவு வர லாவண்யா இரண்டெட்டில் மாடியில் ரவியின் அறையில் நுழைந்து மேசை டிராயரைத் துழாவினாள். அங்கு



''அறுபது மைலோ மீட்டர் வேகத்தில் போன என் கார் மரத்தில் மோதி....''

''அம்மம்மோ! அப்புறம்?''

''அப்புறம் என்ன? நாற்பது மைலோ வுக்கும் லோக்கு!''

இல்லே. அலமாரிக் கதவைத் திறந்தாள். பொல பொல வென்று கத்திரிக்கப்பட்ட தினசரித் தாள் துண்டுகள் அலமாரியிலிருந்து பறந்து அறையில் நாலாபக்கத்திலும் விழுந்தன.

''அம்மா, அம்மா, கண்டு பிடித்துவிட்டேன். இங்கே ஓடி வாயேன், சீக்கிரம்'' என்று மாடி அறையி லிருந்து இரைந்தாள்.

''என்னத்தையடீ, கண்டு பிடித்துவிட்டாய் ?'' என்று அறையைக் குனிந்து பார்த்தாள். பரவி யிருந்த பத்திரிகைத் துண்டுகள் அவளைப் பார்த்துக் கேலி செய்வது போல் இருந்தன.

''இப்பத் தெரிகிறதாம்மா, யார் பேப்பரைச் சுக்குநூறாகக் கத்திரித்து வைத்தது என்று ? இதுக்குத்தான் ரவி என்னைக் கத்திரி கேட்டான் போலிருக்கிறது'' என்று தாயாருக்கு ரவியின் விஷமத்தைச் சொன்னாள். மாடிப் படியில் ரவி ஏறி வரும் சத்தம் கேட்டது.

''இதெல்லாம் என்னடா, ரவி ! பைத்தியம்தான் துணியைக் கிழித்துப் போடும்னு சொல்லுவா. எதுக்கு இப்படிப் பத்திரிகைத் துண்டுகளைக் கத்திரித்து வைத்துக் கொண்டிருக்கிறாய்?'' என்று காமாட்சி ரவியைக் கேட்டாள். அவனுக்கு விபாண்டகர் மாதிரி கோபம் மூக்கின் நுனியில் ஊசலாடிற்று.

''என் அனுமதி இல்லாமல் யார் என் அறையில் நுழையச் சொன்னது? நீதானே இந்த விஷமம் பண்ணியது?'' என்று லாவண்யாவின் கையை இறுகப் பிடித்துத் தன் பக்கம் பயங்கரமாய் இழுத்தான்.

''அவளை ஏண்டா, துன்புறுத்தறே! அவள் என்ன செய்தாள்?'' என்று தாயார் பெண்ணைத் தன் பக்கம் இழுத்துக் கொண்டாள்.

''என் அறையை யார் குடைந்தது? ஏன் உள்ளே வரணும்னு கேட்கிறேன்?'' என்று மறுபடியும் இரைந்தான்.

''அன்னிக்குக் கத்திரி வாங்கிண்டு போனியே, ஏன் திருப்பிக் கொடுக்கலே? அது எனக்கு வேண்டியிருந்தது. வந்து தேடினேன். இந்தக் குப்பையெல்லாம் அலமாரியிலேயிருந்து விழுந்தது. என்னமோ ரொம்பவும் மிரட்டுறியே ?''

''நான் வந்த பிற்பாடு கத்திரி கேட்கிறது. அதுக்குள்ளே தலை போகிற அவசரமா? இனி மேல் என் அனுமதி இல்லாமல் யார் என் அறையில் நுழைந்தாலும் கை, கால்களை வெட்டி எறிவேன். ஞாபகம் இருக்கட்டும். முதல்லே அறையை விட்டு எல்லாரும் வெளியே போங்கள்'' என்று ஆவேசம் வந்தவன் போல் கத்தினான்.

''இந்தக் குப்பைக்கு என்னடா, அவ்வளவு கோபம் ?'' என்று தாயார் கேட்டாள்.

''நான் குப்பை வைத்திருப்பேன், கள்ளக் கடத்தல் சாமான்கள் திருட்டுத்தனமாய் வைத்திருப்பேன். நீங்க எதுக்கு உள்ளே வந்து துழாவணும். அதுக்கு முதலில் பதில் சொல்லுங்க.''

''சரிதாண்டா ! என் கத்திரியைக் கொடுடா. இந்தக் குப்பை அறைக்கு இனி மேல் யார் வர்றா?'' என்றாள் லாவண்யா.

''இந்தா'' என்று கத்திரிக்கோலைத் தரையில் எறிந்தான் ரவி.

''பேசாமல் வாடீ.... அதுக்கு இன்னிக்கு என்னமோ சைத்தான் பிடிச்சிருக்கு. அதோட வாதாடாதே.... வா !'' என்று காமாட்சி பெண்ணைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு கீழே இறங்கிப் போனாள்.

தரையில் நாலா மூலையிலும் பரந்து கிடந்த கத்திரித்த பத்திரிகைத் துண்டுகளை ரவி மறுபடியும் அடுக்கி அலமாரியில் வைத்துவிட்டு மட மடவென்று வீட்டை விட்டுப் போனான்.

''அறையில் போனதற்கு அந்தப் பிள்ளைக்கு என்ன அவ்வளவு கோபம் ? கள்ளக் கடத்தல்னு ஏதோ சொன்னானே அந்த வியவகாரத்திலே ஏதாவது ஈடுபட்டிருக்கிறானா?'' என்று தாயார் பெண்ணிடம் சந்தேகத்துடன் கேட்டாள்.

வெளியில் போன ரவி பத்து நிமிஷங்களில் திரும்பி வந்தான். மாடிப் படிகளில் விறு விறுவென்று ஏறினான்.

''லாவண்யா! மெதுவாய்ப் போய் என்ன பண்றான்னு பாருடீ'' என்று தாயார் பெண்ணிடம் மெதுவாகச் சொன்னாள். அவளும் பூனை போல் படியைப் பாதி ஏறி நின்று கொண்டு கவனித்தாள். புதிதாக வாங்கி வந்த பெரிய இரும்புப் பூட்டால் அறையின் கதவைச் சாத்தி இறுகப் பூட்டி, பர்லைத் திறந்து சாவியைப் பத்திரமாக வைத்துக் கொண்டான். அவன் திரும்புவதற்குள் லாவண்யா திரும்பி ஓடி வந்து காதோடு காதாய், ''அம்மா, பைத்தியம் அறைக்குப் பெரிய இரும்புப் பூட்டால் வாங்கிப் பூட்டி இருக்கு'' என்று சொல்லி முடிப்பதற்குள் ரவி விடுவிடு என்று வெளியே சென்றான்.

## 2

மறு நாள் சனிக்கிழமை. அரை நாளுடன் ரவியின் அலுவலகம் மூடப்பட்டது. ஆபீஸை விட்டு நேராக ஒப்பனைச் சாமான்கள் விற்கும் கடைக்குச் சென்று அரை டஜன் சீப்புகள், ஷாம்பூ முதலிய சாமான்களை வாங்கிக்

# உட்புறங்களுக்கும், வெளிப்புறங்களுக்கும் ஈடிணையற்ற அழகிற்கும், நிரந்தரத்தன்மைக்கும்...

**ஸில்விக்ரீட்**

ஏஸிஸி வெள்ளை சிமெண்ட்



ஸில்விக்ரீட் ஏஸிஸி வெள்ளை சிமெண்டை கண்கவர் பாணிகளிலும், வண்ணங்களிலும் அமைத்துக் கொள்ளலாம்; அதைக் கொண்டு டெகோரேடிவ் பேனல்களையும், டைல் அல்லது டெர்ராஸோ தரைகளையும், ஜாலிகளையும், கொடிவீடுகளையும் சுலபமாக அமைத்துக் கொள்ளலாம்.

அசல் போர்ட்லாந்து சிமெண்டின் உறுதியும், நீடித்து நிற்கும் தன்மையும் உடையதாக இருப்பதனால், அது நிரந்தரமானதாக விளங்குகிறது.

ஸில்விக்ரீட் எவ்வளவு வேண்டுமானாலும், அருகிலுள்ள சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட் கிளையிலோ, அவர்களுடைய விநியோகஸ்தர்களிடமோ கிடைக்கிறது.

ஸ்நோஸெம் மற்றும் கலர்க்ரீட்டின் தயாரிப்பில் மூலப் பொருளாக இருப்பது ஸில்விக்ரீட்.

**ஏஸிஸி** தரத்தில் உயர்ந்த தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்.

தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்.




# கண்களுக் கெட்டாத சிறப்புகள் பல கொண்டது “ஸான்ஃபரைஸ்டு” சின்னம்

''ஸான்ஃபரைஸ்டு'' சின்னம் சுருக்கத்திற்கு எதிரான பாதுகாப்பை உங்களுக்கு அளிக்கிறது. ''ஸான்ஃபரைஸ்டு'' முத்திரையிட்ட பருத்தி மற்றும் பருத்தி கலந்த துணிகளிலிருந்து தயாரிக்கப்படும் ஆடை அணிகள், எத்தனை தடவைகள் சலவை செய்தாலும் உருமாறுவதோ சுருங்குவதோ இல்லை.

''ஸான்ஃபரைஸ்டு'' முத்திரையிட்ட துணிகள் நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு நல்ல மதிப்பைப் பெறுவதற்கு உத்தரவாதம். ''ஸான்ஃபரைஸ்டு'' கலை நுட்பப் பிரதிநிதிகளின் சுருக்கத்திற்கெதிரான கடும் சோதனைகளில் தேறியவை இத் துணிகள். இந்த டிரேடு மார்க்கின் உரிமையாளர்கள் விதித்துள்ள தராதரங்களுக்கு உட்பட்ட துணிகள் இவை என்று உறுதி செய்வதற்காக அவர்கள் சோதனை செய்கிறார்கள், அளவெடுக்கிறார்கள், அளவுகளை ஒத்திட்டுப் பார்க்கிறார்கள், புள்ளி விவரங்களை சோதிக்கிறார்கள், குறிப்பெடுத்து அனுப்புகிறார்கள்.




'ஸான்ஃபரைஸ்ட்' என்னும் டிரேட் மார்க்கின் உரிமையாளர்களான க்ளுயெட், பீபாடி அண்ட் கோ. இன்க். (யு.எஸ்.ஏ.வில் வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் இணைக்கப்பட்டது) வெளியிட்டது. சுருங்காத்தன்மையின் கடுமையான தேவைகளைப் பூர்த்தி செய்யும், பரிசீலிக்கப்பட்ட துணிகளுக்கு மட்டுமே உரிமையாளர்கள் இந்த டிரேட் மார்க்கை உபயோகிக்கின்றனர் அல்லது பதிவு செய்யப்பட்ட உபயோகிப்பாளர்களை உபயோகிக்க அனுமதிக்கின்றனர்.

SAN. IAM.

கொண்டு ரவி வீட்டுக்கு வந்தான். தாயார் கொடுத்த டிபன், காப்பியை முடித்துக் கொண்டு குளியலறையில் குழாயைத் திருப்பி விட்டுத் தலை மயிருக்கு ஷாம்பூ போட்டு அலசித் துவாலையால் மொர மொரவென்று துவட்டித் தன் அறைக்குச் சென்று தாளிட்டுக் கொண்டான். இனி மேல்தான் அவன் ஆராய்ச்சி தொடரும்.

முன் தினம் அலமாரியிலிருந்து சிதறிய பத்திரிகைத் துண்டுகளை எடுத்து எதிரில் பரப்பிக் கொண்டான். சுமார் நூறு துண்டுகள் இருக்கலாம். எல்லாம் ஒவ்வொரு சாமான் கம்பெனியும் அதனுடைய விளம்பரத்துக்காக அவ்வப்பொழுது பிரசுரிக்கப்பட்ட விளம்பர மாடல்கள். புகைப்படம் தாங்கிய துண்டுகள். அவைகளை ஒவ்வொன்றாய்ப் பரிசீலனை செய்தான். ஒவ்வொன்றாய் எடுத்து முகத்துக்கு அருகிலும், தூரத்திலிருந்தும் அந்தப் புகைப்படங்களை எடை போட்டுப் பார்க்கும் பொழுது அவன் வாய் ஏதாவது முணுமுணுத்துக் கொண்டேயிருந்தது.

''இது நல்ல ஸ்டைல். கவர்ச்சி, கண்யம் கலந்திருக்கிறது'' என்று அந்த விளம்பரத் துண்டைப் பிரத்தியேகப் பக்கத்தில் ஒரு கையில் எடுத்து வைத்தான்.

''இந்த மாதிரி ஒப்பனைக்கு சான்ஸே கிடையாது'' என்று ஒன்றை வேண்டாத பைக்குள் திணித்தான்.

இப்படி ஏற்றத் தாழ்வுகளின் தாரதம்யத்தை ஆராய்ச்சி செய்து தான் கத்திரித்து வைத்திருந்த நூறு பத்திரிகைத் துண்டுகளில் முப்பதைத் தனிக் கவனத்துக்காகப் பிரித்து எடுத்து வைத்தான்.

இதற்குள் ஷாம்பூ துலக்கிய தலை மயிர் நன்றாய்க் காய்ந்து வைக்கோல் மாதிரி மொர மொரவென்று பரந்தது. முதலில் அவனுக்குப் பழக்கப்பட்ட தலைமயிர் அலங்காரப்படி வகிடு எடுத்து வாரி விட்டுக் கொண்டான்.

ரவி கற்பனைக்கு எல்லை போட முடியாமல் தவித்தான். அவன் கட்டியிருந்த கோட்டை அந்தத் துண்டுக் காகிதங்கள் தாங்கிய ஆடவர்களுடைய எல்லாக் கவர்ச்சி அம்சங்களையும் ஒருங்கே திரட்டித் தன் முகத்திலும், தலை மயிரிலும், அவனுக்கு எதிரில் நிற்கவிருக்கும் பெண்ணின் மனத்தைக் கொள்ளை கொள்ள வேண்டிய ஆணவத்திலும், இத்தியாதி செயற்கை ஒப்பனைகளில் இருந்தன. சுருங்கச் சொல்லின், ஒரு வாரத்துக்கு முந்தி வந்த ஒரு விளம்பரம்தான் இம்மாதிரி ரகசிய முயற்சிகளில் ரவியைத் தூண்டி, அம்மா கட்டி வைத்திருந்த பேப்பர்களிலிருந்த விளம்பர மாடல்களைத் தனக்கு மாடலாக இருக்கக் கத்திரித்து, சேகரித்து, தங்கையின் முன் அலமாரியிலிருந்து பறந்து விழுந்து அவன் பைத்தியக்காரத்தனத்தை அம்பலப்படுத்தி, அதை மூடி மறைக்கப் பெரிய இரும்புப் பூட்டாக வாங்கித் தன் அறையைப் பத்திரப்படுத்தி அவன் முயற்சியை யாரும் அறியாதபடி செய்யச் செய்தது.

அந்த விளம்பரத்தில் கண்டிருந்ததாவது :

இருபத்தைந்து முதல் முப்பது வயதுக்குட்பட்டவர்கள் கவர்ச்சியாய் அரை உடல் போஸ்களில் புகைப்படம் பிடித்து அனுப்பினால் அவர்களில் ஒருவரைப் பொறுக்கி எங்கள் செலவில் காஷ்மீரத்தில் ஒரு பதினைந்து நாட்கள் சுற்றுலாவுக்கு ஏற்பாடு செய்யப்படும். ஆடவர், பெண்டிர் இருவருமே அனுப்பி வைக்கலாம். அப்படித் தேர்ந்தெடுக்கப்படுகிற இருவரை ஜோடி சேர்த்து, ''இலட்சியத் தம்பதிகள்'' என்று முடிசூட்டு விழா பம்பாயில் நடக்கும். அதைத் தொடர்ந்து அவர்கள் படங்களை விளம்பரத்துக்காக உபயோகிப்பதற்காக மாதம் ஆயிரம் ரூபாய் நன்கொடை ஒரு வருடத்துக்கு அளிக்கப்படும். அந்த ஒரு வருடம் அவர்கள் வேறு எந்த நிறுவனத்துக்கும் விளம்பரத்துக்காகத் தங்கள் சேவையைத் தரக் கூடாது. ஜனங்களின் நன்மதிப்பு பெருவாய் இருந்தால் ஒரு வருட காண்டிராக்ட் இரண்டு வருடங்களுக்குக் கூடக் கையொப்பமிடப்படலாம்.''

இந்த குறி தட்டும் விளம்பரத்தைப் பார்த்ததிலிருந்துதான் ரவியின் மூளை விரைவில் வேலை செய்தது. தன் அழகின் அடிப்படையிலேயே ''இலட்சியத் தம்பதி'' பட்டம் கிடைக்க சான்ஸ் ரொம்பவும் குறைவு. விளம்பரத்தில் ஒரே கல்லில் இரண்டு பட்சிகள் வீழ்த்த சந்தர்ப்பம் அளிக்கப்பட்டிருக்கிறது. தான் ஆண் அழகன் என்று தேசம் முழுவதும் பறைசாற்றப்படும்.

அவன் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு புது முகத்துடன் காதல். காதலனாக நடித்து,



## விநோத சம்பிரதாயம்

குஜராத்திகளிடையே அண்ணியைக் கன்னத்தில் அறையும் அதிசயப் பழக்கம் இன்றும் இருக்கிறது. திருமணத்தைப் போலவே சீமந்தத்தையும் அவர்கள் மிகச் சிறப்பாக நடத்துகிறார்கள். சீமந்தம் நின் போதுதான் இந்தக் கன்னத்தில் அறையும் சடங்கைச் செய்கிறார்கள்.

அண்ணி முதலில் கணவனின் தம்பியின் கன்னத்தில் அறைய வேண்டும். பின்னர் அண்ணியின் கன்னத்தில் கொழுந்தன் அறைய வேண்டும். இந்தப் பழக்கத்துக்கு விசேஷ காரணம் இல்லாவிட்டாலும் மணப் பெண், தான் புகுந்த வீட்டிலும் அவர்களில் ஒருவராக அந்த வீட்டுப் பெண் போலவே சகஜமாக வாழ வேண்டும் என்பதை உணர்ந்த உரிமையுடன் இதைச் செய்வதாகக் கூறப்படுகிறது.

கேட்டு எழுதியவர்: ''லதா''

விவரித்தவர்: ''தன்ரூம் மால்''

புகைப்படம் பிடித்து, பத்திரிகைத் தம்பதியாய்த் திகழ்ந்து, காஷ்மீர் சுற்றுலா பெற்று, அப்படிக் காதல் செய்ய மாதம் ரூபாய் ஆயிரம் ஒரு வருடத்துக்குக் கிடைக்கிறதென்றால் ரவி செய்தது பைத்தியக்காரத்தனம் என்று எவனுக்குப்படும்?

புகைப்படங்கள் வந்தன. ஒவ்வொன்றையும் பார்க்கும்பொழுதும் உத்ஸாகம் ஊற்றெடுத்தது.

''இதற்குப் பரிசு இல்லை என்றால் தேர்ந்தெடுக்கும் குழுவுக்குக் கண்ணில்லை என்றுதான் அர்த்தம்'' என்று தன் உருவத்தின் கவர்ச்சியில் அவனே மயங்கிப் போனான். ஒப்பனையாளரின் கைவண்ணம்; காமிராவின் கலை வண்ணம்; படம் எடுத்த கோணத்தின் கவர்ச்சி; விளக்குகளின் ஒளி வண்ணம் ; எல்லாவற்றுக்கும் மேலாக அவன் இதயத்தில் பரிசைத் தட்டிவிட வேண்டும் என்ற ஆசையின் பிரதிபலிப்பு அவன் ஒவ்வோர் அங்கத்திலும் வனப்பு ஊட்டியிருந்தது.

''இந்த ஆணழகனுக்கு எந்த வனிதை விளம்பர ஜோடியாக வரக் காத்துக் கொண்டிருக்கிறாளோ?'' என்று தன் அழகுடன் ஒன்றி வரவேண்டிய பெண்ணின் கற்பனை உருவத்தையும் அவன் மனத்தில் பொருத்திப் பார்த்தான்.

புகைப்படங்களை அனுப்புவதற்கு முன் தமிழ் காலண்டரில் ராகு காலம், சித்த யோகம் முதலிய பழைய சகுனங்களைப் பார்த்தான். பஞ்சாங்கத்தை வைத்துக் கொண்டு கண்ணை மூடிக் கொண்டு ஒரு கட்டத்தில் விரலை வைத்துப் பலனைப் படித்துப் பார்த்தான். ஞாயிறு மலரில் அந்த வாரத்துக்கு அவன் நட்சத்திரத்துக்குக் கொடுக்கப்பட்டிருந்த வார பலனைப் படித்தான். அறையிலிருந்து கீழே இறங்கினான். சுற்றுமுற்றும் பார்த்தான். தாயார் தூங்கிக் கொண்டிருந்தாள். லாவண்யா அவள் அறையில் படித்துக் கொண்டிருந்தாள். விறுவிறு என்று தபால் ஆபீசுக்கு ஓடி, ஆணழகன் புகைப்படக் கவரை ரிஜிஸ்தர் செய்து பம்பாய் கம்பெனியின் விலாசத்துக்கு அனுப்பி வைத்தான். அவன் தொடங்கிய முயற்சி ஒரு குறையுமில்லாமல் முழு மனத்துடன் செய்து முடிக்கப்பட்டது. அதற்கு மேல் நடக்க வேண்டியது கம்பெனிக்காரர்கள் நியமித்திருந்த 'போட்டோ பரிசீலனைக் குழு'வின் கையில் இருந்தது.

அவன் எடுத்துக் கொண்ட காரியத்தை ஒருவருக்கும் தெரியாமல் செய்து முடித்தான். வேலையும் முடிந்தது. அறையைப் பூட்டுவதையும் நிறுத்தினான். அலமாரியில் கத்திரித்து வைத்திருந்த துண்டுகள் கிடந்தன. அதில் இப்பொழுது யாருக்கும் அக்கறை இல்லை.

'' அம்மா! ரவி இப்ப அறையைப் பூட்டுவதையே காணோமே?'' என்று லாவண்யா தாயாரிடம் சொன்னாள்.

'' அன்று அவனுக்கு ஏதோ கோபம். இரண்டு மூன்று நாட்கள் பூட்டி வைத்தான். எவ்வளவு நாட்கள் மூக்கின் நுனியிலேயே கோபம் கூத்தாடும் ?'' என்று தாயார் விளக்கம் கூறினாள்.

பம்பாய் கம்பெனி விலாசத்துக்கு அனுப்பப்பட்ட ரிஜிஸ்தர் புகைப்படக் கவர் போய் ஒரு மாதத்துக்கு மேல் ஆகிவிட்டது. வெளிநாட்டு டூரிஸ்டுகளுக்காக அவ்வப்பொழுது பிரசுரிக்கப்பட்டு வந்த காஷ்மீரக் காட்சிகள் ரவியின் உள்ளத்தில் உத்ஸாகத்தையும், ஏக்கத்தையும் ஏமாற்றத்தையும் மாறி மாறித் தூண்டி வந்தன. இப்பொழுதெல்லாம் லாவண்யாவுக்கும், ரவிக்கும் ரொம்பவும் பேச்சு வார்த்தைகளோ, விவாதங்களோ கிடையாது. லாவண்யாவைப் பொறுத்த மட்டில் அவனை வம்புக்கு இழுக்க எவ்வளவோ பாடுபட்டாள். ரவிதான் நாவை அடக்கி வைத்துக் கொண்டிருந்தான். அசந்த நேரத்தில் தன் பிரயத்தனம் பகிரங்கமாகிவிடப் போகிறதே என்ற பயம். ரவியின் முயற்சியும் தெரிந்து, அவன் தேர்ந்தெடுக்கப்படவும் இல்லை என்று ஆகிவிட்டால் லாவண்யாவின் வாயில் விழுந்தெழுந்திருக்க வேண்டி வரும். இவ்வளவு முன் எச்சரிக்கையுடன் ரவி வீட்டவருடன் நடந்து கொண்டான்.

நாட்கள் செல்லச் செல்ல ஆர்வம் குறைந்து கொண்டு வந்தது. ''சரி, நான் கொடுத்து வைக்கவில்லை'' என்ற வேதாந்தம் ஊர்ஜிதம் அடைந்து வந்தது. என்றையும் போல் அலுவலகம் போனான். லாவண்யா சற்றுத் தாமதித்துக் கல்லூரிக்குக் கிளம்பினாள். அவள் கேட்டைத் தாண்டவும், தபால்காரர் ரவியின் பெயருக்கு ரிஜிஸ்தர் தபால் வந்திருக்கிறதென்று சொன்னார்.

'' ரவி வெளியே போயிருக்கிறான். நான் கையெழுத்துப் போட்டு வாங்கிக் கொள்ளலாமா ?'' என்று அதன்படி கவரை வாங்கி வீட்டினுள் நுழைந்தாள் லாவண்யா.

''அம்மா! ரவிக்கு ரிஜிஸ்தர் தபால்'' என்று இரைந்தாள்.

''என்னவென்றுதான் பாரேன். ஏதாவது முக்கியமாய் இருந்தால் அவனுக்கு டெலிபோனாவது பண்ணலாம்'' என்றாள்.

லாவண்யா கவரைப் பிரித்தாள். அதில இந்தியப் போட்டியில் ரவிதான் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதாகவும், அவன் சென்னை கிளை ஆபீஸில் நேரில் போய் பம்பாய் வர வேண்டிய தினத்தையும், அங்கிருந்து காஷ்மீர் பயணத்துக்குச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாட்டையும் தெரிந்து கொள்ளும்படி கண்டிருந்தது.

''அம்மா!....'' என்று ஆச்சரியத்தில் லாவண்யா தாயாரைக் கட்டிக் கொண்டாள். குதூகலமான செய்தியைத் தாயாருடன் பகிர்ந்து கொண்டு, ''ரவி ஆனாலும் அழுத்தமான ஆசாமிதான், அம்மா. யாருக்கும் தெரியாமல் செய்திருக்கிறான் பாரேன். இப்ப தெரியறது அவன் கிராப்புக்கும், மீசைக்கும் காரணம்'' என்று லாவண்யா சொல்லிக் கொண்டே இருக்கும் போது அவளுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. ''லாவண்யா ! குழந்தைக்கு டெலிபோன் பண்ணிச் சொல்லுடீ. ரொம்பவும் சந்தோஷப்படும்'' என்று தாயார் கெஞ்சினாள்.

'' நீ பேசாமல் இரும்மா. நான் வேறே பிளான் பண்ணியிருக்கேன். சாயங்காலம் நல்ல ஸ்வீட், காரம் பண்ணி வையேன்..... பத்துப் பேருக்குன்னு வைச்சிக்கோ'' என்று

# க்ருஷென் எந்த வயதிலும் உங்களை 'இளமையோடு' இருக்கச் செய்கிறது






க்ருஷென் ஆறு முக்கிய மான தாது உப்புக் களின் சேர்க்கை இது :

- மூத்திரப்பைகளைக் கழுவுகிறது
- ஈரலை நன்றாக இயங்கச் செய்கிறது
- இரத்தத்தை சுத்த மாக்க உதவுகிறது
- மலச்சிக்கல் அகல உதவுகிறது
- ஜீரண சக்தியைப் பெருக்குகிறது
- பசியெடுக்க வைக் கிறது
- மூட்டு வலிகளை அகற்றுகிறது

**க்ருஷென்**

சாப்பிட்டு இளமையுடன் இருங்கள்.

KS.G.16. TH



கோவை விளம்பர ஆலோசகர் ஓ. எஸ். ராமசாமியின் மகள் **லட்சுமிக்கும், வி. சுதர்சனத்துக்**கும், பழனியில் திருமணம் நடைபெற்றது. திருமணத்துக்கும், கோவை, ஹோட்டல் சீதாராமில் நடைபெற்ற வரவேற்புக்கும் ஏராளமான நண்பர்களும், உறவினர்களும், பிரமுகர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

வாழ்க மணமக்கள் !

# மூல நோயை

முற்றவிடாமல் நம்பிக்கையான

## ஹெடன்ஸா

உபயோகித்து நிவாரணம் அடையுங்கள்;

—ரண சிகிச்சையையும் தடுங்கள்

கவரை எடுத்துக் கொண்டு கல்லூரிக்குப் போய் விட்டாள்.

அவள் அண்ணனின் அதிர்ஷ்டம் அவள் நெருங்கிய தோழிகளுக்குச் சொல்லப்பட்டது. அவள் தன் திட்டத்தையும் விவரித்தாள். அதை எப்படிச் செயல்படுத்துவது என்று லாவண்யா அவள் சிநேகிதிகளைக் கலந்து ஆலோசித்தாள்.

''பிரமாதம்...நாங்கள் அதற்குத் தயார்'' என்று மாலை கல்லூரிக்கு அன்று மட்டம் போட்டுவிட்டு எல்லோரும் நான்கு மணிக்கு வீடு வந்து சேர்ந்தார்கள்.

''எங்கள் திட்டம் முடியும் வரை நீங்கள் வாய் திறக்கக் கூடாது'' என்று லாவண்யா தாயாரைக் கேட்டுக் கொண்டாள்.

''மாமீ, பிளீஸ்...'' என்று மற்ற மாணவிகளும் கெஞ்சினர்.

ரவி வீட்டினுள் நுழைந்தான். ஒரே கல்லூரி மாணவிகள் கோஷ்டி. லாவண்யாவின் கும்பல் அரட்டை அடிக்க வந்துவிட்டது என்று நினைத்துக் காப்பி குடித்தான்.

''ரவி..இப்படிக் கொஞ்சம் வாயேன். என் சிநேகிதிகள் உன்னைக் கொஞ்சம் பார்க்கணுமாம்'' என்று அவனை அழைத்துக் கொண்டு அறைக்குப் போனாள். இருபுறமும் கல்லூரி மாணவிகள் நின்று அணிவகுப்பு மரியாதை போல் செய்தனர். கோடியில் சிம்மாசனம் போல் அலங்கரிக்கப்பட்ட நாற்காலியில் அவனை உட்காரச் சொன்னார்கள். ஏதோ கிண்டல் செய்து தன்னைப் பைத்தியக்காரனாய்ச் செய்கிறார்கள் என்று பட்டது அவனுக்கு. பத்து பெண்களுக்கு நடுவில் அவன் சிடுசிடுப்பைக் காட்டிக் கொள்ளக் கூடாது என்றும், இந்த விஷம விளையாட்டை நகைச்சுவையுடன் எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் அவன் அதற்கு இசைந்தான். நான்கு மாணவிகள் ஓர் அட்டைப் பெட்டியிலிருந்து பளபளக்கும் பொம்மைக் கிரீடம் ஒன்றை எடுத்து அவன் தலையில் வைத்தார்கள். மற்றொருத்தி ரிஜிஸ்தர் தபாலில் வந்திருந்த கடிதத்தை வார்த்தை வார்த்தையாய் நிறுத்தி, அழுத்தம் திருத்தமாய்ப் படித்தாள். முடிந்ததுதான் தாமதம் பலமாகக் கை கொட்டி, ''த்ரீ சியர்ஸ் டு பிரைஸ் பாய்'' என்று கோஷமிட்டனர்.

ரவிக்கு அப்பொழுதுதான் லாவண்யாவின் விஷமம் புரிந்தது. இதயம் சந்தோஷத்தில் விரிந்தது; முகத்தில்தான் அசடு வழிந்தது; கற்பனை காஷ்மீர்க் காட்சிகளைக் கவ்வியது.

3

''ரவி! அந்தக் கம்பெனிக்கு எந்த போஸ் புகைப்படங்களை அனுப்பினாயடா?'' என்று தாயார் பெருமிதத்துடன் கேட்டாள். நம் குடும்ப வழக்கப்படி நிச்சய தாம்பூல வைபவம் முடிந்து சொஜ்ஜி, பஜ்ஜி உண்ணுவது போல் ஹாலில் லாவண்யாவும், அவள் சிநேகிதிகளும் அளவாய் நறுக்கப்பட்ட வாழை இலைகளில் கோதுமை ஹல்வாத் துண்டையும், வெஜிடபிள் சோமாஸையும் ருசி பார்த்துக் கொண்டிருந்தனர். அவனைக் கேட்ட கேள்வி அங்கு டிபன் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பெண்கள் மனத்தில் என்னென்ன சித்திரம்




''ஒண்ணுமில்லே. மாடியிலே குடியிருக்கிறவங்க 'கிச்சன் கார்டன்' போட்டிருக்காங்க. அந்தச் செடிகளோட வேர்தான் இது!''

களை எழுப்பி இதயக் கரையில் மோத வைக்கும் என்று காமாட்சிக்குத் தோன்றவேயில்லை. ரவி சற்று வெட்கத்தில் தயங்கினான்.

''என்னடா அம்மா கேட்கிறாளே, ரொம்பவும்தான் ராங்கி பண்ணுகிறான்....'' என்று லாவண்யா தூண்டினாள்.

ரவி அவன் அறைக்குப் போய் பம்பாய்க்கு அனுப்பிய புகைப்படங்கள் போகப் பாக்கியை எடுத்துக்கொண்டு ஹாலுக்கு வந்தான். லாவண்யா குழுவினர் காப்பியை அருந்தி ரவியின் 'பரிசு முகத்தை'ப் பார்க்க ஆயத்தமாயினர். வட்ட மேசையை நடுவில் போட்டு அதைச் சுற்றி நாற்காலிகளில், மோடாக்களில், ஸ்டூல்களில் உட்கார்ந்தனர். இடம் இல்லாதவர் ஜன்னல் தளத்தில் உட்கார்ந்து கொண்டனர்.

'' ரவி ! இவ்வளவு போஸ்களா எடுத்துக் கொண்டாய்? மாதச் சம்பளத்தில் பாதிக்கு மேல் அவுட்டாகி யிருக்குமே ?'' என்றாள் லாவண்யா.

''போட்ட பணத்துக்குப் பலன் பார்த்தியா? மாதம் ஆயிரம் ரூபாய் வீதம் ஒரு வருஷத்துக்கு. காஷ்மீர் சுற்றுலா...... சும்மாவா லாவண்யா ?'' என்றாள் லாவண்யாவின் தோழி ஒருத்தி.

''இந்த ஸ்டைல் ரொம்பக் கவர்ச்சியாக இல்லே?'' என்று ஒரு படத்தை எடுத்து மற்றவர்களுக்குக் காட்டினாள் ஷோபா. கலைவடிவில் செதுக்கப்பட்ட பெண் பதுமைக்குத்தான் அப்படிப்பட்ட கலை நுணுக்கத்துடன் தேர்ந்தெடுக்க முடியும். ரவி ஷோபாவின் கலைத் திறனை வெகுவாய் ரசித்தான். அந்தப் புகைப்படம் தான் பொறுக்கிய ஆறில் ஒன்றாக இருக்க வேண்டும் என்பது அவனுடைய ஆசை. ஆனால், நாகரிக நியதிப்படி பார்த்தால் அந்தப் படம் விளம்பரத்துக்கு எடுபடாது என்று தோன்றியதன் காரணத்தால் அதை அனுப்பவில்லை. மற்ற எல்லாவற்றையும்விட அதுதான் அவனுக்குப் பிடித்திருந்தது. அவன் அறையில் புத்தக ராக் மேல்

வெள்ளிச் சட்டத்தில் போட்டு வைக்க எண்ணியிருந்த படம் அதுதான். படங்கள் கை மாறி மாறி விமர்சனம் செய்யப்பட்டு எல்லாமாகக் கவரில் போடப்பட்டு ரவியினிடம் கொடுக்கப்பட்டது.

"லாவண்யா! உல்லாசமாக மாலைப் பொழுது போகச் சந்தர்ப்பம் அளித்ததற்கு ரொம்ப நன்றி. குட்லக் மிஸ்டர் ரவி" என்று நன்றியையும், வாழ்த்தையும் சிந்தி விட்டுப் பட்டாம் பூச்சிக் கூட்டம் ரவியின் வீட்டை விட்டுக் கிளம்பியது.

"ஏண்டா ரவி! எங்களிடம் ஒரு வார்த்தை சொல்லாமல் செய்து விட்டாயேடா" என்று தாயார் பிள்ளையின் அதிர்ஷ்டத்தில் அமிழ்ந்தவளாய்க் கேட்டாள்.

"எனக்குக் கிடைக்கலேன்று வைச்சுக்கோ. நீயும், லாவண்யாவும் சேர்ந்து என்னை எப்படிக் கோட்டா செய்வீங்க? அதனாலேதான்" என்று பதில் சொன்னான் ரவி.

"ரவி! உனக்கு இது கிடைத்ததே. எனக்கு என்னடா பரிசு தரப் போறே?" என்று சிணுங்கினாள் லாவண்யா.

"நல்ல வெள்ளியிலே செய்த கத்திரிக்கோலாய் வாங்கித் தரேன்."

"எனக்கு இந்தக் கிண்டல்தானே பிடிக்கிறதில்லே. நான் ஸீரியஸாக் கேட்கிறேன்."

"நானும் ஸீரியஸ்ஸாத்தான் பதில் சொல்றேன். நீ தந்த துருப்பிடித்த கத்திரியால் தானே எனக்குப் பரிசு கிடைத்தது!"

"ஏண்டா ரவி. அப்படியானா எனக்குப் பழைய பேப்பர் கட்டு வாங்கித் தருவியா?" என்று தாயார் நகைச்சுவையில் கேட்டாள்.

"பேப்பர் கட்டுக்கு நானெங்கே போவேன்? அதுக்கு உனக்கு எவ்வளவு வந்திருக்கும்? இரண்டு ரூபாயா? போனாப் போறது தாராளமாய் இரண்டு ரூபாய் ஐம்பது பைசா தந்து விடுகிறேன்."

"அந்த ஐம்பது பைசாதான் எதற்கு?"

"உன் பேப்பர் குப்பையைக் கத்திரித்ததற்கு."

கடிதம் வந்த தினத்திலிருந்து ரவியின் வீட்டில் இந்த மாதிரி ஹாஸ்யத்திலேயே அம்மா–பிள்ளை–பெண் சம்பாஷணை நடந்து கொண்டிருந்தது.

அன்றிரவு சாப்பாட்டை முடித்துக் கொண்டு ரவி அவன் அறையில் பம்பாய்ப் பயணம், காஷ்மீர் சுற்றுலா இவைகளைப் பற்றிய எண்ணங்களில் மிதந்து கொண்டிருந்தான். அலுவலகத்தில் என்ன காரணம் சொல்லி அனுமதி கேட்பது? நிஜத்தைச் சொன்னால் லீவு கொடுப்பார்களா? 'உனக்குத்தான் ஆயிரம் ரூபாய் வரப் போகிறதே? எங்கள் நிறுவனத்தில் எங்கே தங்கப் போகிறாய்?' என்றுதான் சொல்லுவார்கள். பொய்க் காரணம் கூறி அப்பொழுது தப்பித்துக் கொண்டால் பத்திரிகைகளில் அவன் புகைப்படம் பிரமாதமாய்ப் பிரசுரமானால் அதைப் பார்க்க மாட்டார்களா? அப்பொழுது 'பரிசு முகத்தை' எங்கே கொண்டு போய் வைத்துக் கொள்வது? ஒரு வருஷம் மாதம் ஆயிரம் வருகிறதென்று இப்பொழுது ராஜிநாமாச் செய்து விட்டால் வருஷ முடிவில் யார் வேலை கொடுப்பார்கள்? எப்படிப் பார்த்தாலும் ஓர் இக்கட்டு எதிர்ப்பட்டது. அதற்கு வழி ஒன்றும் உடனே புலப்படவில்லை. அதை வேறு சமயம் பார்த்துக் கொள்ளலாம் என்று பிரச்சினையைத் தள்ளி வைத்தான்.

**ம**றுநாள் ரவி மதராஸ் கிளை ஆபீஸுக்குப் போய் அவன் பயணத்துக்கு என்னென்ன ஏற்பாடுகள் செய்யுமாறு பம்பாய் அலுவலகத்திலிருந்து குறிப்புகள் வந்திருக்கின்றன என்று தெரிந்து கொள்வதற்காகச் சென்றான். அவன் பெயர் அச்சிடப்பட்ட விஸிட்டிங் கார்டைக் கொடுத்து அனுப்பினான்.

"உள்ளே செல்லுங்கள்" என்று மானேஜர் அறையின் கதவைத்திறந்துவிட்டான் சிப்பந்தி.

"குட் மார்னிங்" என்று முகமன் கூறி, தான் வந்த விஷயத்தைச் சொன்னான்.

"எங்களுக்கு அதைப் பற்றித் தகவல் வந்திருக்கிறது. அடுத்த வாரம் நீங்கள் கிளம்ப வேண்டும். விமானத்துக்கு டிக்கட் புக் செய்துவிடுகிறோம். பம்பாய் சென்ற பின் அந்த அலுவலகத்தில் காஷ்மீர் போவதைப் பற்றிய ஏற்பாட்டைத் தெரிந்து கொள்ளலாம். பம்பாயில் ஒரு முதல் தர ஹோட்டலில் பத்தாம் நம்பர் அறை ரிசர்வ் செய்யப் பட்டிருக்கிறது. அடுத்த சனிக்கிழமை காலை பத்தரை மணிக்கு இங்கு வந்து விடுங்கள். இங்கிருந்து விமான நிலயத்துக்கு நாங்களே உங்களை அழைத்துப் போக ஏற்பாடாகி யிருக்கிறது" என்று கம்பெனி மானேஜர் என்ற ஹோதாவில் வியாபார ரீதியில் படபடவென்று எல்லா ஏற்பாடுகளையும் சொன்னார் அவர்.

ரவிக்கு ஒரு கேள்வியைக் கேட்க வேண்டும் என்று அவா. தன்னுடன் இலட்சியத் தம்பதியாய்ச் சேரப் போகும் பெண் யார் என்று தெரிந்து கொள்ளும் துடிப்பு. கேட்டால் கௌரவமாய் இருக்காதோ என்ற சந்தேகம்.

"உங்கள் அலுவலகத்திலிருந்து யாராவது கூட வருகிறார்களா?" என்று மறைமுகமாகக் கேட்டான் ரவி. மானேஜர் அவன் கேள்வியில் தொக்கி நின்ற பொருளைப் புரிந்து கொண்டவர் போல், "நீங்கள் மட்டும்தான் இங்கிருந்து போகிறீர்கள். உங்களுக்குத் துணையாய் யார் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள் என்று எங்களுக்குத் தெரியாதே. சனிக்கிழமை பத்து மணி...ஓ.கே." என்று கச்சிதமாகச் சொல்லிப் பொத்தானை அழுத்தி, சிப்பந்தியிடம் குளிர்ந்த பானம் கொண்டு வரச் சொல்லி ரவிக்குக் கொடுத்தார். அதைக் குடித்துவிட்டுக் கிளம்பத் தயாரானான். அப்பொழுதுதான் மானேஜர் அவன் தீர்க்காத பிரச்சினையைக் கிளப்பினார்.

"உங்கள் சார்பில் கிளம்ப வேண்டியதற்கு ஏற்பாடு செய்தாய் விட்டதா? என்னைத் தப்பாய் நினைக்க மாட்டீர்கள் என்றால், நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், உங்கள் ஏற்பாடுகளையும் தெரிந்து கொண்டு தான் என் தலைமை அலுவலகத்துக்குப் பதில் தெரிவிக்க வேண்டும்" என்றார்.

"அதுதான் ஸார் தீர்மானிக்கவில்லை. ரஜா கேட்டால் கொடுக்க மாட்டார்கள். ராஜிநாமாதான் செய்ய வேண்டும். அதைப் பற்றித்தான் யோசனை" என்று முகவாயைத் தடவியபடி அவர் ஏதாவது புத்திமதி சொல்ல

# வெல்டிங் ஒரு மூன்றெழுத்து வார்த்தை

*அதற்குச் சிறிது விளக்கம் தேவை*

அந்த மூன்று எழுத்துக்கள் ஐஓஎல் என்பது தெளிவு. ஏனெனில் ஐஓஎல் (இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட்) வெல்டிங் தொழில் நுட்பத்தில் முன்னேற்றத்துக்கு எப்போதும் முன்னோடியாக இருந்து, இந்த நாட்டில் புதிய வெல்டிங் உத்திகளை புகுத்தியுள்ளது. அதே சமயத்தில் ஐஓஎல் நம் நாட்டிலேயே பலவகை வெல்டிங் சாதனங்களையும் அதற்குச் சம்பந்தமுள்ள வேறு பொருள்களையும் செய்துள்ளதோடு வேறு எங்கும் உள்ள சிறந்த தொழில் நுட்பவாதிகளுக்குச் சமமான வெல்டிங் தொழில் நுட்பவாதிகள் பலரையும் பயிற்றுவித்துள்ளது.

இன்று நாட்டின் ஒவ்வொரு பெரிய தொழில் பிரதேசத்திலும் 60-க்கும் அதிகமான தொழிற்கூடங்கள், அலுவலகங்கள், டிப்போக்கள், கம்பிரஸிங் நிலையங்களை நிறுவி செயல்பட்டு வருகிறது. ஒரு விரிவான வினியோகிப்புப் பணியையும் அது செய்து வருகிறது. வெல்டிங் சம்பந்தமாக எழக்கூடிய எந்த ஒரு பிரச்னையையும் தீர்த்து வைக்கும் இந்தியா முழுதும் ஐஓஎல் தொழில் நுட்ப நிபுணர்களும், சர்வீஸ் என்ஜினீயர்களும் பணியாற்றுகின்றனர்.

வெல்டிங் துறையில் முதல்வர்கள் :

IOL

IOC-1738 TAM

முடியுமா என்று கேட்கும் தோரணையில் அவரைப் பார்த்தான்.

''அப்படியா? இதிலெல்லாம் 'ரிஸ்க்' எடுத்தால்தான் முடியும். உங்கள் புகைப்படம் பிரகாரமாகி ஒரு வருஷம் ஆயிரம் ரூபாய் வாங்கி, அதற்குள் விளம்பரத் துறையிலேயே நுழைந்து விடலாமே. ஒரு வருடத்தில் என்ன நடக்க விருக்கிறது என்று யார் கண்டார்கள்? பணத்தைப் பற்றி அதுவரையிலும் கவலையில்லை. அப்படி இருக்க ஜாலியாய் காஷ்மீர் சுற்றி வாருங்கள். வேலையில்லாக் கவலையையும் உங்களுடனேயே தூக்கிக் கொண்டு போவானேன்? கோஅஹெட்'' என்று சுலபமாய்ச் சொல்லி விட்டார். அவர் சொன்னதிலும் நியாயம் இருப்பதாகத்தான் பட்டது. அவர் மாதிரியே அவன் தாயாரும் நினைப்பாளா என்ற எண்ணம் தலை தூக்கிற்று. அவர் அறையில் இருந்து கொண்டு தன் சொந்தப் பிரச்னையை விவாதிப்பது நாகரிகமில்லை என்று தோன்றிற்று. இப்படியே குழம்பிக் கொண்டு போனால் கழுதை விற்றவன் கதைதான் என்று தீர்மானித்துக்கொண்டான்.

''நீங்கள் சொல்வது சரிதான். அப்படியும் ஏதாவது உதவி வேண்டுமென்றால் உங்களை அணுகுகிறேன். இதே விளம்பர லைனில் இருக்கிறீர்கள்'' என்று தன் சஞ்சலத்தைக் கடக்க ஒரு துடுப்பு போல் அவரையும் அவன் தனிப் பிரச்னையில் இழுத்து விட்டுக் கொண்டான். ''செய்யுங்கள்'' என்று விடை கொடுத்து அனுப்பினார்.

நேராக அவன் சேவை செய்யும் ஆபீசுக்குப் போனான். ''கால் கடுதாசி'' என்று சொல்வார்களே அதைக் கையொப்பமிட்டுக் கொடுத்து விட்டு மேலதிகாரியையும் கண்டு ஏதோ முன்னுக்குப் பின் முரணைக் காரணம் சொல்லி ராஜிநாமாவை ஏற்கும்படி செய்து வீட்டுக்கு வந்தான். பரிசு கிடைத்தது; வேலை போயிற்று என்ற இரு குரல்கள் மாறி மாறி இடித்துக் காட்டின.

''என்னடா ரவி! பம்பாய்க் கம்பெனியின் கிளை ஆபீசுக்குப் போகணும்னு சொன்னியே போனாயா?'' என்று காமாட்சியம்மாள் கேட்டாள்.

''போயிருந்தேன் அம்மா, சனிக்கிழமை கிளம்பணுமாம். அவர்கள் ஆபீசுக்குப் பத்து மணிக்கு வந்து விட வேண்டுமாம். பம்பாயில் ஒரு பெரிய ஹோட்டலில் அறை ரிசர்வ் செய்திருக்கிறார்கள். அங்கு போன பின்புதான் மற்ற ஏற்பாடுகள் தெரியும்'' என்று சொன்னான்.

''அப்ப ஆபீசுக்கு லீவு போட்டு விட்டாயா?''



''ஹெட்கிளார்க் பிரமோஷனைதற்கு பார்ட்டி கொடுத்தீர்கள். பழைய மானேஜர் டிரான்ஸ்ஃபர் ஆனதற்கும் பார்ட்டி அளித்தீர்கள். டைப்பிஸ்ட் வனஜாவுக்குக் கல்யாணமானதற்கும் தடபுடலாக விருந்து வைத்தீர்கள்...இப்ப என்னை டிஸ்மிஸ் பண்ணிட்டாங்களே! எல்லாருமாச் சேர்ந்து இதற்கும் ஒரு பார்ட்டி கொடுங்களேன். சாப்பிட்டுவிட்டுப் போகிறேன்.''

''ராஜிநாமா செய்துவிட்டேன்'' என்றான். பட்டுக் கத்திரித்தாற்போல்.

''ஹாங்... ராஜிநாமாச் செய்துவிட்டாயா? அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதையாகி விடப் போகிறதேடா'' என்று கவலை தோய்ந்த முகத்துடன் கேட்டாள். பையனுக்கு அடித்த அதிர்ஷ்டத்தில் ஒருவாரமாக மேக மண்டலத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தவனைத் தடால் என்று தரைக்குத் தள்ளியது அவன் பதில். வாழ்க்கையில் சுக துக்கத்துக்கு அளவுகோல் ஒருவன் வேலைதான் என்னும் அடிப்படையில் தத்துவத்துக்கு விளக்கம் கூறுபவள் போல் ரவியின் தாயாரின் முகம் கன்டிற்று.

''வேறுவழியில்லை அம்மா'' என்றான் ரவி. அதற்கு மேல் சமாதானம் கூற அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

''என்னமோ போ. அதிருஷ்டம், அதிருஷ்டம் என்று கோடி காட்டுவது போல் காட்டி வேலையைப் பறித்துக் கொண்டு போய்விட்டதேடா. நாலு பேரைக் கேட்டுச் செய்யக் கூடாதா? குடு குடுன்னு போய் நிரந்தர வேலையை உதறித் தள்ளிவிட்டாயே? விளம்பரம் வேண்டாம் என்று சொல்லி யிருக்கப்படாதா? உன் முகத்தைப் பத்திரிகையில் ஆயிரமாயிரம் பேர் பார்த்து விட்டால் அது நிரந்தரமாய்ச் சோறு போடுமாடா?'' என்று தொடர்ந்து அவன் வாழ்க்கையில் வரவிருக்கும் கஷ்டங்களின் கற்பனையில் அங்கலாய்த்துக் கொண்டாள்.

அவன் சோர்ந்த முகத்தைப் பார்த்த பொழுதுதான் அவளுக்குக் கிடைத்த பரிசு அதிர்ஷ்டத்தில் சேர்த்தியா, போதாத காலத்தின் தொடக்கமா என்ற சந்தேகம் எழுந்தது.

''எதுவாயிருந்தாலும் அனுபவித்துத்தான் அம்மா ஆகணும்'' என்று வேதாந்த ரீதியில் சொன்ன பதில் ரவியின் தாயாரை உற்சாகப் படுத்தியதாகத் தோன்றவில்லை. அவள் முகம் வாடித்தான் இருந்தது.

## 4

**ம**தராஸ் கிளை ஆபீஸிலிருந்து புறப்பட்டு ரவி விமான நிலையத்தை அடைந்தான். லாவண்யாவையும் தாயாரையும் நேராக மீனம்பாக்கத்துக்கு வரும்படி சொல்லியிருந்தான். அவன் எதிர்பார்க்காத வழியனுப்புதல் கிட்டிற்று. பம்பாய் ஆபீஸிலிருந்து ரிஜிஸ்தர் கடிதம் வந்த தினம் லாவண்யா அவனைப் பெருமைப்படுத்திய அதே கவட்டில் கல்லூரி மாணவிகள் அவனுக்கு மீனம்பாக்கத்தில் 'டா-டா' சொல்லிக் கைக்குட்டை வீசி வழியனுப்ப வந்திருந்தனர்.

''மிஸ்டர் ரவி! திரும்பி வருவீர்களா? இல்லை, அங்கேயே உங்கள் விளம்பர 'மனைவி'

## ஹிமாலயப் பிரச்னை



ஐ. நா.வின் ஓர் அங்கமான உலக ஆரோக்கிய அமைப்பு (W. H. O.) வங்காள தேச அகதிகளுக்காக ஒரே ஒரு மாதத்தில் காலராவுக்கு மட்டும் பின்வரும் மருந்துகளை அளித்திருக்கிறது.

காலரா தடுப்பு மருந்து 9101 லட்சம்: ஒரு தடவை குத்தியதும் தூக்கி எறிந்துவிடக் கூடிய ஊசிகள் 13 லட்சம்; துரிதமாகப் பலருக்கு ஊசி போட நவீன முறையில் இயங்கும் 'ஜெட்' கருவிகள் 76; டெட்ராஸைக்ளின் மாத்திரைகள் 30 லட்சம்; காலராவினால் உடலில் நீர் வற்றியவர்களுக்கு உடலுக்குள் செலுத்தும் திரவம் 54,050 லிட்டர்; ஊசி போட ஐந்து சிசி ஸிரிஞ்சுகள் 75,000; உடலுக்குள் செலுத்த குளுகோஸ்-ஸலைன் திரவம் 17·4 டன்; ஸலைன் மட்டும் 6,240 லிட்டர்; குழந்தைகளுக்கு அக்ரோமைஸின் ஸிரப் 11,000 பாட்டில்.

காலரா தவிர இதர நோய்களுக்குரிய மருந்துகளும், தேக ஆரோக்கியத்தை அளிக்க வைட்டமின்களும்; சுகாதாரத்தை முன்னிட்டு டெட்டால் போன்ற கிருமி நாசினிகளும் வேறு லட்சக்கணக்கில் அனுப்பியிருக்கிறது.

அகதிகளின் பிரச்னை ஒருபுறம் இருக்க, அவர்களுக்குள்ள நோய்களுடன் போராடும் பிரச்னை எத்துணை பெரிது என்பதை மேற்கூறிய புள்ளி விவரம் தெளிவாக்குகிறதல்லவா ?

யைச் சொந்தமாக்கிக் கொண்டு லாவண்யாவைத் திரும்பிப் பார்க்காமல் இருந்துவிடுவீர்களா?'' என்றாள் ஒரு குறும்புக்காரி.

''உனக்கு அந்த மாதிரி சந்தர்ப்பம் வந்தால் நீ அப்படித்தான் செய்வாய் போலிருக்கிறது'' என்றான் ரவி பதிலுக்கு. கலகலவென்று சிரிப்பு எழுந்தது.

''தினம் இவள் கல்லூரி விட்டு வாசலில் வருவதற்குள் எவ்வளவு ஸ்கூட்டர் அழகன்கள் விர் விர்ரென்று அந்தப் பக்கமாய்ப் போகிறார்கள்'' என்றாள் மற்றொருத்தி.

''இது பொது இடம். தெரிந்துகொள். கன்னு பின்னுவென்று ஜோக் செய்வதாய் ஏதாவது உளறாதே'' என்றாள் ரவியைக் கேலி செய்தவள்.

''டீ, இது கல்லூரி இல்லே. லாவண்யா அம்மாவும் இருக்காங்கன்னு மனத்திலே வச்சுக்கோ'' என்று வேறொருத்தி எச்சரித்தாள்.

''மிஸ்டர் ரவி! நீங்கள் எடுத்துக் கொள்ளப்போகும் விளம்பரப் போட்டோக்களின் பிரதியை எங்களுக்குக் காண்பிப்பீர்களா?'' என்றாள் ஷோபா.

''இவர் காண்பிக்கிறது என்னடீ? அது தான் பத்திரிகையிலே காட்சி தருவாரே'' என்றாள் பதிலுக்கு ஒரு பாவாடை தாவணி.

''இன்னும் ஹாஃப் ஸாரியிலே இருக்கு. இதன் துடுக்கு வாயைப் பாரேன்'' என்று அந்தச் சிறு பெண்ணின் கன்னத்தை ஒருத்தி நிமிண்டினாள்.

''ரவி! நாங்க இத்தனை பேர் உன்னை வழியனுப்ப வந்திருக்கோம். கூல் டிரிங்காவது வாங்கிக் கொடுக்கணும்னு உனக்குத் தோணித்தா?'' என்று லாவண்யா ரவியைக் குற்றம் கூறினாள். ரவி தங்கையின் விருப்பத்தை நிறைவேற்றியிருப்பானா ?

''அம்மா எங்கேடா ரவி. பாவம் தனியே விட்டு விட்டோமே'' என்றாள் லாவண்யா பாதி பானம் குடித்துக் கொண்டே.

''மறந்தே போய்விட்டேன், பார்.'' என்று தாயாரை அணுகி, ''நீ ஏதாவது சாப்பிடுகிறாயா அம்மா?'' என்றான்.

''எனக்கு ஒண்ணுமே வேண்டாம்டா'' என்றாள் அலுப்பாக. இவ்வளவு குதூகலச் சூழ்நிலையிலும் அவள் மனம் சுழன்றுகொண்டிருந்தது ஒரே விஷயத்தைப் பற்றித்தான்—பிள்ளை வேலையை விட்டு விட்டானே என்று.

''ஏன்டா ரவி, திரும்பி வர இருபது நாட்களாவது ஆகுமா?'' என்றாள் காமாட்சி.

''காஷ்மீரிலே பதினைந்து நாட்கள். பம்பாயிலேருந்து என்னிக்குக் கிளம்பறமோ தெரியாது. இருபத்தைந்து நாட்களுக்குள்ளே வந்துவிடுவேன். நீ கவலைப்படாதேம்மா. திரும்பி வந்து ஒரு மாதத்துக்குள்ளே எங்கேயாவது ஒரு வேலை பார்த்துக் கொண்டு விடுகிறேன். திருப்தியா?'' என்றான்.

பம்பாய் காரவல் விமானம் கிளம்புவதைப் பற்றிய அறிவிப்பு குஷாலான பெண்களின் சம்பாஷணைக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

''அப்ப மிஸ்டர் ரவி! சந்தோஷக் கனவுகள்... டாடா!'' என்று கல்லூரி மாணவிகள் கோஷமிட, ''அம்மா, லாவண்யா! போய்விட்டு வர்றேன். ஏதாவது அவசரமாய் இருந்தால் பம்பாய் ஓட்டல் விலாசத்துக்குக் கடிதம் போடு. காஷ்மீர் போன பின்பு அந்த முகவரியை எழுதறேன்'' என்று விரலை அசைத்துக் கொண்டே விமானத்தில் ஏற வேண்டிய ஏணிப் படிகளில் ஏறிக் கதவின் அருகில் நின்றுகொண்டு கடைசி முறையாகக் கையசைத்தான். ''த்ரீ சியர்ஸ் டு பிரைஸ் பாய்'' என்று பதிலுக்கு லாவண்யாவின் சிநேகிதிகள் உற்சாகத்துடன் கைக்குட்டைகளை ஆட்டி ஆரவாரித்தனர்.

''ஷோபா! நீங்க எப்படித் திரும்பப் போறீங்க?'' என்றாள் லாவண்யா.

''டாக்ஸி வைத்துக்கொண்டு போகிறோம்'' என்றாள் அவள்.

''சரி, நானும் அம்மாவும் போறோம். அப்புறம் கல்லூரியிலே பார்க்கலாம்... எல்லாருக்கும் நன்றி...'' என்றாள் லாவண்யா.

''மாமி, நாங்க வர்றோம்... ரவி ரொம்ப அதிர்ஷ்டக்காரர் மாமி!'' என்று லாவண்யாவின் தோழிகள் விடைபெற்றுக் கொண்டனர்.

''போடி, லாவண்யா கூப்பிட்டான்னு வந்தேன். திங்கட் கிழமை கெமிஸ்ட்ரி பரீட்சை. ஒரு வார்த்தை கூடப் படிக்கலே'' என்றாள் ஷோபா.

''உன்னைப் படிக்கிறதை யாரும் வேண்டாம்னு சொல்லலியே. நீ வந்துதான் ஆகணும்னு யாரும் பலவந்தப்படுத்தலியே?'' என்றாள் ஷோபாவுடன் டாக்ஸியில் ஏறிக்கொண்டவள்.

டாக்ஸி நகர்ந்தது.

''ஷோபா! நான் இங்கே இறங்கிக்கிறேன். இங்கிருந்து என் வீடு கிட்டக்க'' என்று ஸீட் பின்னாலிருந்த கைப் பையை எடுத்துச் சுழற்றிக் கொண்டே ''ஷோபா, டாக்ஸி சார்ஜ் எவ்வளவுன்னு நாளைக்குச் சொல்லு. என் பாகத்தைக் கொடுத்துடறேன். வரட்டுமா?'' என்று டாக்ஸியின் கதவை அறைந்து சாத்தி நடையைக் கட்டினாள் தோழி.

''லாவண்யா!'' என்ற குரல் வாசலில் கேட்டது. எழுந்துபோய் ஜெநிதியைக் கேட் அருகிலேயே நிறுத்தி வைத்துப் பேச ஆரம்பித்தாள்.

''லாவண்யா, உனக்குத் தெரியுமாடி?'' என்று தயங்கித் தயங்கி விஷயத்துக்கு வராமல் பேசினாள். சொல்லலாமா வேண்டாமா என்ற தயக்கம் அவளுக்கு.

''நான் ஷோபா, விமலா டாக்ஸியிலே வந்தோமா, நான் நடுவிலே வீட்டுக்கு அருகில் இறங்கிண்டேன். அப்ப ஷோபாவின் கைப் பையைத் தவறி எடுத்துக் கொண்டு வந்து விட்டேன்.''

''இதென்ன பெரிய விஷயம்னு இப்ப வந்தே?'' என்றாள் லாவண்யா.

''இல்லேடி...'' என்று தயங்கி, ''இதைப் பாரேன்'' என்று கைப் பையைத் திறந்து காட்டினாள். ரவிக்குக் கடிதம் கிடைத்த தினத்தன்று வீட்டில் கூடி அவன் புகைப்படப் பிரதிகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த பொழுது ஷோபா பொறுக்கிக் காண்பித்த ரவியின் புகைப்படம் அந்தக் கைப்பையினுள் இருந்தது. லாவண்யா அதைப் பார்த்து. அசந்து போய் விட்டாள்.

''நீ சொன்ன மாதிரி ஷோபா அழுத்தக்காரிதான்னு தோணுது'' என்றாள் லாவண்யா.

''இது உன் அண்ணனுக்குத் தெரியுமா?''

''இதைப் பற்றி என் அண்ணன் ஒரு வார்த்தையும் பேசலே. அந்தப் பிரதிகளில் இது இல்லாததை அவன் கவனித்திருக்க மாட்டான் என்று தோன்றுகிறது. இல்லாவிட்டால் இதைப் பத்தி என்னிடம் கேட்டிருப்பானே?'' என்றாள் லாவண்யா.

''உன் அண்ணனும் ஒரு அழுத்தக்காரனாய் இருந்தால்?... ஆமாம். இப்ப என்ன பண்ணலாம்?''

''தெரியாதது மாதிரி ஷோபாவின் பையைத் திருப்பிக் கொடுத்துவிடு.''

''இருந்தாலும் கொஞ்சம் கிண்டல் பண்ணணும்டி. உன் அண்ணன் விஷயம்னு பார்க்கறேன். இல்லாவிட்டால்...''

''வேண்டாம்டி. எனக்குத் தர்மசங்கடமாய்ப் போய்விடும். இப்பவே எனக்கு ஒரு கவலே.''

''என்ன?''

''இதை என் அம்மாவிடம் சொல்றதா வேண்டாமான்னு. இந்தப் பெண் என்ன இப்படிச் செய்து விட்டதே'' என்று லாவண்யா கவலைப்பட்டாள்.

''ஒண்ணு பண்ணலாம். அவளை அழ வைத்துவிட்டுக் கைப் பையைக் கொடுக்கலாம். இந்த விஷயம் நம்ம இரண்டு பேருக்கு மாத்திரம் காதோடு காது வைத்த மாதிரி இருக்கட்டும்.''

''கலாட்டா எல்லாம் வேண்டவே வேண்டாம். அது விபரீதத்திலே போய் முடியும். நான், ரவி, என் அம்மா எல்லோரும் இதில் மாட்டிக் கொள்வோம். ஷோபாவுக்குக் கல்யாணத்துக்கு வரன் தேடிண்டு இருக்கா. அன்னிக்கு யாரோ வந்து பார்த்துட்டுப் போனாளாம். என்னிடம் மாத்திரம் சொன்னாள். இது ஏதாவது வெளிப்பட்டால் அவள் வீட்டிலே நம்மைத் தப்பா நினைச்சுப்பா. இந்த வேடிக்கையே வேண்டாம்.''

''ஷோபாவைப் பார்த்துட்டுப் போனாளா? அட கடவுளே! அவள் எப்படி மூடி மறைத்திருக்கிறாள். பெரிய ஆள்தான்டி... இது வேறே கிடைச்சது'' என்றாள்.

''உனக்குக் கோடி புண்ணியம் உண்டு. ஒண்ணும் பண்ணாதேடி'' என்று லாவண்யா அவளிடம் கெஞ்சினாள்.

திங்கட்கிழமை ஷோபா அவள் ஜெநிதியைச் சல்லடை போட்டுத் தேடினாள்.

''அப்படியா? என்னுடையது மாதிரியே இருந்தது. இன்னிக்கு ஸ்கூட்டர் 'லிப்ட்' கிடைத்தது. கைப் பையைத் திறக்கலே... உன்னுடையதா? இந்தா'' என்று அதைத் திறந்து பார்க்காதவள் போல் திருப்பிக் கொடுத்தாள்.

''இதோ உன்னுடையது'' என்று ஷோபா ஒரு பையைக் கொடுத்து விட்டு, அவளுடையதைப் பெற்றுக் கொண்டு கொஞ்ச தூரம் போய் மறைவாய்ப் பையைத் திறந்து பார்த்தாள். ரவியின் புகைப்படம் வைத்தபடியே இருந்தது.

''அப்பாடா... அவளுக்கு ஸ்கூட்டர் லிப்ட் கிடைத்ததோ. நான் பிழைத்தேன்'' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டாள்.

மத்தியானம் உணவுக்கு லாவண்யாவின் குழு கூடிற்று. ''நீ என்னடி கொண்டு வந்திருக்கே?'' என்று ஒருவரையொருவர் கேட்டு, சப்பாத்தி, தேங்காய் சாதம், பிரெட்ஜெலண்ட் என்று பரிவர்த்தனை நடந்தது.

''இன்று நீங்கள் தேன் கிண்ணம் கேட்பவளாடி!'' என்றாள் ஷோபாவின் கைப்



''அந்தக் குறிப்பிட்ட வீட்டில் நீ திருடி வந்தது என்ன காரணம்?''

''அந்த வீட்டில் நேனே இல்லைன்னு கேள்விப்பட்டேனுங்க.''

டையை மாற்றி எடுத்துக் கொண்டு போனவள்.

''தேன் கிண்ணம் கேட்டிருந்தால் கெமிஸ்ட்ரியிலே கிண்ணம் போலத்தான் மார்க் கிடைக்கும்'' என்றுள் ஷோபா பதிலுக்கு.

''புதுப் பாட்டு ஒண்ணு வைத்தான்... பிரமாதம்... ஏதோ புதுப் படம்கூட பேர் சொன்னுன்... மறந்து போச்சே'' என்று தலையைச் சொறிந்து கொண்டு... ''ஹா... காதல் ஃப்ரம் காஷ்மீர்'' என்றுள்.

''இதுவரையிலும் அதைப் பற்றிய விளம்பரம் ஒரு பத்திரிகையிலுமே பார்க்கலியே... உன்னுடைய டூப்பா?'' என்று ஒருத்தி சந்தேகம் எழுப்பினுள்.

''நான் கேட்டேன்னு சொல்றேன். நீங்க இப்படிச் சொல்லுவீங்கன்னுதானே பாட்டின் முதல் நாலு வரியை எழுதி வைத்துக் கொண்டேன்'' என்று அவள் புத்தகத்தைத் திறந்து அதிலிருந்து ஒரு தாளை எடுத்துப் படித்தாள்.

''கன்னிவிழி கட்டழகன்
போன வழி தொடருது
காத்திருப்பேன் என்ற சேதி
காத்து மூலம் சொல்லுது
ஆறு, மலை, பள்ளத்தாக்கு
குறுக்கே நின்னு மிரட்டுது
இத்தனையும் தாண்டிக்கிட்டுக்
காதல் குயில் கூவுது!''

''வார்த்தைகள் ரொம்ப ஜோரா யிருக்கே. கேட்காமல் போய்ட்டமே.... ட்யூன் எப்படி?''

லாவண்யா படித்தவளை ஒரு முறை முறைத்தாள்.

''அடுத்த முறை வைக்கச்சே கேளுங்கோ. ஏதோ காதிலே விழுந்ததைச் சொன்னேன். ட்யூனெல்லாம் பாடத் தெரிஞ்சா இங்கே ஏன் கெமிஸ்ட்ரியைக் கட்டிண்டு அழறேன்? பின்பாட்டுக்காரியாப் போக மாட்டேனு''

என்று எழுந்தாள். வம்பளப்பு மகாசபை அன்று கலைந்தது. அவர்கள் உள்ளத்தில் தேன் கிண்ணத்தில் மிகவும் சுவையான மலைத் தேன் சொட்டை ருசிக்கத் தவறியதை நினைத்து மனம் உடைந்தனர்.

## 5

**க**ல்லூரி மாணவிகள் மதிய உணவு வேளிக்கையில் இருந்தபொழுது ரவி பம்பாயில் தலைசிறந்த ஹோட்டல் அறையில் அவனுக்கு விளம்பர ஜோடியாய் எவள் வரப் போகிறுளோ என்ற கற்பனையில் மிதந்து கொண்டிருந்தான். தன்னை இறக்கிய அதே ஹோட்டலில்தான் வேறெதாவது ஓர் அறையில் அவளும் இருக்க வேண்டும் என்று நிர்மானித்தான். அந்த ஹோட்டலில் குறுக்கும் நெடுக்குமாய்ப் போய்க்கொண்டிருந்த எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் விளம்பரத்துக்குத் தக்க முகமுடையவள் என்றுதான் பட்டது. நாகரிகத்தின் சிகரம் கொண்டை; மென்மையின் இருப்பிடம் பாதரட்சை. இவ்விரண்டுக்கும் இடையில் ஒப்பனையின் கைவண்ணம்; தையல்காரனின் கத்திரி வண்ணம்; சேலையின் சல்லடை வண்ணம்; இடையசைப்பின் நடை வண்ணம்; கீக கிசென்னும் குரல் வண்ணம். அப்பொழுது அவனுக்கு இருந்த மன நிலை சந்தோஷம் என்றும் சொல்ல முடியாது; நடுக்கம் என்றும் சொல்லுவதற்கில்லை. வரப் போகிறவளுடன் சேர்ந்து ஜோடியாக விளம்பரத்துக்கு வேண்டியபடி புகைப்படம் பிடித்துக் கொள்ளப் போகும் சந்தர்ப்பத்தைக் குறித்து சந்தோஷம். பழங்கால பாணியில் விவரித்தால் தாய், தந்தையர் பொறுக்கி எடுத்த பெண்ணை முதன் முதலாக மணப் பந்தலில் பார்க்கும் இளைஞனின் துடிப்புடன் ஒப்பிடலாம். ஆனால், இப்பொழுது அவனுடன் ஜோடி சேரப் போகிறவளோ எந்தெந்த ஆடை அலங்காரங்களுடனே, அவைகளின் குறைப்பிலோ தன்னுடன் ஒத்துழைக்கப் போகிறுள் என்று தெரியாது. இதில் சற்று நடுக்கம். விவரம் அறியாத பெண்ணை நினைத்துக் காதல் புரிந்து விடலாம். அது சுலபம். அவளே நவநாகரிக மேனகையாய் அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டாளோ, தோள் மேல் சாய்ந்தாளோ காதல் பறந்து கூச்சம்தான் தெரிய வைக்கும். அதிலும் காமிராவின் எதிரில் காதல் பண்ணுவது ஒரு தனிக் கலை. இந்த இரண்டு துருவங்களுக்கு நடுவில் ஊசலாடிக் கொண்டு ஹோட்டலின் புல் தரையிலும், நீச்சல் குளத்திலும், உணவு ஹாலிலும், நடன அரங்கிலும் உலவி வந்த பெண்ணைப் பார்த்து, ''இதில் எவளோ?'' என்று தனக்கே சொல்லிக் கொண்டு உட்கார்ந்திருந்த ரவியை, ''மிஸ்டர் ரவி!'' என்ற குரல் திரும்ப வைத்தது. மேக்காக உடை அணிந்து கொண்டிருந்த அவளைப் பார்த்து ரவிக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று. தன்னை விட அவளையே விளம்பரத்துக்குத் தேர்ந்தெடுத்திருக்கலாமே என்று நினைக்கும்படி அவள் ஆடையின் பண்பு பறைசாற்றிற்று.

''ஆமாம், என்ன?'' என்றுன்.

''நான்தான் கம்பெனியின் விளம்பர இலாகா எக்ஸிக்யூடிவ்'' என்று தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு, ''உங்கள் செலெக்ஷ

யங்கள் நன்கு கவனிக்கப்பட்டதா?'' என்று பரிவுடன் விசாரித்தான்.

''நன்றி. எல்லாம் திருப்திதான்.''

'' நீங்கள் தயார் என்றும் விளம்பரத்துக்குத் தேர்ந்தெடுத்திருக்கிற வனிதையையும் உங்களுக்கு அறிமுகப்படுத்தி விடுகிறேன். அந்தப் பெண்ணிடமும் சொல்லி வந்திருக்கிறேன். இன்னும் ஒரு மணியில் அழைத்து வரலாம் என்று சொன்னார்கள். உங்களுக்கும் அவகாசம் தர வேண்டுமே?'' என்று வந்தவன் சொன்னான்.

''இன்னும் அரை மணியில் தயாராய்விடுவேன்'' என்றான் ரவி.

'' இன்று கம்பெனி முதலாளி, மற்ற டைரக்டர்கள், மற்ற மேலதிகாரிகளுடன் உங்கள் இருவருக்கும் இரவுச் சாப்பாடு. உங்களைக் கவனித்துக் கொள்ள நான் நியமிக்கப்பட்டிருக்கிறேன். நீங்கள் சரி என்றால் பம்பாயை அடுத்துள்ள எழில் பகுதிகளுக்கு அழைத்துக் கொண்டு போகிறேன். நாளை தான் படப் பிடிப்பு. காமிரா நிபுணர்கள் எடுக்க வேண்டிய கோணங்களைப் பற்றி நாளைக் காலை உங்களுக்குச் சில வார்த்தைகள் சொல்லுவார்கள்'' என்று வேலையின் நிகழ்ச்சி நிரலைத் தெரிவித்தான்.

'முகத்தை விளம்பரத்துக்காக விற்பவனுக்கா இவ்வளவு ராஜ உபசாரம்?' என்று ரவி வியந்து கொண்டான். அத்துடனே ஒரு சமாதானக் கருத்தும் ஒலித்தது. 'இது விளம்பர யுகம்.'

''அரைமணியில் தயாராய் விடுகிறேன். உங்கள் நிகழ்ச்சி நிரல் எப்படியோ அதன்படி செய்யுங்கள்'' என்று சொல்லி அறையை அடுத்த குளியல் பகுதியில் குழாயைத் திருப்பிக் குளித்து, முக க்ஷவரம் செய்து கொண்டு தாராளமாக லோஷன், பௌடர் அப்பி முகத்தையும், உள்ளத்தையும் பளபளவென்று துலக்கி வெளியே வந்தான்.

''இவ்வளவு சீக்கிரமா?'' என்று கேட்டபடி, ரவியை அழைத்துக் கொண்டு ஹோட்டலின் மறுபுறத்தில் மூடி விருந்த அறைக் கதவை அடைந்து மணிக் கட்டுகளால் தட்டினான்.

''ஒரு நிமிஷம் இருங்கள்'' என்ற கீச்சுக் குரல் கேட்டது. இருவரும் அறையை அடுத்த பால்கனியின் கைப் பிடியைப் பிடித்துக் கொண்டு சமூகத்தில் உச்சாணிக் கிளையில் உலவி வரும் அங்கத்தினர்களின் வாழ்க்கைத் தரத்தைக் கண் எதிரே ஹோட்டல் புல்வெளியில் நடைபெற்றுக் கொண்டிருந்த காட்சிகள் மூலம் கண்டார்கள்.

'அப்பப்பா! நடை, உடை, பாவனைகளில் இவ்வளவு செயற்கையா? பண்பு எவ்வளவு பாதாளத்தில் புதைக்கப்பட்டிருக்கிறது' என்று ரவிக்குப் பட்டது. பணம் படைத்தவன் அப்படி இருப்பான், இப்படி இருப்பான் என்று பார்க்காமலே பேசிக் கொள்வதும் விமரிசனம் செய்வதும் நேரில் நடைபெற்றுக் கொண்டிருந்த நாகரிக நாடகத்தின் முன் எந்த மூலை?

அறையின் கதவு திறந்தது. யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே என்பது போல் கன்னியின் முகம் பின்னே, முகப் பூச்சின் நெடி முன்னே என்று மணம் மூக்கைத் தாக்கிற்று. அதுதான் புல்வெளியைப் பார்த்துக் கொண்டிருந்த அவ்விருவரையும் திரும்பி அவளைப் பார்க்க வைத்தது. அறையினுள் போனார்கள்.

''இவர் மிஸ்டர் ரவி. உங்களுடன் விளம்பரத்துக்காகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறவர். இவர்தான் மிஸ் மேனகா.'' ரவி வணக்கம் தெரிவித்தான். அவளும் கைகூப்பினாள். தோளிலிருந்து சரிந்து விழுந்த புடவைத் தலைப்பை இடுப்பு வரையில் நழுவ விட்டு மறுபடியும் அதை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டாள்.

''போட்டோ நிகழ்ச்சிகள் எப்பொழுது?'' என்று அலட்சியமாய்க் கேள்வியைக் கேட்டுக் கொண்டே அறையில் இருந்த டெலிபோனைக் கையில் எடுத்து நம்பர்களைச் சுழற்றினாள்.

''நாளைக்கு. உங்கள் இருவரையும் சுற்றுலா அழைத்துப் போக ஏற்பாடாகி யிருக்கிறது. முதலாளி, டைரக்டர்கள் மேலதிகாரிகளுடன் இன்றிரவு ஒன்பது மணிக்கு இரவு உணவு.''

டேப் ரிக்கார்டர் பாணியில் அவன் சொல்லி முடித்தான்.



## விம்பிள்டன் வீராங்கனை

பந்து வயதுச் சிறுமி டென்னிஸ் ஆடிக் கொண்டிருந்தாள். அவளது ஆட்டத்தைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த ஆஸ்திரேலிய 'கோச்' எட்வர்டுக்கு அவள் டென்னிஸ் ஆட்டத்தில் முன்னேறுவாள் என்ற நம்பிக்கை பிறந்தது.

அவள்தான் இன்று விம்பிள்டன் வீராங்கனையாகவுள்ள கூலாகாங். கோச் எட்வார்ட் அந்த நாளிலிருந்து அவளுக்கு டென்னிஸ் பயிற்சி கொடுத்து வந்தார். அவளது பதின்மூன்றாம் வயதில் எட்வார்ட் அவளுடைய பெற்றோர் அனுமதியுடன் அவளைத் தமது வளர்ப்புக் குழந்தையாக ஏற்றார். அதோடு, 1974ம் வருஷத்திலே கூலாகாங் விம்பிள்டனில் வெற்றிபெறுவாள் என்று 'ஜோசியம்' கூறினார். ஆனால் அவளோ 1971 ஆண்டிலேயே வெற்றிக் கொடி நாட்டி வளர்ப்புத் தந்தையை மகிழ்ச்சியில் ஆழ்த்தினாள். வீட்டிலும் பந்தயத்தின் போதும் ஏதாவது பாட்டை முணுமுணுத்துக்கொண்டிருப்பதில் கூலாகாங்குக்கு ஆசை. கூலாகாங்குக்குப் பத்திரிகை படிப்பதென்றால் 'அலர்ஜி!' எந்தப் பத்திரிகை அவளைப் பற்றி எழுதினாலும் அதில் அவள் ஆஸ்திரேலிய பூர்வகுடியினரைச் சேர்ந்தவள் என்ற விவரம் இடம்பெற்றிருக்குமாம். இதுவே அவளை அலுக்க வைத்து விட்டதாம்! - பி. என். எம்.

ஆதாரம்: ''ஹிந்துஸ்தான் டைம்ஸ்''

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடேட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்", 3, சிங்காராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.
தந்தி : 'EVERMANS', போன் : 85834 • தபால்பெட்டி : 414

மதராஸ் சிட் பண்டு 1961 ஆக்ட்படி மேற்காணும் சிட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 OF 1961)

### நீண்ட காலச் சிட்டுகள்

50 மாதங்கள் — 50 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|
| LTM | ரூ. 200/- | ரூ. 10,000/- |
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/. |

40 மாதங்கள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

### குறுகிய காலச் சிட்டுகள்

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000 | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500 | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250 | F | ரூ. 15/- | ரூ. 375/- |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள் : புது டில்லி - பம்பாய் - பெகளூர் - கல்கத்தா




## எமது வெள்ளி விழா ஆண்டு

## எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

அதை அவள் ஒரு காதில் வாங்கிக் கொண்டாள். மற்றொரு காதை டெலிபோனில் பேசிக்கொண்டிருந்தவருக்குக் கொடுத்திருந்தாள்.

"என்ன சொன்னீர்கள்?" என்றான் முகத்தைக் கனித்த வண்ணம். இந்த முகத்தைப் பார்த்திருந்தால் விளம்பரத்துக்காக இவளைத் தேர்ந்தெடுத்திருப்பார்களா என்று தான் தோன்றும். ஹோட்டல்களில், "என்ன இருக்கிறது?" என்ற கேள்விக்குச் சர்வர் ஒப்புவிப்பானே அதே ரீதியில் இலாகா சிப்பந்தி பழைய பல்லவியைப் பாடினான்.

"சுற்றுலா எங்கே?" என்றாள்.

"பம்பாயைச் சுற்றி."

"பம்பாயைச் சுற்றி நான் பார்க்காதஇடம் என்ன இருக்கிறது? சரி. எனக்கு வேறு ஒரு ஜோலி இருக்கிறது. நான் போகிறேன். உணவு ஒன்பது மணி என்றுதானே சொன்னீர்கள்? நான் நேராக அதற்கு வந்து விடுகிறேன். நீங்கள் போகலாம்" நறுக்கென்று இருவரையும் பார்த்துச் சொன்னாள். டவாலி அணிந்த கார் டிரைவர் அறையின் வாசலில் காத்துக் கொண்டிருந்தான்.

"வண்டி தயாரா?" என்றாள். அறையைப் பூட்டிக் கொண்டு தத்தித் தத்தி நடந்து போர்ட்டிகோவில் நின்று கொண்டிருந்த பிரம்மாண்டமான காரில் ஏறிக் கொண்டு போய் விட்டாள். இதைப் பார்த்தபடியே ரவியும், கம்பெனி அதிகாரியும் படி இறங்கி அவர்களுக்காக இருந்த காரில் ஏறிக் கொண்டு போனார்கள்.

"மிஸ்டர் ரவி! ஆயிரம் ஆண்களைக் கவனித்துக் கொண்டு விடலாம். ஒரு விளம்பரப் பெண்ணைத் திருப்தி பண்ணுவது பிரம்மாவாலேகூட முடியாது. என்னை அழ வைத்து விட்டாள். கொடுத்த அறை திருப்தி இல்லையாம். வேறு மாற்றியாக வேண்டும் என்று படாதபாடு படுத்தி விட்டாள். அலுவலகத்திலே அவள் முகத்தைப் பார்த்து தா தைன்னு குதிக்கிறாங்க" என்று கசந்து கொண்டான். அந்தப் பெண் அவனிடம் பேசிய அலட்சியமும், கர்வமும் ரவி பார்த்துக் கொண்டிருந்தவன்தானே !

"உலகத்திலே எல்லாக் காலத்திலேயும் பெண்களுக்குத் தனி மதிப்புக் கொடுத்துத்தான் வந்திருக்கிறார்கள். அன்று பண்போடு அந்த மதிப்பை ஏற்றுக் கொண்டிருந்தார்கள். இப்ப ஆதிக்கமே அவர்களது தானே? கொஞ்சம் தலை நிற்கமாட்டேன் என்கிறது. பெண் முகம் இல்லாமல் ஒரு விளம்பரம் பண்ணுங்களேன். எவனாவது அதைப் பார்க்கிறானா பாருங்கள்! அதுக்காகத்தானே, மிஸ்டர், இவளை என்னுடன் இணைத்திருக்கிறீர்கள்" என்று ஹாஸ்யத்துடன் நாகரிக உலக இயல்பையும் எடுத்துரைத்தான் ரவி.

"இந்த விளம்பர யுக்தி ஆரம்பித்ததிலிருந்துதான் அதுகளுக்கு மண்டைக் கனம் ஏற்பட்டு விட்டது" என்றான் வந்தவன்.

"விளம்பரம்னு சொல்லாதீங்க. உடல் விற்பனைன்னு சொல்லுங்க. அதைத் தேடித் தானே விளம்பர வாசகமே எழுதப்படுகிறது" என்றான் ரவி.

"எதுவா இருந்தா என்ன? வருஷம் முழுவதும் இம்மாதிரி சூர்ப்பனகைகளைக் கட்டிக்கொண்டு அழ வேண்டியிருக்கிறது. வேறு ஏதாவது வேலைக்குத் தாவி விடலாமா என்றுகூடச் சமயத்தில் தோணுது."

"நீங்கள் எங்களுடன் பம்பாயோடு சரியா, காஷ்மீருக்கும் வருகிறீர்களா ?"

"உங்களைத் திருப்பி விமானத்தில் ஏற்றி வீட்டுக்கு அனுப்பும் வரை என் பொறுப்பு" என்றான் அவன்.



"இன்று என்னைப் பெண் பார்க்க வருவதாகச் சொல்லி அனுப்பியிருக்கிறார்கள். மாலை மூன்று மணிக்கே வீடு திரும்பப் பர்மிஷன் வேணும் சார்!"

"பையன் யார்?"

"நம்ம ஆபீஸ் லெட்ஜர் லட்சுமணன்!"

ஹோட்டலின் பிரத்தியேக அறையில் இரவு உணவு ஏற்பாடாகி இருந்தது. ஒன்பதுக்கு எல்லோரும் கூடி விட்டனர். முதலாளிக்கும், பிரதான விளம்பர இலாகா முதல் அதிகாரிக்கும் நடுவில் ஓர் ஆசனம் காலியாய் இருந்தது. விளம்பர வனிதை மேனகாவுக்காக.

"என்ன மிஸ்டர் தேவன் ? என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்? அவள் எங்கே போகிறாள், என்ன என்று தெரிந்து கொண்டு ஏற்பாடு செய்ய வேண்டாமா? மணி ஒன்பது-பத்து" என்று ரவியுடன் வந்த விளம்பர இலாகா சிப்பந்திக்கு ஒரு ஷொட்டு கிடைத்தது. அவர் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டார்.

"மன்னிக்கணும், மன்னிக்கணும். நாழியாகி விட்டது" என்று கெஞ்சிக் கொண்டே அவள் அறையில் நுழைந்து அவள் ஆசனத்தில் அமர்ந்து பக்கத்திலிருந்தவர்களுடன் குனிந்து இரு வார்த்தை பேசி, மற்றவர்களுக்குப் புன்முறுவலைத் தந்தாள். அவ்வப்பொழுது அவளுடன் அபிப்பிராயங்களும், அவள் தங்கச் செய்த ஏற்பாடுகளைப் பற்றியும், நாகரிகத்தின் பண்புக்கு ஏற்ப அவளைப் புகழ்ந்தும், அவளாலேதான் அந்தக் கம்பெனியின் பெயர் சந்திர மண்டலத்தை முட்டும் வரையில் ஏறப் போகிறது என்று உத்ஸாகத்தில் மேலதிகாரிகள் அவளைச் சிறகடித்தனர். அவளும் செயற்கை அடக்கத்தில் பதில் சொல்லி அவர்களைத் தூண்டிலில் போட்டுப் பிடித்தாள். உணவு முடியும் போது பத்தரையாகிவிட்டது.

"மேனகாவின் அறையில் திரைச் சீலைகள் அழகாகவே இல்லையாம். பூங்கொத்துகள் வாடினதாம். என்ன தேவன்? எனக்கு அவமானமாய் இருக்கிறது" என்று விளம்பர இலாகா மேலதிகாரி அவள் சார்பில் ஒரு சாட்டை கொடுத்தார்.

''மத்தியானமே சொன்னேனே இப்பவா வது மாற்றி இருக்காங்களா?'' என்று அவன் சார்பில் ஒரு கேள்வியைக் கேட்டான்.

''மாற்றி இருப்பார்கள். எதற்கும் இதோ போய்க் கவனிக்கிறேன்'' என்று அந்த இடத்தை விட்டுப் போனால் போதும் என்று மறைந்தான் தேவன்.

அடுத்த நாள் போட்டோ பிடிப்பு. ஒரு தனி அறை விளம்பரத்துக்காக ஜோடிக்கப் பட்டது. நவீன திரைச் சீலைகள்; புத்தம் புதிய மேசை, நாற்காலி, சோபாக்கள், குளு குளு இயந்திரப் பெட்டி; புஸ்தக வரிசைகள் இத்யாதி. ஸோபா ஒன்றில் ரவி உட்கார்ந் திருக்கிறான். பின்புறமாய் அவன் தோளைக் கட்டிக் கொண்டு, குனிந்து முகத்துடன், உராய்ந்து அவன் வாயில் சிகரெட் பற்ற வைக்கிறாள். இது முதல் காட்சி. அவள் உள்ளங்கை தோளில் பட்டதுந்தான் ரவிக்கு ஒரு சிலிர்ப்பு. விளம்பர நிபுணர்கள் எதிரே நின்று கொண்டு சினிமா டைரக்டர்கள் போல் அவன் உட்கார வேண்டிய கோணம், அவள் முகம் உரச வேண்டிய பாங்கு முதலிய விளம்பர நுட்பங்களை யெல்லாம் சொல்லிக் கொடுத்தனர்.

''மிஸ்டர் ரவி! நோ, நோ, நோ, என்ன நெளியறீங்களே. அவளை மனைவின்னு நினைச் சுக்குங்கோ. சினிமாவிலே நடிக்கலே, அது மாதிரி..... விரிந்த சிரிப்பு.... அதுதான்....'' என்று ரவிக்குச் சொல்லிக் கொடுத்து காமிரா நிபுணனைப் பார்த்து ''சரிதானே'' என்றார்.

''மிஸ்.... நீங்கள் இன்னும் சற்று நெருங்க ணும்'' என்று காமிரா இயக்குனர் மேனகா விடம் சொன்னார். அவள் இந்தக் கலைக்குப் பரிச்சயமானவள். அவர் நெருங்கணும் என்றதும் அவள் கழுத்தை இன்னும் சற்று இறுக்கிக் கொண்டு இன்னும் வளைந்து கொடுத்தாள்.

''அவள் ஓ.கே., மிஸ்டர் ரவி. நீங்கள்தான் இன்னும் கொஞ்சம் ப்ரீயா இருக்கணும். பாவம் விறைப்பாய் இருக்கு. ரிலேக்ஸ்'' என்று ஆங்கில பாஷையில் அவன் செய்ய வேண்டியதைச் சொன்னான்.

ஐந்தாறு ஒத்திகைக்குப்பின் இது முடிந் தது. அடுத்த போஸ் வேறு சூழ்நிலை. ஆபீஸ் அறை மாதிரி இருந்தது மாற்றப்பட்டு வீட் டில் விருந்தாளிகளை உபசரிக்கும் அறையாக அலங்கரிக்கப்பட்டது.

''மிஸ்டர் ரவி, நீங்கள் ஸோபா—கம் பெட் டில் மல்லாந்து படுத்து ஒரு பத்திரிகை படித் துக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் பக்கத் தில் உட்கார்ந்து அவள் உங்கள் தலைமயிரைக் கோதி விடுவாள்'' என்று சொல்லிக் கொண் டிருக்கும் பொழுது மேனகா கொண்டையை மாற்றி பாப் தலை அலங்காரத்திலும், மினி ஸ்கர்ட்டிலும் அறைக்கு வந்தாள்.

'இந்தக் கோலத்திலா இவள் என்னை அணைக்க வேண்டும்?' என்ற எண்ணம் பனிச் சிடக் கூச்சம் மின் வேகத்தில் பாய்ந்தது.

''ரவி! நீங்கள் தயாரா?'' என்று பத் திரிகையைக் கையில் கொடுத்தார்கள். அவள் அருகில் உட்கார்ந்து நாசுக்காய் இடையை அணைத்தாள். கிசுகிசுப்பு.... அவன் நெளிந் தான். உணர்ச்சி மரத்துப் போக ஐந்தாறு ஒத்திகைகள் வேண்டியிருந்தன. படம் அதற்கு மேல் எடுத்துக் கொள்ளப்பட்டது. அதை யடுத்துக் கப்பல் போன்ற காரில் அவன் ஒட்டு கிற மாதிரியும், அவன் தோளில் அவள் கை போட்ட மாதிரியும் ஒரு போஸ். புல் தரை யில் தேநீர் குடிப்பது போல் ஒரு படம். நாகரிக வாழ்க்கையின் அடிப்படை தாம்பத்திய உறவு கற்பனைகளை, ரவி மேனகா மூலம் விளம்பரத் துக்காகப் படம் எடுக்கப்பட்டது.

''இங்கே இத்துடன் சரி. மற்றவை யெல் லாம் காஷ்மீரில்'' என்று அன்றைய நிகழ்ச்சி முடிவடைந்தது.

காஷ்மீர இயற்கையின் மடியில் மற்றக் கற்பனை ஊற்றுகள் தூண்டியபடி உல்லாசப் படகு, பனிக் கட்டி சறுக்கல் முதலான காட்சிகள்.

ரவியும் தேவனும் தனித்து இருக்கும் போது லோகாபிராமமாய் ஒருவர் மற்றவர் வாழ்க்கையைப் பரிமாறிக் கொண்டனர்.

''இந்த விளம்பரத்துக்காகவா உங்கள் வேலையை ராஜிநாமா செய்து விட்டீர்கள்? என்னமோ அது அவ்வளவு புத்திசாலித் தனம்னு படலே.... இதே தொழிலிலே இருக் கிறதுனாலே அப்படிச் சொல்லலே. இந்த மாதிரி விஷயத்துக்கு நீங்கள் லாயக்குன்னு படலே மிஸ்டர் ரவி....கோபித்துக் கொள்ளாதீர்கள். இந்த விளம்பர உலகமே வேறு. அநுபவத் திலே சொல்றேன்'' என்றான்.

''என் தாயாரும் நான் செய்ததை அங்கீகரிக்கவில்லை'' என்றான் ரவி. பிறகு தொடர்ந்து, ''என்னமோ குதித்தாச்சு. நம்ம பயணம் முடியப் போகிறது. இனி மேல்தானே வேலையைப் பற்றிய நினைப்பு'' என்றான் ரவி.

''மதராஸ் லிவா மானேஜர் இருக்கிறாரே, அவரை விடாதீர்கள். நல்ல செல்வாக்கு அவ ருக்கு உண்டு. எங்கேயாவது வேலை பார்த்துத் தருவார். நான் சொன்னேன் என்று சொல் லுங்கள்'' என்று கோடி காட்டிவிட்டுத் தனக்கும் ஏதாவது காதில் விழுந்தால் ரவிக்கு எழுதுவதாகவும் சொல்லிவிட்டு விலாசத்தை வாங்கி வைத்துக் கொண்டான்.

## 6

''காஷ்மீர்ச் சூழ்நிலையில் உத்ஸாகமில் லாத ஆள் நீங்கள் ஒருவர்தான்'' என்ற பெண்ணின் குரல் கேட்டுத் திரும்பினான் ரவி.

''ஓ, நீங்களா, வாருங்கள்'' என்று புல் வெளித் தரையில் உட்காரும்படி மேனகா விடம் சொன்னான்.

''நீங்கள் என்னை மன்னிக்கணும். என் சிநேகிதருடன் போனேனு.....'' என்று சற்று நிறுத்தினாள்.

''ஆமாம். அப்புறம் உங்களைப் பார்க்கவே இல்லை. தேவன்கூட உங்களைப் பார்க்கத்தான் போயிருக்கிறார்'' என்றான் ரவி.

''ஒரு முக்கியமான விஷயமாய் அவருடன் கலந்து ஆலோசிக்கப் போயிருந்தேன். மிஸ்டர் ரவி, உங்களை ஒன்று கேட்கலாமா?'' என்று ஒரு புல்லை எடுத்துக் கடித்துக் கொண்டே அவனை ஆதங்கத்துடன் பார்த்தாள். பம்பாய் ஹோட்டலில் காட்டிய சொரூபத்துக்கும்,

அப்பொழுது இருந்த பெண்மைக்கும் தான் எவ்வளவு வித்தியாசம் !

''என்ன?'' என்றான்.

''மிஸ்டர் ரவி! உங்களுக்குக் கல்யாண மாகிவிட்டதா?'' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டாள்.

''விளம்பரத்தில் கல்யாணமானவன்.''

'' ஓ ! நீங்கள் கிண்டல் பண்றீங்க.''

''வாஸ்தவத்தில்.''

''அப்படின்னு, விளம்பரக் காதலை எப்படி ரசிக்கிறீர்கள் ?''

அவன் பேச்சில் ஒருவித உள் அர்த்தம் குடி கொண்டிருப்பது போல் பட்டது.

''சினிமாக் கதைக்காகக் கல்யாணம் பண்ணிக்கிற மாதிரி இருக்கு.''

''அப்படின்னு ?''

'' நாகஸ்வரம், கொட்டுமேளம், கல்யாணப் பந்தல், மந்திர கோஷம், தோழிகள் கேலி எல்லாம் இருக்கிற மாதிரி.''

''நீங்க என்ன சொல்றீங்க?''

''கல்யாணம் பண்ணிக்கிறவன் என்னென்ன ஆசையெல்லாம் மனத்திலே அடைத்து வைத்துக் கைப் பிடிப்பானோ, அதெல்லாம் பூரணமாய் இருந்தது'' என்றான்.

''அப்படின்னு ?''

''என்ன, எதற்கெடுத்தாலும் அப்படின்னு, அப்படின்னுன்னு கேக்கிறீங்க ?''

''நீங்க உள் அர்த்தத்தோடு பேசறீங்க. கேட்கக் கேட்க அமுதமாய் இருக்குங்க. நானும் எவ்வளவோ பேரோட பேசி இருக்கேன்......''

''என்னை காஷ்மீரிலேயே என் தலைக்கு நூல் வைக்கிறீங்க!'' ரவிக்கு இப்பொழுது அபாரத் தைரியம் பிறந்து விட்டது. ஹோட்டலில் முதலில் அவளைப் பார்த்தபொழுது அவளது திமிர்ப்பேச்சும், எவனோ ஒருவன் அனுப்பிய பிரம்மாண்டமான காரில் ஏறிப் போன கர்வமும், தேவனை அலட்சியமாய்த் தூக்கி எறிந்த மாதிரி பேசி அனுப்பியவிதமும் இப்பொழுது எங்கே போய் விட்டன? மறுபடியும் தன் இடத்துக்கு வருவானேன்? ஏதோ ஏமாற்றத்தை அடைந்து மறுபடியும் தன்னிடம் வந்திருக்கிறாளா? இவளிடம் பணிந்து போனால் தலைக்கு மேல் ஏறுவாள் என்று தோன்றிற்று.

''இல்லீங்க... ஏதோ சினிமாக் கல்யாணம் மாதிரின்னு சொன்னீங்களே....'' என்று விட்ட இடத்தில் மறுபடியும் தொடங்கினாள்.

''ஒரு பெண் கல்யாணத்துக்கு முன்னே கட்டுகிற கோட்டையைச் சொன்னேன். நாம் தங்கின மாதிரி ஒரு பெரிய ஹோட்டலில் தங்கணும்னு ஆசைப்படும். கவனித்துக் கொள்ள ஓர் ஆள் எப்பொழுதும் இருக்கணும்னு நினைக்கும். எவனோ ஒருவனுடைய பிரம்மாண்டமான காரில் ஊர் சுற்றிப் பார்க்கணும்னு கனவு காணும். தேன் நிலவுக்குக் காஷ்மீர் போய் இருக்கணும்னு கோட்டை கட்டும்.''

''ஆமாம். அதிலே என்ன தப்பு ?''

''தப்பு ஒண்ணுமில்லே. வாழ்க்கைக் காதலுக்கும், விளம்பரக் காதலுக்கும் அதிலே தான் இருக்கு வித்தியாசம் '' என்றான்.

''அதென்ன வித்தியாசங்க ?''



'' இன்று உன் அண்ணனைப் பெண் பார்க்கவும், உன்னைப் பின்னே பார்க்கவும் வரப் போவதாகச் சொல்லி அனுப்பியிருக்கிறார்கள் ! ரெடியாக இருங்கள்!''

''விளம்பரக் காதல்லே கோட்டை கட்டற எல்லா சுகபோகங்களும் கிடைக்கும். உண்மைக் காதல்தான் இருக்காது. வாழ்க்கைக் காதலில் நல்ல வாழ்க்கைத் துணைவி கிடைப்பாள். கனவு காண்கிற காட்சிகளுக்குப் போய் அநுபவிக்கப் பணமும் இருக்காது, சந்தர்ப்பமும் கிடைக்காது.''

''அப்படின்னு விளம்பரத்தில் காதல் இருக்காது. போகம் இருக்கும்னு சொல்றீங்க '' என்று காற்றில் பறந்து கொண்டிருந்த புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டாள் மேனகா.

''ஆமாம். நம்ம விளம்பரக் காதல் முடிகிற கட்டத்திலே இவ்வளவு ஆராய்ச்சி செய்யக் கிளம்பிட்டீங்களே, என்ன விஷயம்?'' என்று ரவி அவளை நையாண்டி செய்தான்.

''ஏன் மிஸ்டர் ரவி. இவ்வளவு கிண்டலோடு பேசறீங்களே, இந்த 'மூட்'டிலேயே அன்று போட்டோ பிடிக்கிற போது இருந்தீங்கன்னு அந்த போஸ் இன்னும் எவ்வளவு உயிருள்ளதாய் இருந்திருக்கும்'' என்றான்.

''நீங்க, இன்னிக்கு இவ்வளவு பெண்மையுடன் என்னிடம் பேசறீங்களே அதே மாதிரி அன்று இருந்திருந்தால் நானும் நீங்க சொல்ற மாதிரி இருந்திருப்பேனு, மாட்டேனு...சொல்லுங்க'' என்றான்.

'' தப்பெல்லாம் என் மேலே போடறதுன்னு கங்கணம் கட்டிக் கொண்டுவிட்டீர்கள்.... செய்யுங்க, செய்யுங்க....'' என்று அவனைப் பார்த்துச் சிரித்தாள் மேனகா.

''தப்பு உன் பேரிலேயும் இல்லே, என் பேரிலேயும் இல்லே. அந்த விளம்பரத்துக்காகப் போட்டோ அனுப்பச் சொன்னானே, அவன் பேரிலே தப்பு'' என்றான் ரவி.

''அவன் என்ன செய்தானுங்க ?''

''இந்தக் காலத்திலே பெண்ணைக் காட்டாமலே ஒருத்தியைக் கல்யாணம் பண்ணிக்கோன்னு சொன்னால் ஓர் இளைஞன் முகம்

எப்படி விளக்கெண்ணெய் குடித்த மாதிரி இருக்கும்.''

''நீங்க சொல்றது சரிங்க.... அதெல்லாம் பழங்காலம்.''

''நம்ம விளம்பரக் காதல்கூடப் பழங்கால மாடல்தான். நீங்க என்னே முன்னே பார்த்திங்களா ? நான் உங்களைப் பார்த்தேனு ? இவுர்னு இரண்டு பேரையும் ஒரு ஹோட்டலிலே அழைத்து வைத்து. 'நீங்கள் காதல் பண்ணுங்க. நாங்கள் அதைப் போட்டோ பிடித்துப் போடப் போறோம்'ன்னு சொன்னு எப்படி?' என்றான்.

''ஐயோ, மிஸ்டர் ரவி...... நீங்கள் காதல் பார்ட்டுக்கு லாயக்கில்லே.... ஹாஸ்யத்துக்குத்தான் லாயக்கு'' என்று சிரித்தாள். சிரித்தாள், அப்படிச் சிரித்தாள். ''விளம்பரக் காதலுக்குக் கூடப் பெண் பார்க்கணுமா ?... ஓ, மிஸ்டர் ரவி'' என்று குலுங்கக் குலுங்கச் சிரித்தாள்.

''நீங்கள்தானே நான் செய்த விளம்பரக் காதல் உயிருள்ளதாய் இல்லேன்னு சொன்னீங்க. இப்போ தேவனிடம் சொல்லி வேறு போட்டோ எடுக்கச் சொல்லுவோமா? என்ன சொல்றீங்க?'' என்று கேட்டுவிட்டு அவனைப் பார்த்தாள். நிச்சயமாகவே லஜ்ஜை அவள் முகத்தைச் சிவக்கச் செய்தது. அவளையும் அறியாமல் தலை தரையைப் பார்த்தது.

''வேண்டாங்க'' என்றான்.

''ஏன், தேவனிடம் சொன்னால் செய்வார். உங்களுக்கு எடுத்த போட்டோவில் ஏதோ குறை இருப்பது போல் படுகிறது. அது எதற்கு?'' என்றான் ரவி.

அவள் கை மேலோங்கி யிருந்தது.

''மறுபடி படம் எடுத்தாலும் நீங்கள் நன்கு நடித்து விடுவீர்கள். என்னால்தான் முடியாது என்று படுகிறது'' என்று தைரியத்தை வரவழைத்து நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்த்தாள் மேனகா. அப்பொழுது அவர்கள் ஒருவரையொருவர் பார்த்தபார்வைதான்'இலட்சிய தம்பதி'யின் அடையாளமாக இருக்க வேண்டியது.

''எங்கே யெல்லாமோ உங்களைத் தேடினேனே, மிஸ் மேனகா!'' என்று தேவன் பூசை வேளையில் கரடி போல் குறுக்கே வந்தான். வேதாளம் முருங்கை மரம் ஏறிக் கொண்டதைப் போல் மேனகாவின் குணமும் மாறியது.

''என்னைத் தேடுவானேன்? எனக்கு வழி தெரியாதா? இந்தக் காஷ்மீரத்துக்கு எவ்வளவு முறை வந்திருக்கிறேன்!'' என்று அவள் தன் பிரதாபத்தில் இறங்கினாள்.

''என் பொறுப்பை நான் செய்ய வேண்டாமா?'' என்றான் தேவன்.

''இதுவரையிலும் சரிவரச் செய்து வந்திருக்கிறீர்கள் என்று நற்சாட்சிப் பத்திரம் வேண்டுமானாலும் தருகிறோம். என்ன சொல்லுகிறீர்கள் ரவி?'' என்று அவனைப் பார்த்தாள் மேனகா.

தேவன் முகத்தைக் கடுத்துக் கொண்டதை அவள் கவனிக்கவில்லை. இவனைப் பார்த்தவுடன் மட்டும் அவளுக்கு ஏன் குரங்குக் குணம் வந்து விடுகிறது.? அதுவரையிலும் அவனுடன் எவ்வளவு நாசூக்காகவும் நகைச்சுவையுடனும் பேசினாள்! இதைப் பற்றி ஆராய்ச்சி செய்வானேன் என்று பட்டது. அவன் வேலையும் அன்றுடன் முடிவுற்றது. மறுநாள் விமானத்தில் பம்பாயை நோக்கிப் புறப்பட வேண்டியதுதான். அப்புறம் மேனகா எங்கேயோ? தேவன் எங்கேயோ? இதற்கெல்லாம் என்ன உறவு இருக்கப்போகிறது. விட்டுத் தள்ளு என்று தேற்றிக் கொண்டான்.

''இல்லே, நாளைக்குப் புறப்பட வேண்டுமே? உங்களுக்கு அவர் உதவி ஏதாவது தேவைப்படுமோ என்று தெரிந்து கொள்ளத்தான் உங்களைத் தேடியிருப்பார். என்ன மிஸ்டர் தேவன், நான் சொல்வது சரிதானே?'' என்று சமாதான நோக்கத்துடன் அவர்கள் இருவரையும் பார்த்தான். தேவன் இதை ஆமோதிப்பது போல் தலையசைத்தான்.

''நாளைக்குக் கிளம்பணும் இல்லையா?'' என்று மேனகா ரவியைப் பார்த்தாள்.

''என்ன, கிளம்பணுமேன்னு கவலைப்படற மாதிரி இருக்கு. நம்ம ஒப்பந்தம் அத்துடன் சரி'' என்று ரவி கிண்டலாய் ஒப்பந்தத்தை ஞாபகமூட்டினான்.

''ஒப்பந்தம் முடிந்து விடும் வாஸ்தவம். நினைவு நீடிக்குமே?'' என்றாள் மேனகா. தேவனுக்கு ஆச்சரியம் பிடிபடவில்லை. இவ்வளவு உணர்ச்சியுடன் ரவியுடன் விளையாடுகிறாளே என்று ரசித்தான்.

''எவ்வளவு நாட்கள் நீடிக்கும்? மற்றொரு வாழ்க்கைக் கட்டம் குறுக்கிடுகிற வரையில் தானே? அப்ப பழைய நினைவுகள் அழுந்திப் போய்ப் புதிய நினைவு தொடரும்'' என்று ரவி விளக்கம் கூறினான்.

''அப்படிக்கூட முடியுமா?'' என்றாள் மேனகா.

''நம்ம நினைவுன்னு சொல்றமே அது நூல் நிலையம் மாதிரி மிஸ் மேனகா. ஒரு புதுப் புத்தகம் வந்தால் அதை எடுத்துப் படிக்கணும்னு எல்லோரும் எடுத்துக்குவாங்க. அடுத்து வேறு நூல் விளம்பரம் பண்ணினவுடனேயே பழைய புத்தகம் யார் விரலும் படாமல் அலமாரியிலேயே தூசி சேர்ந்து தூங்கும். அதுமாதிரிதான் வாழ்க்கை நினைவுகளும்'' என்று தத்துவ ரீதியில் பேசினான்.

''இப்ப தெரிகிறது, உங்கள் சுய சொரூபம்' நான்தான் விளம்பரத்துக்காக உங்களுடன் சேர்ந்தவள். உங்களோடவே கூட இருந்து உங்கள் சௌகரியங்களைக் கண்காணித்து வந்த தேவன் அவர்களுக்கும் இதே கதி தான் போலிருக்கு'' என்று தேவனிடம் மனம் இறங்கினாள். இவள் போக்கே புதிராய் இருந்தது. இவ்வளவு நாட்களும் முறைத்துக் கொண்டு பேசியவள் திடீரென்று பாகாய் உருகிப் போகிறாள். கடல் ஆழத்தையும் அளந்துவிடலாம் என்று பெண்களைப் பற்றிச் சொல்லுவார்களே, அது ருசுவாயிற்று.

''நாம் பிரியப் போகிறோம் என்றபோதே உணர்ச்சிகள் எப்படிப் பின்னி இணைந்து கொள்கின்றன'' என்று தேவன் அவர் சார்பில் சற்று வேதாந்தத்தில் இறங்கினான்.

''இப்படியே பேசிப் போய்க் கொண்டிருந்தால் காஷாயம் வாங்கிக் கொள்ளும்

# இந்திய சர்க்கார் பிரசுரங்கள் வெளியீட்டுப் பிரிவு

**தமிழ் வெளியீடுகள் :**

| | | |
|---|---|---|
| காந்தி கதை | ... | 2-50 |
| ஜுவாலாமுகி (நாவல்) அனந்தகோபால சென்டே | ... | 3-00 |
| விஞ்ஞானத்தில் சில அம்சங்கள் - சி. வி. ராமன் | ... | 1-75 |
| வளம் தரும் திட்டங்கள் | ... | 0-80 |
| நல்ல பிரஜையின் இலட்சணங்கள் | ... | 1-25 |
| இந்திய வன விலங்குகள் - ஸ்ரீராம் சர்மா | ... | 4-00 |
| இந்தியாவின் கல்வித் துறைச் சீரமைப்பு - டாக்டர் ஜாகீர் ஹுசேன் | ... | 1-75 |
| கல்வி அல்லது நாகரிகத்தின் எதிர்காலம் - டாக்டர் ராதாகிருஷ்ணன் | ... | 1-25 |
| சுபிட்சப் பாதை - கே ஸ்ரீ சடகோபன் | ... | 1-00 |
| இந்தியா இன்றும் நாளையும் - ஜவஹர்லால் நேரு | ... | 0-75 |
| இந்திய அரசியல் அமைப்பு | ... | 1-50 |
| நாம் அறிந்த காந்திஜி | ... | 1-50 |
| ஆதிவாசிகள் | ... | 0-50 |
| இந்திய வரலாறு (பாலர் பதிப்பு) ஷீலா தர் | ... | 3-50 |
| பாரதப் பெரியார்கள் (முதல் பாகம்) | ... | 3-00 |
| இந்தியாவின் வீரப் புதல்வர்கள் | ... | 0-60 |
| ராதாகிருஷ்ணன் கண்ட நேரு | ... | 0-75 |
| நமது கொடி | ... | 1-00 |
| ஹிந்துச் சட்ட சீர்திருத்தம் | ... | 1-00 |
| வெளிநாட்டு கிராமியக் கதைகள் | ... | 0-75 |
| நமது தேசியச் சின்னம் | ... | 0-50 |
| பாரதப் பெரியார்கள் (இரண்டாம் பாகம்) | ... | 3-10 |
| மஹாத்மா காந்தியின் போதனைகள் - ஸ்ரீ யு. எஸ். மோஹன் ராவ் | ... | 1-50 |

## திட்டம்

யோஜனாவின் தமிழ்ப் பதிப்பு
( இரு வாரங்களுக்கொரு முறை பிரசுரம் )

நாட்டின் திட்ட வளர்ச்சி பற்றிய விஷயங்களையும் தென்னிந்திய மக்களுக்கு விசேஷ அக்கறையுள்ள பிரச்னைகளையும், திட்ட சாதனைகளையும் விளக்கியுரைக்கும் சிந்தனை ஏடு.

**தனி இதழ் - 25 காசு**

| | | |
|---|---|---|
| **ஆண்டுச் சந்தா** | ரூ. 5-00 | தபால் செலவு கிடையாது. |
| **இரண்டு ஆண்டு** | ரூ. 9-00 | |
| **மூன்று ஆண்டு** | ரூ. 12-00 | |

மூன்று ரூபாய் மதிப்புள்ளதும் அதற்கு மேற்பட்ட மதிப்புள்ளதுமான புத்தகங்கள், தபால்செலவு ஏதுமின்றி வி.பி.பி. மூலமும் அனுப்பி வைக்கப்படும்.

**புது டில்லி : பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், பாட்டியாலா ஹவுஸ்**
**சென்னை : சாஸ்திரி பவன், 35, ஹாடோஸ் ரோடு, நுங்கம்பாக்கம்.**

davp 71/151

நிலைக்கு வந்து விடுவோம். கிளம்புங்கள். கடைசியாக ஒரு முறை டால் ஏரியில் படகு சவாரி செய்துவிட்டு வருவோம். அப்பதான் நாம் திரும்பி விளம்பர உலகத்துக்கு வர முடியும்'' என்று ரவி எழுந்தான்.

படகு டால் ஏரியில் மிதந்து கொண்டு போயிற்று. ரவியும் மேனகாவும் எதிர் எதிராய் உட்கார்ந்து கொண்டிருந்தனர். தேவனுக்கு ரொம்பவும் உற்சாகம். பயணம் முடியும் சமயம் மேனகாவிருல் அவன் உள்ளம் வருத்தப்படக் காரணமில்லாதபடி வெகு மென்மையாய் நடந்து கொண்டாள்.

சுபம், சுபம்னு கடைசியா எழுதுவது போல் விளம்பரக் காதல் சுபமாக முடிந்தது. ஒரே வித்தியாசம். வாழ்க்கையில் தம்பதிகள் கூடினால் விளம்பரத்தில் பிரிந்தனர். பம்பாயில் விமான நிலையத்தில் லட்சியத் தம்பதிகள் நின்று கொண்டிருந்தனர். இருபத்தைந்து நாட்களுக்கு முன் மீனம்பாக்கம் விமான நிலையத்தின் கண்காட்சி ரவிக்கு ஞாபகம் வந்தது.

''என்ன யோசிக்கிறீர்கள் ?'' என்று கேட்டாள் மேனகா.

''நான் மதராசை விட்டுக் கிளம்பின தினத்தை நினைத்தேன்.'' என்றான்.

''நினைவு நூலகத்தில் பழைய புத்தகத்தில் தூசு தட்டுகிறீர்களா?'' என்று காஷ்மீரில் அவன் சொன்ன வார்த்தைகளை நினைவுபடுத்திச் சுருத்தலைபோல் திரும்பி அவனை ஓரக் கண்ணால் பார்த்தாள். ரவியும் அதைக் கவனித்தான்.

## 7

இரவு மணி பதினொன்று. லாவண்யா புத்தகத்தை மடித்து வைத்து, வாய்க்கு முன் உள்ளங் கையை வைத்து, 'ஹாவ்' என்று கொட்டாவி விட்டு, கைவிரல்களைப் பின்கழுத்தில் வைத்துப் பின்னிச் சோம்பல் முறித்து, மேசை விளக்கின் பொத்தானை அழுத்தி, விளக்கை அணைத்து, கட்டிலில் கட்டையை நீட்டினாள். அரை மணி யாயிற்று. பாதி நித்திரை.

''அம்மா, அம்மா'' என்ற உரத்த குரல் கேட்டது. டாக்ஸி மீட்டரின் கொடி திருப்பப்படும் 'டிங் டிங்' என்னும் ஒலி. ''அம்மா, அம்மா'' என்று மறுபடியும் குரல்.

லாவண்யா பாதித் தூக்கத்தில் ஜன்னல் வழியாகப் பார்த்தாள். ''அம்மா, ரவி!'' என்று உரக்கக் கத்திக் கொண்டே மாடிப் படியைத் தடதடவென்று இறங்கி, வாசல் கேட்டின் பூட்டைத் திறந்து விட்டாள். தாயாரும் அதற்குள் எழுந்து வந்தாள்.

''இப்ப எங்கடா திடு திப்பினு வந்தே?'' என்று பையனை வரவேற்றாள்.

''அதை ஏன் கேக்கறே போ! விமானத்திலே கிளம்பின உடனே ஏதோ கோளாறு. உனக்குத் தந்தி கொடுத்துத் தெரியப்படுத்தலாம்னு, எப்ப வர்றேன்னு சொல்றது? அப்புறம் வேறே விமானத்திலே வந்து சேர்ந்தோம்'' என்று விஷயத்தைச் சுருங்கச் சொன்னான்.

''இப்ப ரொம்பக் கீழே ஒரு விமானம் வீட்டையே ஆட்டி வைக்கும்படி சப்தம் போட்டுண்டு போச்சே, அதுவா? நானும்


''டைரக்டர் சார்! எங்க நர்ஸிங் ஹோமில் இவர் ஒருத்தர்தான் கட்டுடல் கொண்ட இளம் காளை!''

யோசிச்சேன். தினம் இந்த மணிக்கு ஒரு விமானம் போகாதேன்னு. அதில்தான் வந்தயா?'' என்று லாவண்யா விமானப் போக்கு வரத்து அட்டவணை தெரிந்தவள் போல் கேட்டாள். கையிலிருந்த புது ஸூட்கேஸை வாங்கிக் கொண்டாள். ரவி நாற்காலியில் உட்கார்ந்து பூட்ஸைக் கழற்றிக் கொண்டே, ''சாதம் இருக்காம்மா? ரொம்பப் பசி'' என்றான்.

''நீ வரப்போறேன்னு எனக்கென்னடா தெரியும்? இப்பத்தான் எல்லாவற்றையும் ஒழித்துப் போட்டுச் சாதத்தில் தண்ணீர் விட்டு வைத்தேன்'' என்றாள்.

''மோர் இருக்கோல்லியோ, அம்மா. அதைத் தண்ணீர் சாதத்தில் விட்டுக் கொஞ்சம் கொடம்மா'' என்று கேட்டான்.

''ஏண்டா, கொஞ்சம் உப்புமா வேணு செய்யட்டுமா?'' என்றாள். ரவி கலகலவென்று சிரித்தான்.

''நான் கேட்டதிலே சிரிக்க என்னடா இருக்கு?'' என்று தாயார் அசந்து போனாள்.

''அம்மா, பழைய பேப்பர் கிழித்ததைக் கண்டுபிடித்த தினம் லாவண்யா கோவத்திலே வேண்டாமென்ற உப்புமாவை லபக், லபக்னு நான் சாப்பிட்டது ஞாபகம் வந்தது'' என்று தன் பிரயாணத்தின் கடைகால் போன்ற சம்பவத்தை நினைவுபடுத்தினான்.

''அவள் கோபத்துக்கு ஒரு வரம்பு உண்டா? இன்னிக்குக் காத்தாலே நீ இருந்திருக்கணும். ஒரு நாடகம் ஆடினா பார்...'' என்று பெண்ணின் குணத்தைத் தெரியப்படுத்தினாள்.

''என்னைச் சொல்லத் தெரிந்தது. வந்து பத்து நிமிஷம் ஆகப் போறது. ஏண்டா ஒரு வரி கடுதாசி போடலைன்னு அவனைக் கேட்க உனக்கு வாய் வரதா பார்த்தயா? எடுத்ததற்கெல்லாம் லாவண்யா இதைச் செய்தாள், அதைச் செய்தாள்னு சொல்லத் தெரியுது'' என்று தன் குறையைப் பகிரங்கமாகச் சொல்லிக் காட்டினாள். தாயார் கிண்ணத்தில் தண்ணீர் சாதத்தில் மோரை விட்டுப் பிசைந்து கொண்டே குடும்பத்தின்

உண்மைச் சந்தோஷ நிலையை அனுபவித்துக் கொண்டிருந்தான்.

"ரவி! அது கிடக்கட்டும். எனக்கென்னடா வாங்கிண்டு வந்தே?" என்று ஸூட்கேஸைத் திறந்தாள். அவன் துணி மணிகளை ஒவ்வொன்றாய் எடுத்துப் பார்த்தாள்.

"இதென்னடா, ஒரே கனம் கனக்கிறது! டேப் ரெகார்டரா?" என்று கனத்த சாமானைக் கையில் எடுத்தாள். நன்றாய் 'பாக்' செய்யப்பட்டிருந்தது.

"பிரித்துத்தான் பாரேன்" என்றான். பத்திரமாகப் பிரித்தவள், 'ஹோ, ஹோ' என்று பலக்கச் சிரித்தாள். "இதுக்காடா இவ்வளவு பத்திரம்?" என்று விலாவைப் பிடித்துக் கொண்டு சிரித்தாள்.

"ராத்திரி மணி என்ன? அக்கம் பக்கத்திலே இருக்கிறவா என்ன நினைப்பா! இப்படி ராட்சஸச் சிரிப்பா? அப்படி என்ன அதிசயத்தைக் கண்டுட்டே?" என்று தாயார் கடிந்து கொண்டாள்.

"அம்மா, இதைப் பாரேன்" என்று தாயாரை அழைத்துக் காட்டினாள். டெல்லியிலே பெயர் போன சப்பாத்திக் கல். அம்மாவுக்குப் பெருமை ஒரு பக்கம். சிரிப்பு இன்னொரு பக்கம்.

"இந்த சப்பாத்திக்கல்லையா விமானத்திலே தூக்கிக் கட்டிண்டு வந்தே? இதை எங்கேடா பிடிச்சே?" என்றாள்.

"இந்த மாதிரி சப்பாத்திக் கல் வேணும்னு நீ எவ்வளவு ஆசைப்பட்டாய்! டெல்லியிலேந்து வரவா யார் இருக்கான்னு எவ்வளவு குறைப்பட்டாய். அதனாலேதான் ஞாபகமா வாங்கி வைச்சுண்டேன்" என்று வீட்டு விஷயத்தில் தாயாருக்கு வேண்டிய சாமான்கள் எவை என்பதை எவ்வளவு நுட்பமாய்க் கவனித்து வைத்திருக்கிறான் என்பதை ருசுப்படுத்தினான். அப்பொழுது தாயாரின் முக விலாசத்தைப் பார்க்க வேண்டுமே! "ரவி, உன்னை என்னமோன்னு நினைச்சேண்டா" என்று தாயார் வாய்விட்டுச் சொன்னாள்.

"சப்பாத்திக் கல்லும் வந்தாய்விட்டது. இனிமேல் வாரத்திலே ஐந்து நாட்கள் கல்லூரிக்கு எனக்குச் சப்பாத்திதான் டிபனாயிருக்கும்" என்று லாவண்யா அவள் பயத்தைத் தெரிவித்தாள்.

"மணி ஏகமாய் ஆகிறது. போய்ப் படுக்கலாம். பாக்கியை நாளைக்குப் பேசிக்கலாம்" என்று சொன்னாள். ஒவ்வொருவரின் மன நிலையும் சந்தோஷத்தின் உச்ச கட்டத்தில் இருந்தது. தலையணையில் தலையைச் சாய்த்தது தான், ஆழ்ந்த துயிலில் அமிழ்ந்தனர். எந்த நிலையும் மேல் படியை எட்டிவிட்டால், இறக்கம்தான் அடுத்தபடி.

## 8

"இதென்னடா கூத்து? எவளையோ கட்டிப் புரண்டுண்டு? இதுக்குப் போறேன்னு தெரிஞ்சிருந்தால் வேண்டாம்னு திருத்தி விருப்பேனே" என்று காமாட்சியம்மாள் இரைந்தாள். லாவண்யாவின் கையில் அன்று ரிஜிஸ்தர் தபாலில் பம்பாய் கம்பெனியிலிருந்து வந்த போட்டோ பிரதிகள் இருந்தன. மினிஸ்கர்ட்டில் மேனகா இடையை அணைத்துத் தலையை வருடி விடும் படத்தின் பிரதி தாயார் கையில் இருந்தது.

"ஏண்டா! நீ ஏதோ விளம்பரத்துக்குப் போறேன்னு சொல்லி யாரோ பெண்ணோட கூத்தடிக்கத்தான் போனயா? அவள் மோகத்தில்தான் போனதிலிருந்து கடிதாக போடணும்னுகூடத் தோணலியா? வெட்கம் இல்லாமல் இதை போட்டோ வேறே எடுத்துண்டு... சீச்சீ..." அவள் கையிலிருந்த படத்தைச் சுக்கு நூறாகக் கிழித்து எறிந்தாள்.

"ஏன் அம்மா. நீ இதைக் கிழித்துவிட்டால் சரியாகிப் போச்சா? நாளைக்கே எல்லாப் பத்திரிகைகளிலும் இந்தப் படங்களைப் பெரிது பெரிதாய்ப் பிரசுரிக்கப் போகிறார்களே அப்ப என்ன செய்வாய்?" என்றாள் லாவண்யா மற்றப் புகைப்படங்களைப் பார்த்துக்கொண்டே.

"தாயாரை ஏமாற்ற உனக்கு வெட்கமாக இல்லை? இந்தக் கூத்து உன்னோட போச்சா?" என்றாள் காமாட்சி.

ரவி எதற்கும் பதில் சொல்லவில்லை. தாயாருக்கு என்ன சமாதானம்சொல்ல இருக்கிறது? பழைய பேப்பர்களைக் கத்திரித்தபோது இந்த மாதிரி சிக்கல்கள் வரும் என்று அவன் எதிர் பார்த்தானா? அவன் முகம் பத்திரிகையில் வரவேண்டும். அதைப் பார்த்து அவன் சிநேகிதர்கள் புகழ வேண்டும் என்று சிறுபிள்ளைத்தன ஆசை. அதிலிருந்து பெரிய பெரிய குடும்பப் பிரச்னைகள் எழும் என்று சிந்தித்துக்கூடப் பார்க்கவில்லை.

"என்னம்மா குடி முழுகிப் போச்சு? தினம் பத்திரிகைகளில் இம்மாதிரி எவ்வளவு விளம்பரங்கள் வரலை?" என்று கொஞ்சம் ரோசத்தில் பதில் சொன்னான் ரவி.

"இது உன்னுடன் போச்சா? கல்யாணத்துக்கு வீட்டிலே ஒரு பெண் இருக்குன்னு ஞாபகம் இருக்குதா இல்லையா? உன் அழகான விளம்பரப் படத்தைப் பார்த்துவிட்டு எந்தக் கண்ணியமானவன் இவளைக் கல்யாணம் பண்ணிக்கொள்கிறேன் என்று வருவான். என்ன வாய் அடைத்துப் போச்சு?" என்று காமாட்சி லாவண்யாவின் கல்யாண விஷயத்தை அவன் புகைப்பட விளம்பரத்துடன் இணைத்தாள். அது முற்றிலும் வாஸ்தவம் தான் என்று பட்டது ரவிக்கு. இது ஒரு புதிய சிக்கல்!

"என்னாலே இனிமேலே இந்த ஊரிலே கௌரவத்தோடு இருக்க முடியாது. தலையை வெளியில் காட்ட முடியாது. எனக்குத் தெரியாது. அடுத்த மாதம் ஒண்ணாம் தேதி வேறு ஊருக்குக் குடும்பத்தோடு போய்விடணும். நான் எங்கேயாவது தலை மறைவாய் இருக்கணும். இந்த மாதிரிப் பிள்ளையைப் பெற்றதற்கு இதுவும் வேணும், இன்னமும் வேணும்" என்று தாயார் வார்த்தைக்கு வார்த்தை சூடு ஏற்றி, வானமே இடிந்து அவன் குடும்பத்தின் மேல் விழுவது போல் கதறினாள்.

"அம்மா! ஏதோ தப்பு நடந்து போச்சு. நான் வேணும்னு உன்னைத் தலைகுனிய வைக்கணும்னு செய்தேன்? எனக்கு மாத்திரம் குடும்பப் பொறுப்புத் தெரியாதா? இப்ப என்னை என்ன பண்ணச் சொல்றே?" என்றான் ரவி சற்று அடிபணிந்து.

# ஒரு மாதம் முன்பு வற்றலாக இருந்தேன் மதமதவென்று


















## சக்தி செறிந்த தசைக்கட்டு அமைத்துக்கொள்வீர், நித்தமும் 5 நிமிடங்களே போதும் அதற்கு!

## இரு வாரங்களிலே திடமான பலன்கள், இல்லையேல் பணம்தர வேண்டாம்

நிரூபணம் பெற்ற உண்மை! வனிதையர் மெச்சும் வலுவான ஆண்மையுரம் தசைதோறும் நிறைவேறும், புல்வொர்க்கர் உதவியால்--திண்டுதிண்டான காமுண்டா: திடகாத்திரமான மார்பு; திண்ணிய தோள்கள்; வார்ப்பிரும்பு போன்ற, வடிவான வயிறு; வலிமைத் தூண்களைப் போன்ற கால்கள்--இவ்வளவுக்கும் அன்றாடம் ஐந்தே நிமிடங்கள் பயிற்சி. சோர்வுறாத, எளிய புல்வொர்க்கர் பயிற்சியை விரைந்து பத்து நாட்கள் செய்துபாரீர், பூரிக்கவைக்கும் அதிசயப் பலன்களை கண்ணாரக் காணவும் உணரவும் துவங்குவீர்கள், இல்லையெனில் பணம் செலுத்தவே தேவையில்லை: முழு விவரமறிய இன்றே இக் கூப்பனை அனுப்புக. யாதொரு நிர்ப்பந்தமும் இல்லை.

© Mail Order Sales Pvt. Ltd, 15 Mathew Road, Near Opera House, Bombay

உங்களுக்கு 15 வயதோ, 25, 40 அல்லது 60 வயதோ, புல்வொர்க்கர் உங்களுக்கு ஒரு செம்மேனியின் ஆற்றலைத் தரும்.

"என் எடை 5.5 கிலோ ஏறியது, மார்பு 5.5 செ.மீ, மேற்கரம் 2.5 செ.மீ, தொடைகள் 5 செ.மீ, மணிக்கட்டுகள் 3 செ.மீ பெருகிவிட்டன ஒரே மாதத்தில். (எஸ். ஏ., புது டெல்லி). எல்லாவற்றையும் பார்த்துவிட்டேன். எதனிலும் சிறந்தது புல்வொர்க்கர். (கே. ஆர். வி., ஸ்ரீனிவாசன், ஆ. வீ). என் வாழ்வில் தக்க தருணத்தில் உதவியதற்கு நன்றி.

வனிதையர் மெச்சும் சக்திசெறிந்த வல்லுடலை, நித்தமும் ஐந்தே நிமிடங்களில் அமைத்திட உத்தரவாதமான அற்புத புல்வொர்க்கர் பயிற்சித் திட்டம் பற்றிய முழு விவரத்தையும் படங்களோடு எனக்கு விரைந்து அனுப்புக.

KL 4

57-T-1

பெயர் ..........................................

முகவரி .......................................... வயது ..........

BULLWORKER SERVICE 15 Mathew Road, Bombay 4

தயவுசெய்து எமது முகவரியை ஆங்கிலத்தில் எழுதுக.

''இப்பக் கேக்கிறியே, அந்தப் புத்தி புகைப் படம் அனுப்பிக்கிறதுக்கு முன் எங்கே போச்சு? மறைச்சு, மறைச்சு அனுப்பினயே, கோயில் கதவைச் சாத்திப் பூட்ற மாதிரி அறைக்கு ராட்சஸப் பூட்டு வாங்கிப் பூட்டி னயே?'' என்று பழங் கதையை ஆரம்பித் தான். பெண் பக்கம் திரும்பினன். அவள்பிரதி களை ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். ''என்னடி அப்படியே பார்த்துப் பார்த்து மோகித்துப் போய்ட்டே! நீயும் வேறு ஏதாவது ஒரு கம்பெனிக்குப் படம் அனுப்பி எவனாவது ஒருவனோடு கட்டிக் குலாவுகிறது தானே?'' என்று அவன் தன் பிரங்கியை லாவண்யாவின் பக்கம் திருப்பினன்.

''யார் மேலேயோ கோபித்துக் கொண்டு என் மேலே பாயறயே. நான் என்னம்மா செய்தேன்? இந்த வீட்டிலே எது தவறும் நடந்தாலும் லாவண்யா தான் வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டியது'' என்று சிணுங்கினள்.

''ஏன்டா ரவி! வந்து நாலைந்து நாட்க ளாகப் போகிறதே, இப்படி உட்கார்ந்து கொண்டிருந்தால், வேலை தானே தேடிண்டு வருமா? விளம்பர முகத்தைப் பார்த்து வெற் றிலை, பாக்கு, பழம், தேங்காய் வைத்துக் கூப்பிடுவான்னு உத்தேசமா?'' என்று இன் டல் தோய்ந்த வார்த்தைகளை வீசினன்.

''போறேன். அதுக்கும் சிபாரிசு வாங் கிண்டுதான் வந்திருக்கேன்'' என்று பவ்ய மாய்ப் பதில் சொன்னன்.

வீட்டின் சூழ்நிலை தெரிந்து விட்டது. அவ னவன் வாழ்க்கை மட்டத்தை எதிர்த்துப் புதிய பாதையை விரும்பி நுழைந்தால் இம் மாதிரி இன்னல்கள் சூழ்ந்து கொண்டு விடு கின்றன. அப்படிச் சில பேர்கள் இல்லையா என்று தர்க்க ரீதியில் வாதாடலாம். எல்லா வித வாழ்க்கையும் எல்லோருக்குமே ஒத்துக் கொள்வதில்லையே!

லாவண்யாவை அவள் சிநேகிதிகள் துளைத் துக்கொண்டிருந்தனர். கல்லூரி மாணவி களின் உலகம் கனவு உலகமாயிற்றே.

''ஏன்டி லாவண்யா! உன் அண்ணன்தான் திரும்பி வந்துவிட்டானே. என்றைக்கடி விளம்பரம் வர்றதாம்?'' என்று கேட்டாள் ஒருத்தி.

''ஒன்றும் சொல்லவில்லையடி. அதைப் பற்றிக் கம்பெனி எழுதித் தெரிவிக்கும் என்று சொன்னன். இதுவரையிலும் ஒன்றும் வர வில்லை'' என்று லாவண்யா மழுப்பினள்.

''விளம்பரப் போட்டோ பிரதிகள் வந் திருக்குமே அதையாவது பார்க்கலாமே. இன்று நாங்கள் வரட்டுமா?'' என்று மற் றொருத்தி கேட்டாள். படத்தைப் பார்த்துத் தாயார் சீறியது லாவண்யாவுக்கு மறக்குமா? இவர்களை வீட்டுக்கு அழைத்து வந்து படங் களைக் காட்டத் தைரியமேது?

''அதுவும் இன்னும் வந்தபாடில்லை. வந் தால் சொல்லாமல் இருப்பேனா?'' என்று சமாளித்துக் கொண்டாள்.

பம்பாய் விளம்பர இலாகா சிப்பந்தியான தேவன் சொன்னது போல் மதராஸ் கிளை மானேஜரை ரவி போய்ப் பார்த்தான்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

என்னுடைய மகன் எதிரில் இருந்த டம்ளரை விசிறியால் விசிறிக் கொண்டிருந்தான். 'என்னடா வெந்நீரா?' என்று கேட்டேன் நான். அவன் சொன் ஞன்: 'இல்லேப்பா, உள்ளே ஐஸ் வாட்டர் தான் வெச்சிருக்கேன். ஆனாலும் பாவம், டம்ளருக்கு வேர்த்துக் கொட்டுறது!'

- கன்னிகா

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''என்ன மிஸ்டர் ரவி! பயணம் எப்படி இருந்தது? ஏற்பாடுகள் எல்லாம் திருப்தி தானா?'' என்று குசலம் விசாரித்தார்.

''ரொம்பவும் திருப்திதான். மிஸ்டர் தேவன்கூட உங்களை விசாரித்ததாகச் சொல் லச் சொன்னர்'' என்றான் ரவி.

''அவர்தான் உங்களுடன் இருந்ததா? வெரி குட்... எனக்கு அவர் இன்னும் அதைப் பற்றி எழுதவில்லை. பத்திரிகைகளுக் கெல் லாம் விளம்பர ஏற்பாடுகள் செய்ய வேண்டிய எவ்வளவோ தொல்லைகள் இருக்கின்றனவே. நீங்கள் ஜாம் ஜாம் என்று படம் பிடித்து, காஷ்மீர் சுற்றிவிட்டு வந்து விட்டீர்கள். அதன் செலவுக் கணக்குகள், பிரசுர ஜோலிகள் எவ்வளவு இல்லை? எல்லாம் தேவன்தானே முடித்து வைக்க வேண்டும்?'' என்று தமா ஷாய்ப் பேசினர்.

''ஜாமும் இல்லை, ஜூமும் இல்லை ஸார்! இப்ப உங்களைப் பார்க்க வந்தது என் சொந்த விஷயத்தைப் பற்றி. பம்பாய் போன போது வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டுப் போனதுதான் உங்களுக்குத் தெரியுமே'' என்றான் ரவி.

''ஆமாம், வேறே வழியே இல்லையே'' என்றார் மானேஜர்.

''மிஸ்டர் தேவன் என் வேலை விஷயத்தை உங்களிடம் ஒப்படைத்து விடும்படி சொன் ஞர். நீங்கள்தான் எனக்கு ஏதாவது செய்ய வேண்டும்!'' என்று பாக்கெட்டிலிருந்து தேவனிடமிருந்து வாங்கி வந்த சிபாரிசுக் கடிதத்தை அவரிடம் நீட்டினன்.

''விளம்பரம் வரட்டுமே. அதைப் பயன் படுத்திக் கொண்டு ஏதாவது செய்யலாமே?'' என்றார்.

''அதில்லை சார். இந்த விஷயத்தில் என் தாயார் ரொம்பவும் கோபமாக இருக்கிறர். விளம்பரமும் வந்து விட்டால் அவள் எரிமலை யாகி விடுவாள். அதற்குள் ஏதாவது வேலை யில் நுழைந்து கொண்டால்தான் ஸார், நான் வீட்டில் இருக்க முடியும்'' என்று அவன் தன் பரிதாப நிலையை விண்டு விரித்துச் சொன்னன்.

''நீ விளம்பரத்துக்காக முன்வந்தது உன் தாயாருக்கு விருப்பமில்லையா?''

''இந்த மாதிரி ஒருத்தியுடன் சேர்ந்து விளம்பரமாக வரும் என்று அவள் எதிர் பார்க்கவில்லை. விளம்பர போட்டோக்கள் நேற்றுத் தபாலில் வந்தன. அதைப் பார்த்ததி லிருந்து அவள் என்னிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. என் தங்கை கல்யாணம் இதனல் நடக்காமல் போய்விடும் என்று கவலைப் படுகிறாள்'' என்று சொன்னன்.

''நடந்தது நடந்து விட்டது. அவன் சொல்லுவதில் நியாயம் இருக்கிறது. சரி.

என் அக்கா புருஷன் புதிதாய் ஏதோ ஏஜென்ஸி எடுத்திருக்கிறார். நல்ல விற்பனையாளர் வேண்டும் என்றார். நான் கடிதம் எழுதித் தருகிறேன். அவரைப் போய்ப் பார். நானும் டெலிபோனில் அவரிடம் பேசுகிறேன்'' என்று கடிதம் எழுதிக்கொடுத்தார்.

அன்றிரவே சொன்ன விலாசத்துக்குப் போனான். கதவைத் தட்டினான். ஷோபா கதவைத் திறந்தாள். அப்படியே ஸ்தம்பித்து இருவரும் நின்று விட்டனர்.

''யாரடி?'' என்று ஷோபாவின் தாயார் கேட்டுக் கொண்டே வந்தாள்.

''அப்பாவைப் பார்க்க வந்திருக்கிறார்.. இவர்தான் அம்மா அன்னிக்கு நம்ம வீட்டுக்கு வந்திருந்தாரே லாவண்யான்னு, அவள் அண்ணா. உட்காருங்கள். அப்பா வரும் சமயம்தான்'' என்று சொல்லி உட்காரவைத்தாள். ஷோபாவின் தாயார் குசலம் விசாரிக்க முற்பட்டாள். அதற்குள் ஷோபாவின் தகப்பனாரும் வந்தார். கடிதத்தைக் கொடுத்தான். கடிதத்தைப் படித்தார். டெலிபோன் மணியும் அடித்தது. இவனைப் பற்றிய சிபாரிசுதான்.

''விளம்பரத்துக்காகப் பரிசு தட்டினது நீதானா? உங்க தாயாருக்கு ரொம்பவும் கோபமாமே? இப்பத்தான் டெலிபோனில் சொன்னான்'' என்று சிரித்தார்.

''ஏதோ தெரியாமல் நடந்து விட்டது ஸார். இவ்வளவு குழப்பங்கள் எழும்பும் என்று நான் எதிர்பார்க்கவில்லை'' என்று ஒப்புக் கொண்டான்.

''ரொம்ப சம்பளம் கொடுக்க முடியாது. ஒரு வருஷத்துக்குத்தான் மாதம் ஆயிரம் வருமாமே? நான் கொடுப்பதை ஏற்று வேலையைக் கவனி. மேலே பார்க்கலாம்'' என்று தைரியமூட்டி அனுப்பினார்.

ஷோபாவின் தாயாருக்குப் பெண் படைத்தவர்கள் உள்ளத்தில் எழும் ஆசை தலை தூக்கிற்று.

''பையன் கம்பீரமாக இருக்கிறான். ஷோபாவுக்குப் பார்க்கலாமே?''

''விளம்பரப் போட்டியில் பரிசு பெற்றவன் மீனு'' என்றார்.

''நம்ம சீனுதான் சிபாரிசு செய்திருக்கிறான். அவனையே விட்டு மேலே நடக்கவேண்டியதைச் செய்யச் சொல்லலாம்'' என்று டெலிபோன் நம்பர்களைச் சுழற்றிச் சீனுவுடன் பேசினாள்.

ரவியின் தாயாருக்கு விளம்பரம் வருவதற்கு முன் அவனுக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைத்துவிட வேண்டும் என்ற அவா. எப்ப மினி ஆடை அணிந்தவளுடன் உறவாடினானோ, மனம் அந்த இச்சையிலேயே தான் போகும் என்று அவள் எண்ணம். ஷோபாவின் வீட்டாரிடமிருந்து வந்த கோரிக்கையைத் துள்ளிக் குதித்து வரவேற்றாள். ரவிக்கு ஆட்சேபனை செய்யக் காரணமில்லை. லாவண்யா இரண்டுகைகளினாலும் வரவேற்றாள். ஹாண்ட் பாக்கில் அவன் படத்தை வைத்துப் பூசித்த பெண்ணாயிற்றே ஷோபா!

பம்பாய்க் கம்பெனிக்கு ரவி–ஷோபா திருமண அழைப்பிதழ் போயிற்று. திருமண தினத்தன்று வாழ்த்துக்கள் கம்பெனி சார்பிலும் தேவன் சார்பிலும் வந்தன. மரியாதைக்காக நன்றி கூறி அவன் மணப் போட்டோவின் பிரதியைக் கம்பெனிக்கு அனுப்பி வைத்தான். அதைத் தொடர்ந்து அவன் விளம்பரப் படங்கள் என்று பத்திரிகையில் எப்பொழுது வரும் என்று கேட்டிருந்தான்.

பம்பாயிலிருந்து வந்த பதில் தூக்கி வாரிப் போட்டது. அவனோடு சேர்ந்து நின்று விளம்பரப் போட்டோக்கள் எடுத்துக் கொண்டவள் ஒப்பந்தத்தை மீறி மற்றொரு கம்பெனிக்குப் புகைப்படம் தந்து பிரசுரமும் ஆகிவிட்டபடியால் பம்பாய் கம்பெனியார் வழக்குத் தொடர்ந்து அவளிடமிருந்து அதற்காகச் செலவழித்த பணத்தை மீட்டுக் கொண்டனர் என்றும், அதனால் ரவியின் விளம்பரப் படங்களை உபயோகப்படுத்த முடியாது என்றும், ரவிக்கு வாழ்த்துக்களுடன் அவன் புது மனைவியுடன் காஷ்மீர் தேன் நிலவுக்காக அவர்கள் செலவில் ஏற்பாடு செய்வதாயும், விருப்பப்பட்டால் ஷோபாவுடன் 'இலட்சியத் தம்பதி' பட்டத்தைப் பெற்று விளம்பரப் படங்கள் எடுக்க அனுமதி உண்டா என்றும், ஆனால் ஷோபா அவன் கைப்பிடித்த மனைவி என்பதால் மாதம் ஆயிரம் ரூபாய் அவளுக்கென்று தனியாய்க் கொடுக்க முடியாதென்றும் விவரமாகக் கடிதம் வந்தது. இந்த விஷயத்தைத் தாயாருடன் கலந்து ஆலோசித்தான்.

''அந்தத் தளுக்குக்காரி படம் வராதா... அப்பா! தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போச்சு'' என்று பெருமூச்சு விட்டாள் அன்னை.

''விளம்பரத்தைப் பற்றிக் கேட்டிருக்கிறார்களே அம்மா. அதற்கு என்ன சொல்ல?'' இந்த முறை தாயாரைக் கலந்தாலோசிக்காமல் எதுவும் செய்வதில்லை என்று கங்கணம் கட்டிக் கொண்டான்.

''ஸ்கூட்டரிலேயும், பீச்சிலேயும், ஸினிமாவிலேயும் எல்லாரும் கட்டிக் குலாவல்லியா! நீ போயேன். அதிலென்ன? எதற்கும் ஒரு வார்த்தை ஷோபா அப்பா, அம்மாவையும் கேட்டுடு'' என்று தாயார் சம்மதம் தெரிவித்தாள்.

காரவல் விமானம் மீனம்பாக்கத்திலிருந்து கிளம்பிப் பம்பாயை நோக்கிப் பறந்தது. ரவி–ஷோபா ஜோடியைக் காமாட்சி யம்மாள் லாவண்யாவுடன் வழியனுப்பிவிட்டு வீட்டுக்கு வந்தாள். அன்று பேப்பர்காரன் எடுத்துக் கொள்ளாமல் சென்ற பழைய பேப்பர்க் கட்டு அப்படியே தூசு படிந்து கிடந்தது. தாயார் படி ஏறி ரவியின் அறைக்குப் போனாள். ''கோவில் பூட்டு'' என்று கோபத்தில் விசிறிய இரும்புப் பூட்டு ஒரு மூலையில் இருந்தது. அதை எடுத்து அலமாரியில் வைக்கலாம் என்று திறந்தாள். ரவி கத்திரித்து வைத்திருந்த பத்திரிகைத் துண்டுகள் பறந்து தரையில் சிதறின.

''லாவண்யா!'' என்று அன்புடன் அழைத்தாள். எவர்சில்வர் தட்டிலிருந்து சப்பாத்தியை விண்டு வாயில் போட்டுக் கொண்டே ''என்னம்மா?'' என்று ரவியின் அறை வாசலில் வந்து நின்றாள் லாவண்யா.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

# BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

# GRASIM STAPLE FIBRE

from to-day at

## AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon